ஸ்ரீ:



ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# ஆயன் அன்றோதிய வாக்கு

## (ஸ்ரீகீ$_3$தா ஸாரம்)



க்ருஷ்ண ப்ரணாமோ ந புநர்ப்ப$_4$வாய
ஸ்ரீ பார்த்தஸாரதி - திருவல்லிக்கேணி

ஆசிரியர் :

தேசூர் நல்லான் சக்ரவர்த்தி **ஸ்ரீவத்ஸாங்கன்**

**பிலவ ௵ ஐப்பசி *மீ* ஹஸ்தம் - நவம்பர்** 03, 2021 **- புதன்கிழமை**

ஸ்ரீ:



ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# ஆயன் அன்றோதிய வாக்கு

## (ஸ்ரீகீ$_3$தா ஸாரம்)


ஆசிரியர்

தேசூர் நல்லான் சக்ரவர்த்தி **ஸ்ரீவத்ஸாங்கன்**



**பிலவ ஆ ஐப்பசி மீ ஹஸ்தம்**

**நவம்பர் 03, 2021 - புதன்கிழமை**

**மூகம் கரோதி வாசாலம் பங்கு$_3$ம் லங்க$_4$யதே கி$_3$ரிம்|**
**யத் க்ருபா தமஹம் வந்தே$_3$ பரமாநந்த$_3$ மாத$_4$வம்||**

(எவருடைய கருணையால் ஊமையும் பேசும் திறன் அடைகிறானோ, ஊனமுற்றவனும் மலை ஏறும் திறனுடையவனாகிறானோ அந்த பரமானந்தம் தரும் மாதவனை நான் வணங்குகிறேன்.)

ஆர் என் ஆர் பிரிண்டர்ஸ் & பப்ளிஷர்ஸ்
8, தாண்டவராயன் தெரு, திருவல்லிக்கேணி, சென்னை - 600 005.
போன் : 044 - 2844 7071 / 2844 1856

ஸ்ரீ:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# முன்னுரை

'வேத$_3$ாச்ச$_2$ாஸ்த்ரம் பரம் நாஸ்தி' என்று வேதத்தை பரம ப்ரமாணமாகக் கொள்கிறார்கள் வைதி$_3$கர்கள். வேதத்தில், பூர்வபாகமான கர்மகாண்டம் பகவானுக்குத் திருவாராதனமாய் அமைந்துள்ள கர்மங்களைப் பற்றியே பேசுபவை. உத்தரபாகமான வேதாந்தமோ, ப்ரஹ்மத்தின் ஸ்வரூப ரூப குண விபூதிகளை நேரே தெரிவிக்கையாலே ஸாரமாயிருக்கும். ப்ரக்ருதி ஆத்ம பேதம், ஆத்மாக்களுக்குள் பரஸ்பரம் ஸ்வரூப பேதம், ஜீவ பர பேதம் எனும் பே$_4$த$_3$ங்கள், ப்ரபஞ்சத்திற்கும் பரமனுக்குமுள்ள *ஶ*ரீராத்ம ப$_4$ாவம் இவை பாரமார்த்தி$_2$கங்கள் என்றே வேதாந்த ஸித்தாந்தம்.

ஸ்ரீராமாயணமும் மஹாபாரதமும் வேதத்தை விளக்கவந்த உபப்ரஹ்மணங்கள். இதில் மஹாபாரதம் 'ப$_4$ாரத: பஞ்சமோ வேத:' என்றபடி ஐந்தாவது வேதமாகக் கருதப்படுகிறது. இதில் ஸாரமானவை – பகவான் அருளிய ஸ்ரீகீ$_3$தையும், பீஷ்மர் அருளிய ஸஹஸ்ரநாமமும். வாஸுதேவ க்ருஷ்ணன் 'நான்தான் பரதத்வம்' என்று பறைசாற்றுவது கீ$_3$தை. 'இதுதான் பரதத்வம்' என்று தத்வதர்*ஶி*யான பீஷ்மர் காட்டியருள்வது ஸஹஸ்ரநாமம். கீ$_3$தையில் வேதாந்த விழுப்பொருளை வடிகட்டித் தருகிறான் ஸ்ரீக்ருஷ்ண பரமாத்மா. அதாவது தத்வத்ரயத்தில் சேதநாசேதனங்கள் இரண்டும் ப்ரகாரமாய் தான் (மேலான) ப்ரகாரியாயிருக்கை.

ஏஷ நாராயண: ஸ்ரீமாந் க்ஷீரார்ணவ நிகேதந:| நாக$_3$பர்யங்க முத்ஸ்ருஜ்ய ஹ்யாக$_3$தோ மது$_4$ராம் புரீம்|| 'ஸ்ரீதேவியோடு கூடியவனாய் இந்த நாராயணன் *ஶேஷஶ*யனத்தை விட்டு மதுரைக்கு எழுந்தருளினான்' என்று ஹரிவம்*ஶ*ம் க்ருஷ்ணனுடைய வரவு சொல்லிற்று. பாரதத்திலும், ஸ்ரீவிஷ்ணுபுராணத்திலும் பூமியின் பாரத்தைப் போக்கவே க்ருஷ்ணாவதாரம் ஏற்பட்டதென்று தெரிவிக்கப்பட்டுள்ளது. 'மண்ணின் பாரம் நீக்குதற்கே வடமதுரைப் பிறந்தான்' (9.1.10) என்றார் ஆழ்வார். அவன் பெயரே அதைக் காட்டித் தருகிறது. க்ருஷி: (க்ருஷ்) என்பது, பயிர் செய்வதற்காக உழப்படும் பூமிக்குப் பெயர். ண: என்பது ஸுகத்தைக் குறிப்பது. பாற்கடற்பள்ளியான், யாதவனாய் அவதரித்து துஷ்ட அரசர்களைக் கொன்று பூமி பாரத்தை நீக்கி பூமிதேவிக்கு ஸுகத்தைத் தந்தபடியால் க்ருஷ்ணனாகிறான்.

நாம் நம் வி*ஶி*ஷ்டாத்வைத ஸித்தாந்தத்துக்கு ஆதாரமாகக் கொள்ளும் ப்ரமாண நூல்கள் மூன்று. உபநிஷத், இவற்றை ஒருங்கவிடும் வ்யாஸரின் ப்$_3$ரஹ்ம ஸூத்ரம், ப$_4$க$_3$வத் கீ$_3$தை இவை மூன்றும் ப்ரஸ்தான த்ரயம் என்று மிகவுயர்ந்த ப்ரமாணங்களாக எல்லா வைதி$_3$க மதத்தினராலும் ஒப்புக்கொள்ளப்பட்டவை. ப்ரஸ்தான த்ரயத்தின் பௌர்வாபர்ய க்ரமம்

'ஶ்ருதி ஸ்ம்ருதி ஸூத்ராணாம்' என்கிறபடி முதலில் ஶ்ருதி, அடுத்து கீ$_3$தை, அதற்கடுத்தே ஶாரீரக ஶாஸ்த்ரம் என்று அடைவு காட்டப்படுகிறது.

பகவத் கீதையை நாம் உயர்ந்த ப்ரமாணமாக ஆதரிப்பது இது பகவானுடைய திருவாக்கு என்பதால் மட்டுமல்ல. கபிலரும் புத்தரும் பகவதம்ஶாவதாரங்களாயிருப்பினும் அவர்களுடைய ஸாங்க்ய பௌத்த ஶாஸ்த்ரங்கள் வேதாந்தார்த்தத்துக்கு புறம்பானவையென்று வேதவ்யாஸரால் கண்டிக்கப்பட்டுள்ளன; வைதி$_3$கர்களும் ஆதரிப்பதில்லை. கீ$_3$தையை வைதி$_3$கர்கள் ஆதரிப்பதற்கு காரணம் இது உபநிஷத் அர்த்தங்களை தெள்ளத் தெளிவாக அறிவிக்கிறது என்பதாலேயே. ஒருவன் எந்த ஜ்ஞானத்தைக்கொண்டு எல்லா வேதாந்தார்த்தங்களையும் ஸம்ஶய விபர்யயமற அறிந்துகொள்ள முடியுமோ, அத்தகைய ஜ்ஞானத்தை லோகத்தார்க்கு உபகரிக்கவே ப$_4$க$_3$வத் கீ$_3$தையை யருளிச்செய்துள்ளான் கண்ணபிரான். அர்ஜுநன் *தனக்கு* ஆத்ம நன்மையைத் தரும் உபதேஶத்தை கண்ணனிடம் ப்ரார்த்தித்திருந்தாலும், புருஷோத்தமனான பகவான் லோகத்தார் *அனைவரும்* பயன்பெறுமாறு மோக்ஷ ஶாஸ்த்ரத்தை யருளிச்செய்துள்ளான். ஜீவாத்மாவுக்கு ஶ்ரேயஸ்ஸைத் தரும் பகவத்பக்தியை உண்டாக்கித் தருவது கீ$_3$தாஶாஸ்த்ரம்.

புருஷோத்தமனான பகவான் திறத்தில் தாழ்ந்தவனான சேதநன் ஸ்நேஹத்துடன் செய்யும் ஸ்ம்ருதி ஸந்ததியே பக்தி. க்ருஷ்ண பக்தியாவது அவனையே ப்ராப்யமாகவும் (உபேயமாகவும்), ப்ராபகமாகவும் (உபாயமாகவும்) கொள்ளுகை. கீதை ஏழாவது அத்யாயத்தில் தானே உபாயம் என்றருளிச் செய்து, ஒன்பதாவது அத்யாயத்தில் தன் ப்ரபாவங்களைச் சொல்லி தானே ப்ராப்யபூதன் எனும் அர்த்தத்தைக் காட்டி, பின் அந்த அத்யாயத்தின் இறுதி ஶ்லோகத்தில் ப$_4$க்தியை விதி$_4$க்கிறான். ஆழ்வார் ப்ரபந்நரோ? ப$_4$க்தி நிஷ்டரோ? என்று எம்பாரை சிலர் கேட்க, 'ஆழ்வார் ப்ரபந்நர்; பக்தி இவர்க்கு தேஹயாத்ராஶேஷம்' என்றருளிச் செய்தார் (ஈடு 1-1-1). நாம் உயிர் வாழ்வதற்கு உணவு எப்படி தேவையோ, அதேபோல் ஆழ்வார் உயிர் த$_4$ரிப்பதற்கு ப$_4$க்தி இன்றியமையாதது. ப்ரபந்நனுக்கு ப$_4$க்தி ருசி கார்யமாயிருப்பது; ஸ்வரூப ப்ரயுக்தமாய் வருவதாகையால் தவிரவொண்ணாதது.

இந்த க்ரந்தத்திற்கு கர்த்தா ஸாக்ஷாத் பகவானேயாகையால் வக்த்ரு வைலக்ஷண்யமும், 'நெறியெல்லாம் எடுத்துரைத்த நிறைஞானத்தொரு மூர்த்தி' (4-8-6) என்று பகவானால் மயர்வற மதிநலம் அருளப்பெற்ற ஆழ்வார் கொண்டாடியுள்ளபடி விஷய வைலக்ஷண்யமும், கீதைக்கு விஷயம் ப$_4$க்தி ப்ரபத்திகளாகையால் ப்ரபந்த வைலக்ஷண்யமும் மூன்றும் இதுக்குண்டு. 'பகவன் ஞானவிதி பணிவகையென்று இவரங்கீகாரத்தாலே அதுக்கு உத்கர்ஷம்' என்று ஆசார்ய ஹ்ருதய ஸ்ரீஸூக்தி (194). கீதைக்கு ஏற்றம் ஆழ்வார்

அங்கீகாரத்தாலே; எங்ஙனேயென்னில் – 'அந்தமிலாதியம் பகவன் வணக்குடைத்தவநெறி வழிநின்று' என்றும், 'ஞானவிதி பிழையாமே' என்றும், 'பண்டே பரமன் பணித்த பணிவகையே- கண்டேன் கமல மலர்ப்பாதம்' (கீதையில் கண்ணன் காட்டியருளிய பக்திமார்க்க வழியிலே நின்று, அவன் விதித்த ஞானவிஶேஷமாகிய பக்திமார்க்கம் தவறாமே, அவன் பணித்த ப்ரபத்தி வழியாக அவனைக் காணப்பெற்றேன்) என்றும் திருவாய்மொழிப் பாசுரங்களில் பரம வைதி$_{3}$கரான ஆழ்வார் கீதையை ப்ரமாணமாகக் கொள்ளுகையாலேயாயிற்று அதுதனக்கும் உத்கர்ஷமுண்டாயிற்று.

ஆளவந்தார் கீ$_{3}$தார்த்த ஸங்க்$_{3}$ரஹத்தில் (முதல் ஶ்லோகம்), ஸ்வத$_{4}$ர்ம ஜ்ஞாந வைராக்ய ஸாத்$_{4}$ய ப$_{4}$க்த்யேக கோ$_{3}$சர:| நாராயண: பரம்ப்$_{3}$ரஹ்ம கீ$_{3}$தா ஶாஸ்த்ரே ஸமீரித:|| (வர்ணாஶ்ரம தர்மானுஷ்டான ரூபமாயுள்ள கர்மஜ்ஞான யோகத்தாலும் வைராக்யத்தாலும் உண்டாகும் பக்தியோகத்திற்கு விஷயமாயிருப்பவனான பரப்ரஹ்மமான நாராயணன் கீதா ஶாஸ்த்ரத்திலே அறிவிக்கப்படுகிறான்) என்றருளிச் செய்துள்ளார். வைராக்யமாவது விஷயாந்தரங்களில் பற்றற்றிருக்கை. ஸமீரித: – ஜகத்காரணத்வம், ஸர்வ ஶேஷித்வம், திவ்யமங்கள விக்ரஹ விஶிஷ்டத்வம், ஸமஸ்த கல்யாண குணாத்மகத்வம், புருஷோத்தமத்வம், ப்ராப்யத்வம், உபாஸ்யத்வம், ஶரண்யத்வம், உபாயத்வமென்று எம்பெருமானுக்கேயுள்ள அனைத்து பெருமைகளும் ப்ரகாஶிதம் இந்த திவ்ய ஶாஸ்த்ரத்தில் என்றபடி.

ஸ்ரீப$_{4}$ாஷ்யத்தைவிட கீ$_{3}$தா ப$_{3}$ாஷ்யத்துக்கே ஏற்றம் அதிகமென்று சொல்லலாம். ஏனெனில், ஸ்ரீப$_{4}$ாஷ்யத்துக்கு மூலம் வ்யாஸரது ப்$_{3}$ரஹ்மஸூத்ரம். ஆனால் கீ$_{3}$தா ப$_{4}$ாஷ்யத்துக்கு மூலம் ஸாக்ஷாத் பகவானே யருளிச்செய்த கீ$_{3}$தை. ஸ்ரீப$_{4}$ாஷ்யத்தில் பல விஶேஷார்த்தங்களைக் காட்டுவதற்கு அதற்கு மூலமான ஶாரீரக ஶாஸ்த்ரம் இடங்கொடுக்கவில்லை. கீ$_{3}$தா ப$_{4}$ாஷ்யத்திலோ பல அர்த்த விஶேஷங்களை வெளிப்படுத்த கீ$_{3}$தா ஶாஸ்த்ரம் இடங்கொடுத்திருக்கிறது.

'வார்த்தையறிபவர் மாயவற்காளன்றியாவரோ' (7-5-10) என்று ஆழ்வார் திருவாக்கு. 'வார்த்தை' என்றது ஸ்ரீகீதையில் 'ஸர்வதர்மாந்பரித்யஜ்ய' (18-66) எனும் சரம ஶ்லோகம். 'கீழடங்கலும் கடல்போலே; அதில் அம்ருதம் போலே இது' என்று ஈட்டு ஸ்ரீஸூக்தி. சரம ஶ்லோகத்தில், 'என்னையே உபாயமாகப்பற்று. உன்னை என்னையடைய வொட்டாது தடைசெய்யும் பாபங்களினின்றும் விடுவிக்கிறேன்; ஶோகியாதே' என்றருளிச் செய்துள்ளான். முதலில், 'தமேவ ஶரணம் க$_{3}$ச்ச' 'மாமேவைஷ்யஸி ஸத்யம் தே ப்ரதிஜானே' – என்னையே ஶரணமடைவாய், என்னையே அடைவாய்; இது ஸத்யம் என்று ஶரணாகதி தர்மத்தை யுபதேஶித்தான் கண்ணபிரான். ஆனால் அர்ஜுநன் ப்ரவ்ருத்திபரனாயிருந்ததால், அவனுக்குத் தக்கவுபாயம் ப$_{4}$க்தியோகமே யென்று நிர்ணயித்து, சரம ஶ்லோகத்தில் பக்தியோகத்துக்கு அங்கமாகவே ஶரணாகதியை உபதேஶிக்கும்படியாயிற்று.

திருக்கோஷ்டியூர் நம்பியின் நியமனமடியாக எம்பெருமானார் சரம *ஶ*லோகத்தின் உண்மையான அர்த்தமான ஸ்வதந்த்ர ப்ரபத்தியை ப்ரதிபக்ஷிகளும் காணக்கூடிய கீ$_3$தா ப$_4$ாஷ்யத்தில் வெளியிடாதே அங்க ப்ரபத்திபரமாக வெளியிட்டு, ஸ்வதந்த்ர ப்ரபத்திபரமான முக்யார்த்தத்தை அந்தரங்கர்களுக்கே உபதே*ஶி*க்கத்தக்க க$_3$த்$_3$யத்ரயத்தில் வெளியிட்டருளினார். ரஹஸ்ய க்ரந்தங்களில் விவரிக்கப்பட்டுள்ள இந்த முக்யார்த்தத்தை அடியேன் ஷஷ்ட்யப்த பூர்த்தி மலரான (2012ல் வெளியிடப்பட்ட) **'உபதே*ஶ* *ஶா*ஸ்த்ரம்'** எனும் நூலில் கண்டுகொள்வது. ப$_4$க்திபரமாகக் கொண்டாலும் ப்ரபத்திபரமாகக் கொண்டாலும் கீ$_3$தை நமக்கு ஆத்மக்ஷேமத்திலேயே கொண்டுபோய்ச் சேர்க்குமென்பதில் ஐயமில்லையாகையால், நாமும் நம் ஆத்ம நன்மையை யுத்தே*ஶி*த்து கீ$_3$தையை ஸேவித்து உய்வுபெறுவோமாக.

அடியேனது எழுபதாவது பிராயத் தொடக்கத்தில், **இந்நூலினை மாடமாமயிலைத் திருவல்லிக்கேணி பார்த்தஸாரதி எம்பெருமான் திருவடித் தாமரைகளில் ஸமர்ப்பித்து ஸத்தை பெறுகிறேன்.** 'காக்கை வாயிலும் கட்டுரை கொள்வர்' என்றபடி பெரியோர் குற்றங்கணிசியாது குணங்கொள்ளும்படி வேண்டுகிறேன். இந்நூலினை சிறந்த முறையில் அச்சிட்டுத்தந்த ஆர்.என்.ஆர். அச்சுக்கூட உரிமையாளர் ஸ்ரீமாந் ராஜன் அவர்களுக்கு அடியேன் மனமார்ந்த நன்றியைத் தெரிவித்து நிற்கிறேன்.

11.09.2021

**ந.ச. ஸ்ரீவத்ஸாங்க தாஸன்**

'ஸ்ரீநிதி என்க்லேவ்'
52/66, வரதராஜப்பெருமாள் கோயில் ஸந்நிதி தெரு,
சின்ன காஞ்சிபுரம் - 631 501.
கைபேசி: 8142087759

சேயன் அணியன் சிறியன் மிகப்பெரியன்
ஆயன் துவரைக்கோனாய் நின்ற - மாயன் அன்று
ஓதிய வாக்கதனைக் கல்லார் உலகத்தில்
ஏதிலராம் மெய்ஞ்ஞானமில்.

- நான். திரு.(71)

(விமுகர்க்கு தூரஸ்தன். ஆ*ஶ்*ரிதர்க்கு ஸுலபன். ஸ்ரீமத் த்வாரகைக்கு நிர்வாஹகனெனும் பெருமையுடையவனாயினும் ஸம்ஸாரிகளிலும் இடையனாய்த் தாழநின்று அவதரிப்பவன். அவன் திருத்தேர்த்தட்டில் அருளிச்செய்த வார்த்தையை அதிகரியாதார் தத்வஜ்ஞானமற்ற பகவத் த்வேஷிகள். ஏதிலர் - விரோதிகள்.)

ஸ்ரீ:



ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# விஷய ஸூசிகை

| பக்கம் | முக்ய விஷயம் |
|---|---|
| 24 | அந்தவந்த இமே தே$_3$ஹா – ஜீவர்களின் சரீரம் முடிவையுடையன; நஜாயதே ம்ரியதே வா – ஆத்மாவுக்கு பிறப்பு, பரிணாமம், அழிவு இவை கிடையாது. |
| 25 | வாஸாம்ஸி ஜீர்ணாநி – பழைய புதிய வஸ்த்ரம் |
| 26 | நைநம் சி$_2$ந்த$_3$ந்தி – எப்பொருளாலும் ஆத்மாவை ந*ஶி*க்க முடியாது |
| 27 | ஸுக$_2$ து$_3$:க்கே$_2$ ஸமே – க்ஷத்ரியன் போரில் வெற்றி தோல்விகளை ஸமமாகக் கருதவேணும்; த்ரை கு$_3$ண்ய விஷயா வேத$_3$ா – வேதங்கள் ஸத்வ ரஜஸ் தமோ குணங்களுடைய சேதநர்களை விஷயமாகக் கொண்டவை |
| 28 | யாவாநர்த்த$_2$ உத$_3$பாநே – ப்ராஹ்மணனுக்கு வேதங்களில் ப்ரயோஜனம்; கர்மண்யேவ அதி$_4$காரஸ் தே – கர்மம் செய்வதில் மட்டும் தகுதி, பலனை எதிர்பாராதே |
| 30 | அநாமயம் பத$_3$ம் க$_3$ச்ச$_2$ந்தி – ப$_2$ல த்யாகத்துடன் கர்மம் செய்பவன் மோக்ஷமடைகிறான் |
| 31 | ராக$_3$ த்வேஷ வியுக்தைஸ்து – அந்யோந்ய ஆ*ஶ்*ரய தோஷம்; ஆபூர்யமாணம் அசலப்ரதிஷ்ட்டம் – ஜ்ஞானியின் மனம் விஷயங்களால் கலங்குவதில்லை; ஸ்தித$_3$ப்ரஜ்யன் நிலை |
| 32 | **மூன்றாம் அத்யாயம்** – கர்மயோகம் – நஹி க*ஶ்*சித் க்ஷணமபி – ஜீவன் ஏதாவதொரு செயலை செய்துகொண்டே இருப்பவன் |
| 33 | நியதம் குரு கர்ம த்வம் – பழகிய கர்மயோகமே சிறந்தது; கர்மணைவ ஹி ஸம்ஸித்$_3$தி$_4$ம் – கர்மயோகத்தாலேயே பலர் ஆத்ம தர்*ஶ*நம் பெற்றுள்ளனர் |
| 34 | யத்$_3$யத்$_3$ ஆசரதி *ஶ்*ரேஷ்ட$_2$: – சிஷ்டாசாரத்தின் சிறப்பு |
| 35 | ந மே பார்த்த$_2$ாஸ்தி – பகவான் கர்மயோகி; *ஶ்*ரேயாந் ஸ்வத$_4$ர்மோ விகு$_3$ண: – ஜ்ஞான யோகத்திலும் கர்மயோகமே சிறந்தது |

ஸ்ரீ:



ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# ஆயன் அன்றோதிய வாக்கு
# (கீ₃தா ஸாரம்)

**ஸர்வோபநிஷதோ₃ கா₃வ: தோ₃க்₃தா₄ கோ₃பால நந்த₃ந:|**
**பார்த்தோ₂ வத்ஸ: ஸுதீ₄ர் போ₄க்தா து₃க்₃த₄ம் கீ₃தாம்ருதம் மஹத்||**

(ஸர்வ உபநிஷத்துக்களும் பசுக்கள். அவற்றைக் கறப்பவன் இடையனான கண்ணன். அர்ஜுநன் கன்று. கீதையாகிற அமுதம் பால். அதைப் பருகுபவன் ஞானி.)

'அஜாயமாந: ப₃ஹுதா₄ விஜாயதே' என்கிறபடியே எம்பெருமான், கர்மவஶ்யனன்றிக்கே க்ருபாபரவஶனாய், பல அவதாரங்கள் எடுக்கிறான். அவ்வவதாரங்களுள் ஸ்ரீக்ருஷ்ணாவதாரம் பரமப்ரதாநம். ஸ்ரீராமாவதாரத்தில் 'மித்ரப₄ாவேந' 'ஸக்ருதே₃வ' இத்யாதி சில வார்த்தைகள் காணக் கிடைக்கிலும், பரமவேதாந்த ஸாரமாக கீதை எனும் திவ்ய ஶாஸ்த்ரம் அவதரித்தது ஸ்ரீக்ருஷ்ணாவதாரத்திலேயே.

ஸர்வ நியந்தாவான ஸர்வேஶ்வரனுக்கு யுத்தத்தில் நாட்டமில்லாத அர்ஜுநனை யுத்தத்தில் விருப்பமுள்ளவனாக ஆக்குவது பெரிய காரியமன்று. ஸங்கல்ப மாத்ரத்தால் செய்யக்கூடியவனே. ஆயினும் அர்ஜுநனை வ்யாஜமாகக்கொண்டு லோகத்தார்க்கு ஆத்ம க்ஷேமங்கரமான ஶாஸ்த்ரத்தை வெளியிட திருவுள்ளம் பற்றியே அர்ஜுநனை யுத்தத்தில் விருப்பமற்றவனாய் ஆக்கினான். ஸ்ரீராமாவதார காலத்தில் பகவான் கைகேயியின் உள்ளத்தைக் கலக்கியதும் தன் கல்யாண குணங்களை வெளிப்படுத்துவதற்காகவே என்பர் பெரியோர்.

'அறிவினால் குறைவில்லா அகல்ஞாலத்தவரறிய நெறியெல்லா மெடுத்துரைத்த நிறை ஞானத்தொரு மூர்த்தி' (திருவாய். 4-8-6) என்றருளிச் செய்தார் ஆழ்வார். 'அறிவினால் குறைவில்லா அகல்ஞாலத்தவர்' என்பதற்கு 'அறிவினால் பரிபூர்ணரானவர்களான இவ்வுலகத்தவர்' என்று பொருளன்று. நமக்கு அறிவில்லையே! என்று குறைபட அறியாதார் என்றபடி. நமக்குச் சோறில்லையே, தண்ணீரில்லையே, துணிமணியில்லையே! என்று குறைபடத் தெரிந்த ஸம்ஸாரிகள் 'நமக்கு அறிவு இல்லையே' என்று மாத்திரம் குறைபடுவதில்லையன்றோ. அகல்ஞாலத்தவரறிய - பகவத்கீதை அர்ஜுநனை நோக்கி

யவதரித்ததாயினும், அவனை ஒரு வ்யாஜமாக நிறுத்தி நமக்காகவே அருளிச் செய்யப்பட்டது. நெறியெல்லா மெடுத்துரைத்த – கர்ம ஜ்ஞான பக்தி ப்ரபத்திகள், அவதார ரஹஸ்ய ஜ்ஞானம், புருஷோத்தம வித்யை என்று ஸகல உபாயங்களையும் அவரவர் பக்குவத்திற்கேற்றபடி எடுத்துரைத்தான்.

ஸ்ரீவேத வ்யாஸர் ஸம்ஸாரிகளுக்குக் கொடுத்த மஹாபாரதம் ஸம்ஸார விமோசகம். அம்மஹாபாரதந்தான் கோது என்னும்படியாய்த்து ஸ்ரீகீதை. வேதே$_3$ஷு பௌருஷம் ஸூக்தம் த$_4$ர்மஶாஸ்த்ரேஷு மாநவம்| ப$_4$ாரதே ப$_4$க$_3$வத்கீ$_3$தா புராணேஷுச வைஷ்ணவம்|| (வேதங்களுக்குள்ளே புருஷஸூக்தமும், தர்மஶாஸ்த்ரங்களுக்குள்ளே மநு ஸ்ம்ருதியும், மஹாபாரதத்துக்குள்ளே ஸ்ரீகீதையும், புராணங்களுக்குள்ளே ஸ்ரீவிஷ்ணுபுராணமும் சிறந்தவை) என்று சொல்லிற்றிறே.

எம்பெருமானார் தர்ஶநத்தில் தத்வாதி$_3$ நிஷ்கர்ஷமிருக்கும்படி என்னென்னில் – பரப்$_3$ரஹ்ம ஶப்தவாச்யனான நாராயணனே பரதத்வம், ப்ரஸாத விஶிஷ்டனான அவனே பரமஹிதம். போ$_4$க்$_3$யதா விஶிஷ்டனான அவனே பரம ப்ராப்யம். இவ்வர்த்தங்களையே பகவான் ஸ்ரீகீதையில் உபதேஶிக்கிறான். கேசவார்ஜுந ஸம்வாதத்தை உள்ளடக்கிய ஸஞ்ஜய த்$_4$ருதராஷ்ட்ர ஸம்வாதம் 'தர்மக்ஷேத்ரே' என்ற த்$_4$ருதராஷ்ட்ர வாக்யத்திலே தொடங்கி, 'யத்ர யோகேஶ்வர:' என்ற ஸஞ்ஜய வாக்யத்திலே முடிகிறது. இரண்டாம் அத்யாயம் பதினோராவது ஶ்லோகம் வரை உபோத்$_3$கா$_4$தம் (முன்னுரை). 'ந த்வேவாஹம்' (2-12) முதலாக 'ஸர்வதர்மாந்பரித்யஜ்ய' (18-66) ஈறாக கீதா ஶாஸ்த்ரம்.

'கர்மம் ஜ்ஞானம் பக்தி முதலான உபாயங்களால் அடையப்படும் பரம்பொருள் நாராயணனே' என்பதே ஸ்ரீபகவத்கீதையின் திரண்ட பொருள். எழுநூறு ஶ்லோகங்கள் கொண்ட கீதையை மூன்று ஷட்கங்களாக பிரித்துள்ளார்கள். பூர்வ ஷட்கத்தில் – பகவத்சேஷத்வ ஜ்ஞானம், பலாந்தரங்களில் பற்றின்மை முதலான புத்தி விஶேஷங்களோடு கர்மஜ்ஞான யோகங்களை அநுஷ்டிக்கவே, ஆத்மஸாக்ஷாத்காரமும் பிறகு ஆத்மானுபவமும் ஏற்படும் என்று சொல்லப்பட்டது. நடுவிலுள்ள மத்யம ஷட்கத்தில் – ஆத்மாநுபவத்தில் கால்தாழதே பகவானையே அடைய நினைப்பார்க்கு பக்தியோகம் உண்டாகிறதென்றும், அவ்வாறு பக்தியோகத்தை அநுஷ்டிப்போர் முடிவில் பகவானையே அடைவர் என்றும் சொல்லப்பட்டது. அந்திம ஷட்கத்தில் – ஸூக்ஷ்ம ஸ்தூலங்களாயிருக்கும் சேதநாசேதன தத்வங்களைப் பற்றியும், ஸர்வேஶ்வரனைப் பற்றியும், முன்னிரண்டு ஷட்கங்களில் கர்மஜ்ஞான பக்தி யோகங்களைப் பற்றிச் சொல்லாமல் விடுபட்டுப்போன சில விஷயங்களும் கூறப்படுகின்றன.

**கர்ம யோகமாவது** – தவம் செய்தல், தீர்த்தாமாடுதல், தானமளித்தல், பஞ்சமஹா யஜ்ஞங்களை யநுஷ்டித்தல் முதலான வர்ணாஶ்ரமங்களுக்குரிய தர்மங்கள் 'கர்மம்'

எனப்படுகிறது. இவற்றை பகவச்சேஷத்வ ஜ்ஞானத்தோடு, பற்றற்று, பலனைக் கருதாது ஆத்மஸாக்ஷாத்காரத்துக்கு உபாயமாக அநுஷ்டிப்பது – கர்மயோகமாகிறது. **ஜ்ஞாந யோகமாவது** – விஷயங்களில் இந்த்ரியங்களை மேயவிடாமல் யமநியமாதி யோக முறைகளாலே பரிசுத்தமான ஆத்மாவையே த்யானிப்பது ஜ்ஞான யோகமாகிறது. **பக்தி யோகமாவது** – வேறொன்றில் மனதைச் செலுத்தாமல் பகவான் ஒருவனிடமே அன்பு வைத்து அவன் விஷயமான த்யானம், அர்ச்சனம், ப்ரணாமம் முதலியவற்றில் நிலைநிற்பது. கர்மயோகத்தில் ஜ்ஞாந பக்திகளும், ஜ்ஞாந யோகத்தில் கர்ம பக்திகளும், பக்தி யோகத்தில் கர்ம ஜ்ஞானங்களும் கலந்திருந்தபோதிலும் முறையே கர்மஜ்ஞாந பக்திகளின் ப்ராதா4ந்யத்தைப் பற்ற கர்ம ஜ்ஞான பக்தி யோகங்கள் எனப்படுகின்றன. இவை மூன்றும் மோக்ஷமடைய உபாயங்களாகின்றன.

கண்ணபிரான் பாண்டவர்கட்காகத் துரியோதனனிடம் தூது சென்று ஸமாதான வழிகள் பல பேசியும், 'வீரபோக்யா வஸுந்தரா' வாகையாலே 'போர்க்களத்தில் வீரத்தனத்தைக் காட்டி வெற்றி பெறுபவர்களே ராஜ்யமாளக் கடவர்கள்' என்று த்ருதராஷ்ட்ர வகுப்பினர் கூற, பிறகு யுத்தமே நடத்தக் கடவதென்று முடிவாகவே, இரு வகுப்பினரும் படைத்துணை வேண்டிக் கண்ணபிரான் பக்கலிலே வந்தார்கள். துரியோதனன் கண்ணபிரானைத் துணையாகக் கொள்ளாமல் அவனது படைகளைப் பெற்றுப்போனான். 'க்ருஷ்ணா*ஶ்*ரயா: க்ருஷ்ணப3லா: க்ருஷ்ணநாதா2*ஶ்*ச பாண்ட3வா:' என்று புகழ்பெற்ற பாண்டவர்களுக்கே கண்ணபிரான் துணையாக நிற்கும்படியாயிற்று.

வேதவ்யாஸர் தன் புதல்வனான த்ருதராஷ்ட்ரனிடம் வந்து, 'மன்னவனே! நடக்கப்போகிற யுத்தத்தை நீ நேரில் காண விரும்பினாயாகில், அதைக் காண்பதற்கு திவ்ய சக்ஷுஸ்ஸை உனக்கு அளிப்பேன்' என்ன, அதுகேட்ட த்ருதராஷ்ட்ரன், 'நான் அதைப் பார்க்க விரும்பவில்லை; ஆனால் யுத்தகளச் செய்திகளை கேட்க விரும்புகிறேன்' என்ன, அப்போது வேதவ்யாஸர் தம்முடைய சிஷ்யனும் த்ருதராஷ்ட்ரனது ஸாரதியுமான ஸஞ்ஜயனை யழைத்து யுத்த விஷயத்தில் அவன் யாவற்றையும் காணும்படி அநுக்ரஹம் பண்ணி, 'நடக்கும் யுத்தச் செய்திகளை மன்னனுக்குச் சொல்லுவாய்' என்று நியமித்துச் சென்றார்.

ஆளவந்தார் அருளிச்செய்த கீ3தார்த்த2 ஸங்3க்ரஹம், 'மாயன் அன்று ஐவர் தெய்வத் தேரினிற் செப்பிய கீதையின் செம்மைப் பொருள் தெரியப்பாரினில் சொன்ன இராமாநுசன்' என்றபடி எம்பெருமானார் அருளிச்செய்த ஸ்ரீகீ3தா பா4ஷ்யம், தே*ஶி*கன் அருளிச்செய்த தாத்பர்ய சந்த்3ரிகை இவற்றின் துணை கொண்டு ஸ்ரீகீதையில் 18 அத்யாயங்களில் சிலபல முக்யமான *ஶ்*லோகங்களின் அர்த்த வி*ஶே*ஷங்களை மேலே ஸங்க்3ரமாக அநுபவிப்போம்.

* * * * *

**அஸ்த$_{2}$ாந ஸ்நேஹ காருண்ய த$_{4}$ர்மாத$_{4}$ர்ம தி$_{4}$யாSSகுலம்|**
**பார்த்த$_{2}$ம் ப்ரபந்ந முத்$_{3}$தி$_{3}$ஶ்ய ஶாஸ்த்ராவதரணம் க்ருதம்|| (கீ.ஸங்.5)**

(தகாத பந்துக்களிடம் பற்றினாலும், கருணையினாலும் உண்டான தர்மத்தில் அதர்மபுத்தியாலே கலங்கி நிற்பவனாய் சரணமடைந்தவனான அர்ஜுநனைக் குறித்து கீ$_{3}$தா ஶாஸ்த்ரம் தோற்றுவிக்கப்பட்டது.)

கண்ணபிரான் தன் பக்தனான அர்ஜுநனுக்குத் தேர்ப்பாகனாயிருந்து கொண்டு குருக்ஷேத்ரத்தில் போர்புரிய அணிவகுத்து நின்றான். அப்போது அர்ஜுநன், 'அச்யுத! துரியோதனனுக்குத் துணையாக யார் யார் வந்திருக்கிறார்கள் என்று அறிந்து கொள்ள 'ஸேநயோருபயோர் மத்$_{4}$யே ரதம் ஸ்த$_{2}$ாபய' (தேரை இரண்டு ஸேனைகளுக்கிடையே நிறுத்துவாய்) என்ன, அப்படியே கண்ணபிரானும் இரண்டு படைகளுக்கிடையே தேரை நிறுத்தினான். அர்ஜுநன் போர்க்களத்தில் எதிரே நிற்பவர்களைப் பார்த்தான். வந்திருப்பவர்கள் ஆசார்யர்களாயும், தந்தைகளாயும் புத்திரர்களாயும் பேரன்களாகவும் தோழர்களாயுமிருப்பது கண்டு அவர்களிடம் இரக்கங்கொண்ட மனத்தினனாய், 'கண்ணா! போர்புரிய நிற்கும் இந்த உற்றார் உறவினரைக் காணவே எனது காண்டீவ தனுசு கையிலிருந்து நழுவுகிறது; தேஹம் நடுங்குகிறது; மனம் குழம்புகிறது; அபசகுணங்களைக் காண்கிறேன். எதிரே நிற்பவர்கள் ஆததாயிகள் (கொல்ல வருபவர்கள்) ஆயினும் இவர்களுக்குப் பதில் தீங்கு செய்வதால் நமக்குப் பாபமே ஸித்திக்கும். அறிவுகெட்ட இவர்கள் போரினால் ஏற்படும் குலநாசங்களை அறியவில்லை. குலநாசத்தினால் குலதர்மங்கள் அழியும். அதர்மம் சூழும்; அதர்மம் மேலிட்டால் குலப்பெண்கள் கற்பை இழப்பார்கள். பெண்கள் கெட்டால் ஜாதிக்கலப்பு ஏற்பட்டு நிலையான ஜாதி தர்மம் அழிந்துபோம். அமர்க்களத்தில் ஆசார்யர்களையும் உறவினர்களையும் கொன்று என்ன நன்மையடையப் போகிறேன்; யுத்தமும் வேண்டா; ராஜ்ஜியமும் வேண்டா; நான் இவர்களைக் கொல்லமாட்டேன்; ராஜ்ய ஸுகங்களுக்காக பந்துக்களைக் கொல்வது பாவம்' என்று கூறி வில்லைக் கீழே பொகட்டு தேரிடையே உட்கார்ந்துவிட்டான் – என்கிற விதுவே நாற்பதேழு ஶ்லோகங்கள் கொண்ட முதலத்யாயத்தின் பிரமேயம்.

பகவான் ஸ்ரீராமவதாரஞ்செய்து 'த$_{3}$ஶவர்ஷ ஸஹஸ்ராணி த$_{3}$ஶ வர்ஷ ஶதாநிச| ராமோ ராஜ்யமுபாஸித்வா' (ஸங்க்ஷே. ரா.) என்றபடி பதினோராயிரமாண்டு இந்நிலவுலகில் வாழ்ந்திருந்தும் ஸம்ஸாரி சேதநோஜ்ஜீவநார்த்தமாக ஒரு ஶாஸ்த்ரமும் இட்டருளவில்லை; தன்னடிச் சோதிக்கு எழுந்தருளின பிறகு திருவுள்ளத்தில் இக்குறை மிகவும் இருந்தது. அப்போதே ஸங்கல்பம் செய்து கொண்டான் – அடுத்தபடி மண்ணுலகில் அவதரிக்கும்போது

மிகச் சிறந்ததொரு ஶாஸ்த்ரத்தை அவதரிப்பித்தே தீருவேன் - என்று. ஶாஸ்த்ரத்தைத் தருவதென்றால் ஓலைப்புறத்திலே எழுதி வைப்பதன்று; அதிலொரு ரஸமில்லை. ஓர் உத்தமாதிகாரிக்கு தான் உபதேஶித்து அம்முகத்தாலே உலகில் பரவ வைக்க வேணும் என்று நினைத்து 'ஜிதேந்த்₃ரியரில் தலைவனாய், ஆஸ்திக அக்₃ரேஸரனாய், 'கேஶவஸ்ய ஆத்மா' வென்று க்ருஷ்ணனுக்குத் த₄ாரகனாயிருக்கிற அர்ஜுநனுக்கு' (ஸ்ரீ.வ.பூ) என்றபடி பெருமை வாய்ந்த அர்ஜுநனை உபதேஶ பாத்ரமாகத் திருவுள்ளம் பற்றினான். அர்ஜுநன் அப்போது நண்பனாகத் தானிருந்தானேயொழிய சிஷ்யனாக இல்லை; சிஷ்யவ்ருத்தி செய்யாதவனுக்கு உபதேஶிக்க கூடாதகையால் 'ஶிஷ்யஸ் தேஹம் ஶாதிமாம் த்வாம் ப்ரபந்நம்' (கண்ணா! நான் உனக்கு சிஷ்யனாகிறேன். உன்னை சரணடைந்த என்னை சிக்ஷிப்பாய்) என்று அர்ஜுநனை ப்ரார்த்திக்கும்படி செய்தான். சிஷ்யத்வமென்பது எளிதாய் உண்டாய் விடுமோ? 'பரீக்ஷ்ய லோகாந் கர்மசிதாந் ப்₃ராஹ்மணோ நிர்வேத₃மாயாந்........தத் விஜ்ஞாநார்த்தம் ஸ கு₃ருமேவாபி₄ க₃ச்சே₂த்' என்ற முண்டகோநிஷத் வாக்யத்தின்படி நிர்வேதமுண்டானாலல்லது சிஷ்யத்வம் உண்டாகமாட்டாதாகையாலே அர்ஜுநனுக்கு சிஷ்யத்வ ப்ராப்திக்குடலாக நிர்வேதத்தையும் (ஶோகத்தையும்) உண்டாக்கினான்.

**த₄ர்மக்ஷேத்ரே குருக்ஷேத்ரே ஸமவேதா யுயுத்ஸவ:|**
**மாமகா: பாண்ட₃வாச்சைவ கிம் அகுர்வத ஸஞ்ஜய|| (1-1)**

(ஸஞ்ஜயனே! தர்மபூமியான குருக்ஷேத்ரத்தில் கூடிய என் புதல்வர்களும் பாண்டுவின் புதல்வர்களும் என்ன செய்தார்கள்) என்று த்ருதராஷ்ட்ரன் கேட்டான். தர்ம க்ஷேத்ரே குருக்ஷேத்ரே - க்ஷத்ரியர்களுக்கு யுத்தம் செய்வது தர்மம். யுத்தமாகிற யாகத்திற்கு தகுந்த இடமாகையால் தர்ம க்ஷேத்ரம். அங்கு கூடியிருந்தவர்களிடையே தர்மம் இல்லையாகிலும், அங்கே பட்டார்க்கு வீரஸ்வர்க்கம் கிட்டும் தேஶம்.

ஒரு போஜனசாலையில் பலர் கூடியிருந்தால் அங்கு அவர்கள் போஜனம்தானே செய்வார்கள். அதுபோல் யுத்தபூமியில் கூடினோர் போர்தானே செய்வார்கள். அங்ஙனமிருக்க 'என் புதல்வர்களும் பாண்டுவின் புதல்வர்களும் என்ன செய்தார்கள்? என்று த்ருதராஷ்ட்ரன் கேட்டது அவனது மதியீனத்தையே காட்டும். (மாமகா: பாண்ட₃வா:) தம்பி பிள்ளைகளைத் தன் பிள்ளைகளாகவே பாவிக்க வேண்டியிருக்க, தன் பிள்ளைகள் பாண்டவர்கள் என்று பிரித்துச் சொல்லுகையாலே இவனுடைய பக்ஷபாதமும் உள்ளக்குருடும் தெளிவாகிறது. அவனுடைய அந்த மமகாரமே அவன் குடியைக் கெடுத்ததென்க. மஹான்களின் அபிமானம் நமக்கு ஶ்ரேயஸ்ஸைத் தரும். துச்சரித்ரமுள்ளவர்களுடைய அபிமானம் விநாசத்தையே விளைவிக்கும்.

மேலே, துர்யோதனன் துரோணரிடம் தன் ஸேனையிலும் பாண்டவர் ஸேனையிலும் எத்தகைய சூரர்கள் இருக்கிறார்கள் என்பதை விவரிக்க, பீஷ்மர் அவனை உத்ஸாகப்படுத்த தன் சங்கையெடுத்து ஊதவே மற்றவர்களும் தம்தம் சங்குகளை ஊதினார்கள். பிறகு அர்ஜுநனுக்கு ஏற்பட்ட ஶோகத்தைச் சொல்லி, அர்ஜுநன் மனம் நொந்து தன் வில்லைப்போட்டுவிட்டு தேரிடையே உட்கார்ந்துவிட்டான் என்று ஸஞ்ஜயன் சொன்னான். ஸ்ரீராமாயணத்திலும், ராமராவண யுத்தத்தில் இராவணன் சளைத்து வில்லைப் பொகட்டு நின்றான். வில்லை பொகட்டு நின்றதில் இராவணனுக்கும் அர்ஜுநனுக்கும் ஸாம்யமிருந்தாலும், ஹேதுவில் நெடுவாசியுண்டு. இராவணன் ஓய்ந்தது அஶக்தியினால்; அர்ஜுநன் ஓய்ந்தது அஶக்தியினாலன்று, தர்மத்தில் அதர்மபுத்தியாலே.

ஒரு ஸம்ஸாரியான அர்ஜுநன் ஸர்வலோக மஹேஶ்வரனான கண்ணனைப் பார்த்து தேரை நடத்தும்படி சொல்கிறான். பகவானும் அர்ஜுநன் சொன்னபடி தேரை நடத்துகிறான். ஒரு ஸாமாந்யனுக்கும்கூட எம்பெருமான் அடங்கி நடப்பதென்பது அவனுடைய ஸ்வாதந்த்ர்யத்தினுடைய காஷ்டை – ஸீமா – எல்லை என்று முமுக்ஷுப்படி (247). பரமபதத்தில் பெரிய திருவடி, திருவனந்தாழ்வான் மற்றுமுண்டான நித்ய முக்தர்கள் முடியிலே பகவானுடைய திருவடிகள் பொருந்தும். இங்கே பகவானுடைய திருமுடியிலே அர்ஜுநனுடைய கால் படுகிறது. இதுதான் அடியார் திறத்திலே அவனுக்குண்டான வாத்ஸல்ய விவஶத்வம். தேஶத்தில் ராஷ்ட்ரபதி, ப்ரதாந மந்த்ரி போல்வார் தங்கள் நண்பர் உறவினர்களுடன் ஏகாந்தத்திலே ஸஹஜமாகப் பரிமாறுவர். ஆனால் பொதுவிடங்களில் அத்தகைய அந்தரங்க பரிமாற்றங்களைக் காட்டிக்கொள்ளார். ஆனால் அர்ஜுநன் விஷயத்தில் பகவான் செய்தருளியது இப்படியன்று. அர்ஜுநனுக்காக எம்பெருமான் தேரோட்டியது அவன் திருமாளிகை புழக்கடை தோட்டத்திலன்று. பதினெட்டு அக்ஷௌஹிணீ ஸேநை நடுவே அனைவரும் காணும்படியிறே அர்ஜுநனை ரதியாக்கி தன்னை ஸாரதியாக அமைத்துக் கொண்டான். இதுதான் அவனுக்குண்டான ஆஶ்ரித வாத்ஸல்ய விவஶத்வம் என்கிறார் எம்பெருமானார். 'பார்த்தன் தன் தேர்முன் நின்றானை' என்கிறவிடத்து பெரியவாச்சான்பிள்ளை வ்யாக்யான ஸ்ரீஸூக்தி 'தன் ஸ்நேஹிதனுக்காக தன்னை அழியமாறுபவன்' (தன் ஸ்வரூபத்தை மாறாடினான்; அவன்பக்கல் தனக்குண்டான ப்ரீதிதோற்ற அவனைத் தன்பின் இருத்தி பகைவர் எய்த அம்புகளுக்குத் தன்னை இலக்காக்கிக் கொண்டவனுடைய வாத்ஸல்யம் என்னே! என்றபடி).

* * * * *

# இரண்டாம் அத்யாயம் – ஸாங்க்ய யோகம்

72 ஶ்லோகங்கள் உள்ள இந்த அத்யாயம் 'ஸாங்க்ய யோகம்' என்றழைக்கப்படுகிறது. ஸங்க்யை – புத்தி. புத்தியால் அறியப்படும் நித்யமான ஆத்ம தத்வம் 'ஸாங்க்யம்' எனப்படுகிறது. யோகம் – உபாயம் (வழி). ஆக, நித்யமான ஆத்ம தத்வத்தை அடையும் வழியான கர்ம யோகம் இங்கு கூறப்படுகிறது. பற்று வைக்காமல் செய்யப்படும் கர்மாநுஷ்டானமாகிற இக்கர்ம யோகத்தைப் பற்றிய அறிவும், 'ஸாங்க்யம்' எனப்படும் ஆத்ம தத்வத்தைப் பற்றிய அறிவும் இவ்வத்யாயத்தில் கூறப்படுகின்றன. முதல் அத்யாயம், இரண்டாம் அத்யாயம் பதினோராவது ஶ்லோகம் வரை, அவதாரிகை. பன்னிரண்டாம் ஶ்லோகம் முதல் முப்பதாவது ஶ்லோகம் வரை, கண்ணபிரான் தகாத இடத்தில் அர்ஜுநனுக்குண்டான கருணையைப் போக்கி, ஶரீர–ஆத்ம விவேகத்தையும், தர்ம அதர்ம புத்தியையும் தெளிவாக உபதேஶிக்கிறான். மேலே கர்மயோகத்தைப் பற்றிச் சொல்லி, இதை வெகுகாலம் அநுஷ்டித்தால் சித்த ஶுத்தியுண்டாகி ஆத்ம ஸாக்ஷாத்காரம் (ஆத்ம தர்ஶனம்) பெறக்கூடிய ஜ்ஞான யோகம் கைபுகும் என்கிறான்.

**ந த்வேவாஹம் ஜாது நாஸம் ந த்வம் நேமே ஜநாதி$_4$பா:|**
**ந சைவ ந ப$_4$விஷ்யாம: ஸர்வே வயமத: பரம்|| (2–12)**

(நான் முற்காலத்தில் எப்போதும் இல்லாமலிருந்தேன் என்பதில்லை. நீயும் முற்காலத்தில் எப்போதும் இல்லாமலிருந்தாய் என்பதில்லை. இந்த அரசர்களும் முற்காலத்தில் எப்போதும் இல்லாமலிருந்தனர் என்பதில்லை. நாம் அனைவரும் இதற்கு மேலுள்ள காலத்திலும் இருக்கமாட்டோம் என்பதும் இல்லவே இல்லை.)

இதனால், பரமாத்மாவான நான் நித்யன் என்பதில் எப்படி ஐயமில்லையோ, அப்படியே **க்ஷேத்ர** மெனப்படும் அசித்திலும் வேறுபட்ட **'க்ஷேத்ரஜ்ஞர்கள்'** எனப்படும் ஜீவர்களும் நித்யர்களே என்றானாயிற்று. 'அஹம்' என்று ஸர்வேஶ்வரனான தன்னைச் சொன்னான். 'த்வம்' என்று எதிரில் நிற்கும் அர்ஜுநனைச் சொன்னான். 'இமே' என்று தங்களை எதிரிட்டு நிற்கும் பல சேதநர்களைச் சொன்னான். 'ஸர்வே வயம்' என்று இப்படி பரஸ்பரம் வேறுபட்ட சேதநர்கள் கணக்கற்றவர்கள் என்றான். இதனால் ஸர்வேஶ்வரனான பகவானிற்காட்டிலும் ஜீவாத்மாக்களுக்குண்டான பேதமும், அந்த ஜீவாத்மாக்களுக்கு பரஸ்பரமுண்டான பேதமும் பாரமார்த்திகம் என்று தெரிவித்தானாயிற்று. இந்த ஶ்லோகம் நம் விஶிஷ்டாத்வைத ஸித்தாந்தத்திற்கு அடிப்படையாக உள்ளதென்று நன்குணரலாம்.

அடுத்த **'தேஹிநோஸ்மிந் யதா.... நமுஹ்யதி'** (2–13) எனும் ஶ்லோகத்தில் ப்ரக்ருதி – ஆத்ம விவேகமும் சொல்லப்பட்டது. அதாவது அசேதனம் வேறு, சேதநன் வேறு என்று

சொல்லப்பட்டது. ஆக, நிர்விஶேஷ சிந்மாத்ரமான ப்ரஹ்மமொன்று தவிர வேறு சேதநா-சேதனங்கள் உண்மையில் கிடையா என்கிற வாதம் நிராகரிக்கப்பட்டது.

பூஜிக்கத்தகுந்த பிதாமஹர் பீஷ்மரையும், ஆசார்யரான துரோணரையும் அம்புகளால் எப்படி அடிப்பேன்? என்று அர்ஜுநன் கேட்பதிலிருந்து ஶரீரம் வேறு, ஆத்மா வேறு; ஆத்மா அழிவற்றது என்பதை அறியாதவனாயிருந்ததால், ஆத்மா தேஹத்திலும் வேறுபட்டது, அழிவற்றது, தேஹாத்மாபிமானம் எனும் அஜ்ஞானமே எல்லா துன்பங்களுக்கும் ஆணிவேர் என்பதை கண்ணன் பரக்கச் சொல்கிறான்.

**'அந்தவந்த இமே தே₃ஹா'** (2-18) எனும் ஶ்லோகத்தால் என்றும் உளதாய், அழிவற்றதாய், அளவிறந்ததாயுமுள்ள ஜீவாத்மாக்களின் ஶரீரங்கள் யாவும் முடிவையுடையன. ஆகையால் ஶரீரத்தின் அழிவைப் பற்றி ஶோகிக்க வேண்டா என்றான். தேஹம் எனும் பதம் 'தி₃ஹ உபசயே' என்ற தாதுவின்படி (அவயங்களோடு கூடியிருக்கையால்) உபசயமடைவது (வளர்வது) எனும் பொருளுடையது. ஶரீரம் எனும் பதம் 'சீர்யதே இதி சரீரம்' (அழிகிறதாகையாலே சரீரம்) எனும் வ்யுத்பத்தியின்படி 'அழியக்கூடியது' எனும் பொருளுடையது. இரண்டும் பொருத்தமே. பஞ்ச பூதங்களாலான இந்த தேஹம் முதலில் அவயங்களோடு வளர்ந்து பின் அழிகிறதன்றோ. கர்மபலனை அநுபவிப்பவன் ஆத்மா. அவ்வநுபவத்திற்காக ஏற்பட்டது இந்த ஶரீரம். ஆக கர்மாநுபவம் கழிந்தவுடன் இந்த ஶரீரம் அழிந்துபோகும். ஆத்மாவோ ஐம்பெரும் பூதங்களால் ஆனதன்று, அவயவங்களற்றது. ஆதலால் நித்யன். ஆக, கவலைப்பட வேண்டியதில்லை என்கிறான்.

**ந ஜாயதே ம்ரியதே வா கதா₃சிந்நாயம் பூ₄த்வா ப₄விதா வா ந பூ₄ய:|**
**அஜோ நித்ய: ஶாச்வதோऽயம் புராணோ ந ஹந்யதே ஹந்யமாநே ஶரீரே| (2-20)**

(ஆத்மா ஒருபோதும் பிறப்பதுமில்லை, அழிவதுமில்லை. இவ்வாத்மா கல்பாதியில் உண்டாகி கல்பத்தின் முடிவில் அழிவான் என்பதுமில்லை. இவன் உத்பத்தியற்றவன்; அழிவற்றவன்; பரிணாமமற்றவன்; பழையவனாயினும் புதியவனாயிருப்பவன். ஆகையால் ஶரீரம் அழியும்போது இவ்வாத்மா அழிவதில்லை.) கீழே ஆத்மாவுக்கு விநாசமில்லை என்றது. இங்கு உத்பத்தி, பரிணாமம், விநாசம் முதலான தேஹத்தின் தன்மைகள் யாவும் ஆத்மாவுக்கு இல்லையென்கிறது.

ஆத்மா ஒரு ஶரீரத்தினின்று மற்றொரு (தேவ மநுஷ்ய திர்யக் ஸ்தாவர) ஶரீரத்திற்கே புண்ய பாபங்களுக்கேற்ப செல்கிறது. அசேதனமான (அறிவற்ற) தேஹத்திற்கே உத்பத்தி, வ்ருத்தி (வளர்தல்), அபக்ஷயம் (குறைதல்), பரிணாமம் (மாறுபடுதல்), விநாசம் (அழிவு) முதலான விகாரங்கள் உண்டு. பிறப்பு இறப்பு அற்ற ஆத்மாவுக்கு இவை எக்காலத்திலுமில்லை. ஸ்ருஷ்டி காலத்திலும், அதாவது கல்பத்தின் தொடக்கத்திலும் புதிதாக

ஜீவர்கள் ஸ்ருஷ்டிக்கப்படுவதில்லை. ப்ரளய காலத்திலும், அதாவது கல்ப முடிவிலும் ஜீவர்கள் அழிவதில்லை. ஜீவர்களின் தேஹங்களுக்கே கல்பத்தின் தொடக்கத்தில் உத்பத்தியும், கல்ப முடிவில் விநாசமும் ஏற்படுகிறது.

ஸ்ருஷ்டிக்கு முன் சேதநாசேதனங்கள் நாமரூப பிரிவற்றிருக்கும். இப்படி தேஹமற்றிருந்த ஜீவர்களை தேஹத்தோடு சேர்த்து வெளியிடுவதே ஸ்ருஷ்டி. மேலும், ஸூக்ஷ்ம-ஸ்தூல பரிணாமங்களும் ஆத்மாக்களுக்கு இல்லை. எப்போதும் ஏகரூபமாயிருப்பவை. எப்போதும் புதிதாக ஆஶ்சர்யமான வஸ்துவாயிருப்பவை. (ஆகையால் இவ்வாத்ம வஸ்துவை அநுபவிக்கும் கேவலர்க்கு சலிப்பு என்பதே கிடையாது.) ஶரீரம் கொல்லப்படும்போது ஆத்மா கொல்லப்படுவதில்லை. 'நித்யோ நித்யானாம்' என்றபடி ஜீவர்கள் நித்யரே. ஆகவே, பீஷ்ம துரோணாதிகளைக் கொல்லப்போகிறோம் என்று கலங்காதே; அவர்கள் ஶரீரங்களையே நீ கொல்லப்போகிறாய்.

உத்பத்தியாவது என்ன? விநாஶமாவது என்னவெனில் - புதிதாக ஒரு வஸ்து உண்டாவது கிடையாது. உள்ள வஸ்து அடியோடு நசித்துப் போவதும் கிடையாது. ஸத்தான த்ரவ்யத்திற்கு அவஸ்தா விஶேஷங்களே உத்பத்தி விநாஶங்களாம். தேஹம் உண்டாயிற்றென்னா, ப்ருதிவி அப்பு தேஜஸ்ஸு வாயு ஆகாஶம் என்கிற பஞ்சபூதங்களின் அம்ஶங்கள் ஒன்றுசேர்ந்து ஒருவிதமான அவஸ்தையை அடைந்ததென்றபடி, 'மண்ணாய் நீரெரிகால் மஞ்சுலாவும் ஆகாசமுமாம் புண்ணாராக்கை' என்று கலியன் பாசுரம். பாஞ்சபௌதிக பிண்டமான தேஹம் ஆகாஶத்தினின்று குதித்துவிடவில்லை. ஸூக்ஷ்ம அவஸ்தையை விட்டு ஸ்தூல அவஸ்தையை பஜிப்பதுதான் உத்பத்தி; பின் ஸ்தூலாவஸ்தையை விட்டு ஸூக்ஷ்மாவஸ்தையை பஜிப்பதுதான் விநாஸம்.

**வாஸாம்ஸி ஜீர்ணாநி யதா₂ விஹாய நவாநி க்₃ருஹ்ணாதி நரோऽபராணி|**
**ததா₂ ஶரீராணி விஹாய ஜீர்ணாநி அந்யாநி ஸம்யாதி நவாநி தே₃ஹீ|| (2-22)**

(எப்படி ஒருவன் தன் பழைய கிழிந்த வஸ்திரத்தை கைவிட்டு வேறான புதிய வஸ்திரத்தை அணிகிறானோ, அவ்வாறே ஒரு ஜீவன் தன் வயதான உடம்பை கைவிட்டு வேறு புதிய உடலை அடைகிறான்.)

ஆத்மாக்கள் நித்யமே என்பதையும், ஆத்மாவை ஶரீரத்திலிருந்து பிரிப்பதே யுத்தத்தில் நடப்பதென்பதையும் ஒப்புக்கொள்கிறேன். இருந்தாலும் எத்தனையோ போகங்களை அநுபவிக்க ஸாதனமாயிருக்கும் இந்த ஶரீரம் அழியும்போது வருந்துவது ந்யாயம்தானே யெனில் - மனிதன் கிழிந்த வஸ்த்ரத்தை கைவிடும்போது வருந்த இடமில்லை. புதிய வஸ்த்ரத்தை கைக்கொள்ளும்போது ஆனந்தமேயுண்டாகிறது. 'சீர்யதே இதி சரீரம்' என்றபடி ஶரீரம் அழிவதையே இயற்கையாகக் கொண்டதாகையால் இதை கைவிடுவதற்கு

L வெட்டுவதில்லை; நெருப்பு இவ்வாத்மாவை

வருந்தக்கூடாது. அதிலும் பீஷ்மாதி வ்ருத்த *ஶ*ரீரங்கள் சீக்கிரம் அழியக்கூடியதோடு மாத்திரமின்றி, இருக்கும்போதும் இவற்றால் இன்பத்தைவிட துன்பமே அதிகம் என்ன,

அதென்? ஜீவன் கர்மத்திற்கேற்ப எந்த *ஶ*ரீரத்தையுமடையலாம். சக்ரவர்த்தியின் *ஶ*ரீரத்திலிருப்பவன் திர்யக் ஸ்தாவர ஜந்மங்களை அடையக்கூடும். ஆக *ஶ*ரீரத்தை விடும்போது 'எந்த பாப *ஶ*ரீரத்தில் புகப்போகிறோமா' என்று வருந்த இடமுண்டே. மேலும், புதியது என்றால் மட்டும் ஸுகமுண்டோ? பழைய அரண்மனையை விட்டு புதிய சிறைக்கு செல்வதில் இன்பமுண்டோ? வஸ்த்ரம் உடுத்துவதை நேரே காண்பது போல இம்மனித *ஶ*ரீரம் கழிந்தவுடன் புதியதாய் அழகிய *ஶ*ரீரம் ஏற்படுவதை நாம் நேரே காண்பதில்லையே. ஆக, *ஶ*ரீரம் அழிவதைக் குறித்து வருந்துவது ந்யாயமே என்ன,

கண்ணன் கருதும் பதில்: நீ இந்த தர்ம யுத்தத்தில் பிறருடைய *ஶ*ரீரத்தை அவர்களுடைய ஆத்மாவிலிருந்து பிரிக்கப் போகிறாய். தர்ம யுத்தத்தில் *ஶ*ரீரத்தை கைவிடுபவர்களுக்கு வீரஸ்வர்க்கம் கிடைப்பதாக *ஶ*ாஸ்த்ரம் சொல்கிறது. ஆகையால் இப்போதுள்ள மனித *ஶ*ரீரத்தைக் காட்டிலும் அழகியதான தேவாதி *ஶ*ரீரங்களே பீஷ்மாதிகளுக்கு கிடைக்கும். ஆகையால் நீ அது குறித்து இன்பமடைய வேண்டுமேயொழிய வருந்த இடமில்லை.

**நைநம் சி$_2$ந்த$_3$ந்தி *ஶ*ஸ்த்ராணி நைநம் த$_3$ஹதி பாவக:|**
**ந சைநம் க்லேதயந்த் யாபோ ந *ஶோ*ஷயதி மாருத:|| (2-23)**

(கத்தி முதலான ஆயுதங்கள் இவ்வாத்மாவை எரிப்பதில்லை. ஜலம் இவ்வாத்மாவை கரைப்பதில்லை. காற்று இவ்வாத்மாவை உலர்த்துவதில்லை.)

எப்பொருளாலும் ஆத்மாவை நசிக்கமுடியாது. அடுத்த **'அச்சேத்$_3$யோSயம் அ$_3$தாஹ்யோSயம்'** (2-24) எனும் *ஶ்*லோகத்தில் இவ்வாத்மா 'ஸர்வகத: - எல்லா வஸ்துக்களைவிட நுண்ணியனாயிருக்கையால் வ்யாபிக்க வல்லவனாகையால் ஆயுதங்கள் முதலியன ஒரு வஸ்துவை உட்புகுந்து வ்யாபித்து அழிப்பதுபோல் ஆத்மாவை அழிக்க முடியாது என்று ஹேது சொல்லப்பட்டது.

இதுவரை 'அஸ்த$_2$ாந ஸ்நேஹ காருண்ய த$_4$ர்மாத$_4$ர்மதியாSSகுலம்' என்றபடி தகாதவிடத்தில் ஏற்பட்ட அன்பும், வருத்தமும், தர்மத்தை அதர்மமென்று நினைக்கும் மயக்கமும் போக்கடிக்கப்பட்டது. இனி, ஆத்மாவைப் பற்றியறிந்த அர்ஜுநனைப் போன்ற க்ஷத்ரியன் மோக்ஷ ஸாதனமாக ஸ்வதர்மமான யுத்தத்தை அநுஷ்டிக்க வேண்டிய முறையைக் காட்டுகிறான்.

**ஸுக$_2$து$_3$:க்கே$_2$ ஸமே க்ருத்வா லாப$_4$லாலாபெள ஜயாஜயௌ|**
**ததோ யுத்$_3$த$_4$ாய யுஜ்யஸ்வ நைவம் பாப மவாப்ஸ்யஸி|| (2-38)**

(இன்ப துன்பம், லாப நஷ்டம், வெற்றி தோல்விகளை ஸமமாக எண்ணி நீ போர் புரிவாயானால் பாபமடையமாட்டாய்; மோக்ஷமும் கிட்டும்) ஒருவன் கர்மானுஷ்டானம் செய்யும்போது ஸுக து:க்கங்கள், வெற்றி தோல்விகள் நேரிடலாம். அவற்றை பொருட்படுத்தாது இரண்டையும் ஸமமாகக் கருதி விகாரப்படாமல், 'ததோ யுத்தாய யுஜ்யஸ்வ - 'போர்புரிதல் க்ஷத்ரிய தர்மம்' என்று போர் செய்வாயானால், உன் ஸ்வதர்மத்தை யநுஷ்டித்தாயானால் 'நைவம் பாபம் அவாப்ஸ்யஸி' - நீ பாபம் அடையமாட்டாய். அதாவது பாபம் எனப்படும் ஸம்ஸாரத்தை யடையமாட்டாய். பாபம் என்று பாபபலனான ஸம்ஸார துன்பத்தைச் சொல்கிறது. ஸம்ஸார ஸம்பந்தம் நீங்கவே, மோக்ஷமும் கைகூடும் என்று தாத்பர்யம். கர்மயோகம், ஜ்ஞானபக்தி யோகங்களை விளைத்தே மோக்ஷ ஸாதனமாகின்றதாகையால், இது பரம்பரையா மோக்ஷ ஸாதனமாகிறது என்று கருத்து.

கீழே, 'அர்ஜுநா! அறிவிலிகள் வேதத்தில் கர்மகாண்டத்தில் சொல்லப்படும் காம்ய கர்மாக்களில் மயங்கி அவற்றைச் செய்வதில் ஊக்கமுடையவராயிருக்கிறார்கள். இஹலோக ஐச்வர்யமாகட்டும், பரலோக ஸ்வர்க்கமாகட்டும் அவைகள் பிறவிகளைத் தருமவையென்று சொல்லி, பிறகு **'த்ரை கு$_3$ண்ய விஷயா வே$_3$தா' (2-45)** - ஸத்வம் ரஜஸ் தமஸ் என்கிற முக்குணங்களுடைய சேதநர்களை விஷயமாகக் கொண்டவை வேதங்கள் என்கிறான். வேதங்கள் ஸாத்விகர்களுக்கு மட்டும் வழிகாட்டுகின்றன என்றில்லை. லோகத்தில் சேதநர்கள் சிலரே ஸாத்விகர்களாயும், பலர் ராஜஸ தாமஸர்களாயுமிருக்கக் காண்கிறோம். ஆயிரம் தாய் தந்தையரைக் காட்டிலும் வாத்ஸல்யம் மிக்க வேதத்திற்கு எல்லோர்க்கும் வழிகாட்டியாக இருக்கவேண்டிய நிர்ப்பந்தம் உள்ளது. வாதம் பித்தம் கபம் என்று ஒவ்வொன்றில் விஞ்சியிருக்கப் பெற்றவர்களுக்கு தக்கவாறு வைத்தியன் உணவையும் மருந்தையும் சொல்வது போலே, அவரவர் குணங்களுக்கேற்ப அவரவர் விரும்பும் பலனின் ஸாதனங்களை வேதங்கள் உபதேசிக்கின்றன. தமோ குணம் நிறைந்தவர்களுக்கு, அவர்கள் விரும்பும் இம்மைப் பலன்களைப் பெறுவதற்கு ஸாதனங்களைச் சொல்கின்றன. ரஜோ குணம் நிறைந்தவர்க்கு, அவர்கள் விரும்பும் ஸ்வர்க்காதி மறுமைப் பலன்களையடைய ஸாதனங்களைச் சொல்கின்றன. ஸத்வகுணம் விஞ்சியிருக்கப் பெற்றவர்களாய் மோக்ஷத்தில் ஆசையுடைய சிலருக்கு, மோக்ஷ ஸாதனங்களை உபதேசிக்கின்றன. எல்லோர்க்கும் மோக்ஷ ஸாதனங்களையே உபதேசித்தால், அதில் ஊற்றமற்ற ராஜஸ தாமஸர்கள் தாங்கள் விரும்பும் பலன்களுக்கு ஸாதனங்களையறியாமல், அவற்றைப் பெறுதற்கு கைக்கொள்ளத் தகாத முறைகளைப் பின்பற்றி ஸ்வரூப நாசத்தையடையக்கூடும். ஆகையாலேயே வேதங்கள் காம்ய கர்மங்களையும் உபதேசிக்கின்றன.

பலசரக்கு கடைகளில் சர்க்கரை வெல்லம் குங்குமப்பூ கடுகு மிளகு சீரகம் முதலிய எல்லாப் பொருள்களும் (நேர்வாளமுட்பட) விற்கப்படுவதுபோல, வேதங்கள் முமுக்ஷுக்களுக்கும் வழிகாட்டுகின்றன; புபுக்ஷுக்களுக்கும் வழிகாட்டுகின்றன; பரஹிம்ஸைக்குரிய உபாயங்களையும் (அபிசார கருமங்களையும்) காட்டுகின்றன. வேதம் காட்டுமவற்றையெல்லாம் நாம் கைக்கொள்ள வேண்டிய அவ*ஶி*யமில்லை. கடையில் விற்கப்படும் விஷத்தையுமா நாம் வாங்கிக் கொள்கிறோம். இல்லையே. அதுபோல ராஜஸ தாமஸர்களுக்கு வேதம் காட்டும் வழிகளை ஸாத்விகர்கள் பின்பற்றலாகாது. 'முக்குணத்திரண்டவை யகற்றி ஒன்றினில் ஒன்றி நின்று' என்ற கலியன் பாசுரத்தின்படி ரஜஸ்தமோ குணங்களை விட்டு ஸத்வ குணமொன்றிலேயே ஊன்றியிருக்க வேணும். **யாவாநர்த்த$_2$ உத$_3$பாநே ஸர்வத: ஸம்ப்லுதோத$_3$கே| தாவாந் ஸர்வேஷு வேதே$_3$ஷு ப்$_3$ராஹ்மணஸ்ய விஜாநத:||** (2-46) நிறைந்த நீர்நிலையில் யாதோரளவு ப்ரயோஜநம் கொள்ளும், அறிவுடைய ப்ராஹ்மணனுக்கும் வேதங்களிலும் அவ்வளவே ப்ரயோஜநம். ஆகவே, நீ ஆத்ம ஸ்வரூபத்தை தேடுவதிலேயே ஊற்றமுள்ளவனாய் ஆனாயாகில் ரஜஸ்தமங்கள் தன்னடையே குறைந்து ஸ்த்வகுணம் வளரப்பெறுவாய். மற்ற விஷயங்களைப் பெறுவதில் முயற்சியற்றவனாய் ஆவாய்.

பின்பு, ஸத்வகுணம் வளரச் செய்யும் வழிகளைக் கூறுகிறான். சரீரத்தை வளர்ப்பதிலேயே நோக்கம் கூடாது. ஆத்மாவை வெய்யிலில் வைத்து சரீரத்தை நிழலில் வைத்தல் கூடாது. உன் ஆத்ம க்ஷேமத்திலேயே நோக்காயிருக்க வேணும். சரீரம் தரிப்பதற்கு கிடைத்ததைக்கொண்டு த்ருப்தியடைய வேணும். ஆஹார *ஶு*த்$_3$தெ$_4$ள ஸத்வ *ஶு*த்$_3$தி$_4$ – ஸத்வ குணத்தை வளர்க்கும் பதார்த்தங்களையே புசிக்க வேணும். ஈ*ஶ்*வரனுக்கு ஸமர்ப்பியாத ஆஹாரத்தை புசிப்பதால் பாபத்தையே புசிப்பாய். ஸத்வ குணமுடையவன் 'தான்' 'தனது' எனும் அஹங்கார மமகாரமற்றிருக்க வேணும். கர்மயோகம் செய்பவனுடைய புத்தி மோக்ஷமொன்றிலேயே ஊன்றியிருக்கும். நீ ஸத்வ குணம் விஞ்சியிருப்பவன். ஆகவே காம்ய கர்மாக்களை விட்டு கர்மயோகத்தையே செய்வாய் என்று சொல்லி முடித்தான். இதைக் கேட்ட அர்ஜுநன் 'நாம் காம்ய கர்மாக்களையெல்லாம் விட்டு மோக்ஷ ஸாதமான கர்மயோகத்தையே செய்வோம்' என்று நினைக்க, அர்ஜுநா! நீ நித்ய நைமித்திக கர்மாக்களைச் செய்தேயாக வேண்டும். ஆனால் அவைகளின் பலன்களில் உனக்கு ஸம்பந்தம் கூடாது என்கிறான்.

**கர்மண்யேவ அதி$_4$காரஸ் தே மா ப$_2$லேஷு கதா$_3$சந|**
**மா கர்மப$_2$லஹேதுர் பூ$_4$: மா தே ஸங்கோஸ்தவ கர்மணி||** (2-47)

(நித்யம் நைமித்திகம் காம்யம் எனப்படும் கர்மங்களைச் செய்வதில் மாத்திரம் உனக்குத் தகுதியுண்டு. அவற்றின் பலனில் கண் வையாதே. கர்மம் செய்வதற்கும், பலத்திற்கும் நீ காரணமென்று நினையாதே.)

ஸந்த்யாவந்தனம், பகவதாராதனம் முதலியன நித்ய கர்மங்கள்; அமாவாசை க்ரஹண தர்ப்பணம் போன்றவை நைமித்திக கர்மங்கள்; வருண ஜபம், புத்ரகாமேஷ்டி யாகம் போன்றவை காம்ய கர்மங்கள். ஸத்வநிஷ்டனான முமுக்ஷுவானவன் நித்யம், நைமித்திகம், காம்யம் என்று சொல்லப்படுகிற கர்மங்களை யதாசக்தி கர்மஸ்வரூப மாத்ரேண அநுஷ்டித்துப் போரவேணும். இவற்றின் ஸ்வரூபங்களிலே இவனுக்கு அதிகாரமே தவிர, பலன்களில் இல்லை. கர்மம் ஒவ்வொன்றுக்கும் தனித்தனியே பலனுண்டு என்பது ஶாஸ்த்ர ப்ரஸித்தம். இப்பலன்கள் முமுக்ஷுவினுடைய மோக்ஷ பலனுக்கு முரணானவையாகையாலே, முமுக்ஷுவானவன் அக்கர்ம பலன்களில் மனஸை வைத்தல் தகாது. கர்மங்களை யநுஷ்டிக்கும்போது அவற்றை பகவத்ப்ரீதிக் குறுப்பாக பகவதாராதனமாக ஸ்வரூப மாத்ரம் அநுஷ்டித்துப் போர வேணும்.

பலனை விரும்பாதே என்று சொல்லப்படுகிறதா? அன்றி, பலன் கிடைத்தாலும் அதை அநுபவிக்கலாகாது என்று சொல்லப்படுகிறதா? என்று விமர்சித்தால் 'ப்ரயோஜந மநுத்₃தி₃ஶ்ய ந மந்தே₃ாபி ப்ரவர்த்ததே' என்று, பலனை விரும்பாமல் மூடன்கூட ஒரு காரியத்தில் இழியான் என்று ஶாஸ்த்ரமே சொல்லுகையாலே, பலனை விரும்பக்கூடாதென்கை பொருந்தாது. பலன் கிடைத்தால் அதை அநுபவியாமல் விட்டுவிடுவது புருஷ தந்த்ரமன்றே. ஸுகமோ துக்கமோ எது நேர்ந்தாலும் அநுபவித்துக் கொண்டுதானே யிருக்கிறோம். அநுபவிப்பதும் விட்டுவிடுவதும் நம் இஷ்டமன்றே. ஆகவே, பலன் கிடைத்தாலும் அதனை அநுபவிக்கலாகாதென்று சொல்லப்படுவதாகக் கொள்வதற்கும் ஔசித்யமில்லை. பின்னை யாது பொருளென்னில் – செய்கிற காரியங்களுக்குப் பலன் கிடைத்தே தீரும்; பலனை நீ கோலாதே. உன்னுடைய அற்ப புத்தியினால் கோலுவாயாகில் க்ஷுத்ர பலனுக்கு மேற்பட உத்தம பலனைக் கோலுவதற்கு உனக்குத் தெரியாது. அந்தப் பொறுப்பை என்னிடமே விட்டுவிடுவாயானால் என் கருத்தால் உத்தமமான பலனே உனக்குக் கொடுக்கப்படும் – என்று. இங்ஙனம் திருவுள்ளம் பற்றியே 'மா ப₂லேக்ஷு கதா₃சந' என்றருளிச் செய்யப்பட்டது.

மா கர்மப₂லஹேதுர் பூ₄: – கர்மங்களுக்கும் ப₂லங்களுக்கும் நீ ஹேதுவாக நினையாதே. ஒரு செயல் இந்த்ரியங்களாலே செய்யப்படுகிறது. மனஸ் புத்தி அதற்கு உதவி செய்யும். இவைகளுக்கு மூல காரணம் நமக்குள்ள ஸத்வரஜஸ் தமோ குணங்களேயாம். ஆக, முக்குணங்கள் கர்ம ப₂ல ஹேதுவாகின்றன. ஜீவன் தானாகச் செய்கிறான் என்பதில்லை. சரீரத்தை விலக்கிப் பார்த்தால் எல்லா ஜீவாத்மாக்களும் ஜ்ஞானத்தில் ஒரே

ஆகாரமுள்ளவை. ஜீவனே ஒரு செயலைச் செய்வதாயிருந்தால் எல்லோரும் ஒரே மாதிரியாகச் செயல்புரியவேணும். மேலும், ஒருவனே ஒரு ஸமயம் செய்வது போல மற்றொரு ஸமயம் செய்வதில்லை. ஆக ஜீவன் காரணமில்லை. குணங்களே காரணம். ஓரிடத்தில் கிணற்றின் தண்ணீர் வெளுப்பாகவும் ருசியுடனும் உள்ளது. மற்றோரிடத்தில் தண்ணீர் மஞ்சள் நிறமாய் உவர்ப்பாயுள்ளது. ஏன்? அந்தந்த விடங்களிலுள்ள மண் ஸம்பந்தத்துக்குச் சேர அவ்வாறுள்ளது. அதேபோல் ப்ருக்ருதியினாலான சரீர ஸம்பந்தத்தினால் உண்டான முக்குணத்துக்குச் சேர நம் செயல் அமைவதால் 'ஜீவன் செய்தான்' என்பதில்லை. 'ஸர்வேஶ்வரனே கர்ம ப$_2$லங்களுக்கு ஹேதுவாகிறான்' என்று அநுஸந்திக்க வேணும். பின்னே **'அஹங்கார விமூட$_4$ாத்மா கர்த்தாஹமிதி மந்யதே'** (3-27) - தேஹாத்மாபிமானியானவன் 'நானே செய்கிறேன்' என்று எண்ணுகிறான் – என்று சொல்லப் போகிறான். உண்மையில் ஜீவனுடைய கர்த்ருத்வம் பரமாத்மாவின் வசப்பட்டதே; எல்லாச் செயல்களையும் கர்மாநுகுணமாகச் செய்விக்கிறான் என்று சாரீரகத்தில் (2-3-20) அறுதியிடப்பட்டது.

ஆக, 'நான் யுத்தம் செய்யமாட்டேன்' என்று முன் சொன்னபடி போர் புரியாமையில் பற்றைவிட்டு, யுத்தம் முதலான உன் வர்ணாஶ்ரம தர்மங்களைச் செய்வதிலேயே ஈடுபடுவாயாக என்று கருத்து.

கர்மயோகத்தை கர்த்ருத்வ ப$_2$ல மமதா த்யாகங்களுடன் செய்யவேணும்; தான் செய்வதாக நினைப்பதை விடவேணும். செயல் பலனில் இச்சை கூடாது. பலன் கிடைத்தாலும் கிடையாவிடிலும் மகிழ்ச்சியோ வருத்தமோயின்றி ஸமநிலையில் இருக்க வேணும் – ஜனகர் பற்றுதலின்றி ராஜ்ய பரிபாலனம் செய்ததுபோலே; 'நானும் ராமனக்குரியவன், ராஜ்யமும் ராமனுடையது' என்று அஹங்கார மமகாரங்களை விட்டிருந்த பரதனைப்போலே (2-48). ஓர் பலனை விரும்பிச் செய்யும் கர்மாவுக்கும், பலனை விரும்பாமல் செய்யும் கர்மயோகத்திற்கும் நெடுவாசியுண்டு. கர்மயோகம் நம்மை மேன்மேலும் உயர்த்தி உன்னத நிலையான மோக்ஷத்தில் கொண்டுபோய்ச் சேர்க்கும். கர்மமோவெனில் நம்மை ஸம்ஸாரமாகிற படுகுழியில் தள்ளும். ஒருவன் காமத்துக்காக பத்னியைத் தழுவுதல் துஷ்டம்; ஒருவன் தான் பெற்று வளர்த்த புத்ரியைத் தழுவுதல் உத்க்ருஷ்டம் – நினைவு வேறுபடுவதால். ஆகையால் நீ இந்த நினைவுடன் கர்மயோகத்தைச் செய்வாய் (2-49).

புண்ய பாபமிரண்டும் மோக்ஷத்திற்கு தடை. புண்யம் பொன் விலங்கு என்றால், பாபம் இரும்பு விலங்கு. இப்படி புண்யபாபமிரண்டும் விலகப் பெற்றவன் மறுபிறவியின்றி **'அநாமயம் பதம் கச்சந்தி'** (2-51) – மோக்ஷமடைகிறான். ஒருவன் மோக்ஷம் பெற விஷய வைராக்யம் (உலகப்பற்றை விடுதல்) மிகவும் அவசியம். பகவானைப் பற்றவேணும் (2-52). 'வீடுமின் முற்றவும், வீடு செய்து, உம்முயிர் வீடுடையானிடை வீடு செய்மினே' – உலக விஷயப்

பற்றை முற்றிலும் விட்டு உங்கள் ஆத்மாவை தனக்கிருப்பிடமாய் உடைய பகவானிடம் ஸமர்ப்பியுங்கள் என்றருளிச் செய்தார் ஆழ்வார். ப$_4$க$_3$வத்விஷயத்தில் ப்ராவண்யம் ப$_4$க$_3$வத் ப்ரஸாத ப$_2$லம்; அதுபோலே விஷயாந்தரங்களில் விரக்தியும் ப$_4$க$_3$வத் ப்ரஸாத ப$_2$லம். ருசி உத்பாதகனும் அவனே; ப்ராப்தியை பண்ணிக்கொடுப்பானும் அவனே. ஆக, பகவானை ப்ரார்த்தித்ததே நாம் விஷய வைராக்யத்தையும் அவனிடம் பக்தியையும் பெறவேணும்.

**ராக$_3$ த்வேஷ வியுக்தைஸ்து விஷயாந் இந்த்ரியைஶ் சரந்|**
**ஆத்மவஶ்யைர் விதே$_4$யாத்மா ப்ரஸாத$_3$ம் அதி$_4$க$_3$ச்ச$_2$தி|| (2-64)**

(என் அருளாலே ராகத்வேஷங்கள் நீங்கப்பெற்று, தனக்கு வசப்பட்டிருக்கும் இந்த்ரியங்களாலே ஶப்தாதி விஷயங்களைக் கடந்து மனஸ்ஸை அடக்கிய புருஷன் மனத்தெளிவை யடைகிறான்) 'ஆத்ம தர்ஶனம் ஏற்பட்டால்தான் இந்த்ரிய ஜயம் ஏற்படும்; இந்த்ரிய ஜயம் உண்டானால்தான் ஆத்மதர்ஶனம் ஏற்படும்' என்பது **அந்யோந்ய ஆஶ்ரயதோஷம்.** இந்த தோஷ பரிஹார வழி இங்கு அருளிச் செய்யப்படுகிறது.

நெஞ்சுக்கு ஶுப$_4$ாஶ்ரயமான என் திருமேனியில் உன் மனதைச் செலுத்தினால் ரஜஸ்தமஸ் முதலான தோஷங்கள் நீங்கி, அதனாலேயே ராகத்வேஷங்களும் கழியப்பெற்று இந்த்ரியங்களை வென்று உன் வசப்படுத்துவாய். இப்படி வெளி இந்த்ரியங்களையும் அவற்றின் புலன்களையும் வென்று நிற்கையாலே, உனக்கு வசப்பட்டிருக்கும் நெஞ்சைக் கொண்டு மனத்தெளிவை யடைவாய். ஆக, பகவானது திவ்யமங்கள விக்ரஹத்தில் நெஞ்சு செலுத்தியவனுக்கு மனம் முதலான இந்த்ரியங்களிலுள்ள அழுக்குகள் நீங்கி, இந்த்ரிய ஜயம் ஏற்பட்டு, ஆத்மதர்ஶனம் தன்னடையே ஸித்திக்கும் என்றுணர்த்தப்படுகிறது. சமதமங்கள் அங்குரிப்பது பகவத் கடாக்ஷத்தாலே. அவை வர்த்திப்பது ஆசார்ய உபதேஶாதிகளாலே. அவற்றின் அபிவ்ருத்தி இவனது குறிக்கோளாம். (இங்கு இந்த்ரிய ஜயத்தைச் சொல்லும் ப்ரகரணமாகையால், ஆத்ம ஶப்தம் மனதையே குறிக்கும்.)

பல நதிகள் **'ஆபூர்யமாணம் அசலப்ரதிஷ்ட்டம்'** (2-70) என்னும்படியான கடலில் வந்து விழுந்தாலும் கடல் எப்படி கலங்குவதில்லையோ, அதுபோல ஞானியின் மனம் விஷயங்களினால் சிறிதும் கலக்கமடைவதில்லை.

ஆக, இவ்வத்யாயத்தில் நித்யமான ஆத்மாவைப் பற்றிய உண்மையறிவு விளக்கப்பட்டது. பின்பு, இவ்வாத்ம ஜ்ஞானத்தை முன்னிட்டுக் கொண்டு யுத்தம் முதலான வர்ணாஶ்ரம தர்மங்களை பலனில் ஆசையின்றி அனுஷ்டிப்பதாகிற கர்மயோகம் **'ஸ்தி$_3$தப்ரஜ்ய நிலை'** எனப்படும் ஜ்ஞான யோகத்தை அடைவிக்கிறது என்று கூறப்பட்டது. அதாவது கர்மயோகத்திலும் ஜ்ஞான யோகமே சிறந்தது என்று பொருள்படும்படி கூறி முடிக்கப்பட்டது.

* * * * *

# மூன்றாம் அத்யாயம் — கர்மயோகம்

43 ஶ்லோகங்களுடைய இவ்வத்யாயம் கர்மயோகம் என்றழைக்கப்படுகிறது – இதில் கர்மயோகத்தின் பெருமை கூறப்படுவதால். ஶரீரம் வேறு ஆத்மா வேறு, ஶரீரம் அழியக்கூடியது ஆத்மா அழிவில்லாதது என்கிற ஜ்ஞானத்துடன் அவரவர்க்குரிய வர்ணாஶ்ரம தர்மத்தை பலனில் இச்சை இல்லாமல் செய்யும் செயல் 'கர்மா' எனப்படும். மேற்சொன்ன ஶரீராத்ம விவேகத்துடன் ஆத்மா ஜ்ஞானமயன், ஆனந்தமயன், தோஷம் தட்டாதவன், பகவானுக்கு ஶேஷபூதன் (அடிமை) என்கிற ஆத்மயாதாத்ம்ய ஜ்ஞானத்துடன் பலனை இச்சியாமல் பகவானுடைய முகமலர்ச்சிக்காகவே வர்ணாஶ்ரம தர்மங்களை யநுஷ்டிப்பது 'கர்மயோகம்' எனப்படும். ஆனால் இந்த மூன்றாம் அத்யாயத்தில் சொல்லப்படும் கர்மயோகமோ வெனில், 'பகவத் ஶரீர பூத: ஜீவ: – பகவானுக்கு ஆத்மா ஶரீரம் – என்பதை எப்போதும் மனதில் கொண்டு கர்மயோகம் செய்பவனுக்கு வேறு தனித்து ஜ்ஞானயோகம் வேண்டாம்; இந்த கர்மயோகத்திலேயே ஜ்ஞானமும் அடங்கிவிடுகிறது என்று சொல்லப்படுகிறது.

'கேசவா! கர்மயோகத்தைவிட ஜ்ஞான யோகமே சிறந்ததாகத் தோன்றுகிறதே. ஆத்ம சிந்தனம் நிவ்ருத்தி ரூபமாயிருக்கும் – வெளி இந்த்ரியங்கள் செயல்படாத நிலை. கர்மாநுஷ்டானம் ப்ரவ்ருத்தி ரூபம் – இந்த்ரியங்கள் செயலில் ஊன்றும் நிலை. ப்ரவ்ருத்திரூபமான கர்மா நிவ்ருத்திரூபமான ஞானத்தில் எப்படிக் கொண்டுபோய்விடும்? குழப்பமாயுள்ளதே. எதனால் ஶ்ரேயஸ் ஏற்படும் என்று நிஶ்சயித்துச் சொல்' என்று கேட்கிறான். 'என்னை கர்மாநுஷ்டானத்தில் நியமிக்கவேண்டாம்; ஞானயோகத்தையே நேரே அநுஷ்டிக்க அநுமதி பண்ணுவாய்' என்று கேட்பதுபோல் தோன்றுகிறது.

கண்ணன் பதில்: கர்மாநுஷ்டானம் ஜ்ஞானத்திற்கு உதவி செய்வதேயன்றி விருத்தமன்று. விஷயங்களால் கலங்கிய மனதையுடையவனுக்கு பகவதாராதனமான கர்மயோகத்தை அநுஷ்டித்த பின்பே, அக்கலக்கம் நீங்கி ஞானநிஷ்டையுண்டாகும். ஆத்ம யாதாத்ம்ய ஞானமும், இந்த்ரிய ஜயமும் ஜ்ஞானயோகம் செய்பவனுக்கு வேண்டும். ஆதலால் முதலில் கர்மயோகத்தைச் செய்து இவைகளைப் பெற்றவனே ஜ்ஞானயோகம் செய்யத் தகுதியானவன். **'நஹி கஶ்சித் க்ஷணமபி ஜாது திஷ்டத்ய கர்மக்ருத்'** (3-5) – ஶரீரம் பெற்ற ஜீவன் எவனும் ஒரு க்ஷணமும் ஒரு செயலையும் செய்யாமலிருக்க முடியாது. தூங்கும்போதும் தூக்கமாகிய கர்மத்தை (செயலை) செய்து கொண்டிருக்கிறாய். கை கால் முதலிய கர்மேந்த்ரியங்களை அடக்கினாலும், மனமானது விஷயங்களை நினைப்பதாகிய செயலைச் செய்து கொண்டேயிருக்கும். ப்ரக்ருதியிலிருந்து உண்டாவது இந்த ஶரீரம். ப்ரக்ருதியிலுள்ள ஸத்வரஜஸ் தம குணங்கள், ஜீவர்களின் பூர்வ கர்மங்களுக்கேற்ப

ஏற்றத்தாழ்வுகளுடன் இந்த ஶரீரத்திலுள்ளது. குணைர் கர்ம கார்யதே - இந்த குணங்களால் கர்மங்களைச் செய்யும்படி நீ தூண்டப்படுகிறாய். அவஶ: கார்யதே - உன்னையும் மீறி ரஜஸ்தம குணங்களாலே நீ ஆட்டிவைக்கப் படுகிறாய். ஆகவே, முக்குண வசப்பட்டிருக்கும் நீ ஸத்வ குணத்தை வளர்க்கும் கர்ம யோகத்தை யநுஷ்டித்து ரஜஸ்தம காரியங்களை குறைத்தால்தான், ஜ்ஞானயோகத்திற்குத் தடையான ராகத்வேஷங்கள் நீங்கப்பெற்று ஜ்ஞானயோகம் கைகூடும். நேரே ஜ்ஞானயோகத்தில் இழிந்து கர்மேந்த்ரியங்களை அடக்க நினைத்தால், மனதிலுள்ள ரஜஸ்தமஸ்ஸுக்கள் குறையாமையாலே, ஶப்தாதி விஷயங்களை மனதாலே நினைத்துக் கொண்டு பகவதாராதனமான கர்மயோகத்தையும் அநுஷ்டியாது பொய்யொழுக்க முடையவன் ஆவாய்.

**'நியதம் குரு கர்ம த்வம்'** (3-8) உனக்குப் பழக்கமான கர்மயோகத்தையே நீ செய்வாய். ப்ரக்ருதி ஸம்பந்தம் பெற்ற ஜீவனுக்கு இந்த்ரியங்களை அடக்கிச் செய்யும் ஜ்ஞானயோகத்தைவிட இந்த்ரியங்களைக் கொண்டு செய்யும் கர்மயோகமே ஏற்றதாகும். ஞானயோகம் கம்பியின் மேல் நடப்பது போலே ஆபத்தானது. கர்மயோகம் தரையில் நடப்பது போலே பழக்கமானது, ஸுலபம். விஷயங்களில் பாய்ந்து திரியும் இந்த்ரியங்களை அடக்குவதற்கு கர்மாவில் ஊன்றவேண்டியது அவஶியம். அர்ச்சனம் என்கிற ஒரு கர்மாவையெடுத்துக் கொண்டால், கண் எம்பெருமான் திருவடிகளில் லயிக்கும்; வாய் திருநாமங்களைச் சொல்லும்; கை புஷ்பங்களை திருவடிகளில் சேர்க்கும். இதர விஷயங்களில் கவனம் செல்ல வாய்ப்பில்லை. இப்படி பழக்கமானால் மற்றைய (விடவேண்டிய) ப்ரவ்ருத்திகளினின்று இந்த்ரியங்கள் நிவ்ருத்தியடையும்.

ஜ்ஞான மார்க்கத்தில் செல்பவனுக்கு சரீர தாரணத்திற்கு அன்னம் வேண்டும். பகவந் நிவேதிதமான ஆஹாரமே ஸத்வகுணத்தை வளர்க்குமாகையால் ஜ்ஞான யோகியும் பகவதாராதனமான கர்மாவைச் செய்பவனே. ஞானநிலை உயர்ந்த ஸ்தானம். அதற்கு படிப்படியாகத்தான் ஏற வேண்டும். விஹித கர்மாநுஷ்டானமே அந்த ஸ்தானத்துக்கு ஏறும் படிகள். நேரே ஜ்ஞான யோகத்திற்கு போக உனக்குத் தகுதியில்லை. கர்மாநுஷ்டானம், சித்த ஶுத்தி, ஆத்மானுபவத்தில் இச்சை, ரஜஸ்தமஸ் ஒழிகை, ராகத்வேஷங்கள் நசிகை, இந்த்ரியங்களும் மனஸ்ஸும் கலக்கமற்று நிலைபெற்றிருக்கை, ஆத்மஸாக்ஷாத்காரம் என்று ஏழாவது ஸ்தானத்திற்கு படிப்படியாகவன்றி நேரே செல்ல இயலாது. ஆதலால் உனக்கு கர்மாநுஷ்டானமே ஏற்றது.

**'கர்மணைவ ஹி ஸம்ஸித்₃தி₄ம் ஆஸ்தி₂தா ஜநகாத₃ய:'** (3-20) கர்மாநுஷ்டானத்தினால் ஆத்மப்ராப்தியாகிய பயனைப் பெற்றோர் ஜநகரைப்போலே பலருண்டு - இக்ஷ்வாகு, ரகு, திலீபன், அம்பரீஷன் முதலானோர். உலகத்தவர்

நலனுக்குக்காகவாவது (அவர்கள் உன்னைப் பார்த்து கெடாமலிருக்க) நீ கர்மாநுஷ்டானத்தைச் செய்யவேண்டும்.

**யத்$_3$யத்$_3$ ஆசரதி ஶ்ரேஷ்ட்ட$_2$ஸ் தத்தத்ஏவ இதரோ ஜந:|**
**ஸ யத்ப்ரமாணம் குருதே லோகஸ் தத்$_3$ அநுவர்த்ததே|| (3-21)**

(ஜ்ஞானம் அநுஷ்டானம் இவற்றால் ஶ்ரேஷ்டனானவன் எந்த எந்த கர்மங்களை யநுஷ்டிக்கிறானோ, அந்த அந்த கர்மங்களையே ஸாமாந்ய ஜனமும் அநுஷ்டிக்கிறது. அந்த ஶ்ரேஷ்டன் அக்கருமத்தை எந்த அளவாக அநுஷ்டிக்கிறானோ, ஸாமான்ய ஜனமும் அந்த அளவே அநுஷ்டிக்கிறது.) இந்த ஶ்லோகம் சிஷ்டாசாரத்தின் சிறப்பை தெரிவிப்பது. சிறந்தவனுடைய அநுஷ்டானத்தையே தாழ்ந்தவர்கள் பின்பற்றுகிறார்கள் என்கிறான். தர்மஜ்ஞ்ய ஸமய: ப்ரமாணமிறே. 'மேலையார் செய்வனகள்' என்றாள் ஆண்டாள்.

ப்ரதான கர்மமாகிற அங்கி விஷயத்தில் மட்டுமன்று, அப்ரதானமான அங்கங்கள் விஷயத்திலும் ஶ்ரேஷ்டாநுஷ்டானத்தையே பிறரும் பின்பற்றுகிறார்கள். அதாவது ஶ்ரேஷ்டன் எந்த அங்கங்களோடு கூடியதாக அவ்வக் கருமத்தையநுஷ்டிக்கிறானோ, அந்த அங்கங்களோடு கூடியதாகவே மற்றவர்களும் அவ்வக் கருமத்தை யநுஷ்டிக்கிறார்கள். 'மாலே மணிவண்ணா' பாசுரத்தில் ஆண்டாள், 'மேலையார் செய்வனகள் கேட்டியேல்' என்னுமளவே சொல்லப் போதுமாயிருக்க, இடையில் 'வேண்டுவன' என்று ப்ரயோகித்திருப்பது – சிஷ்டர்கள் தாங்கள் அநுஷ்டிக்கிற கருமத்திற்கு எவ்வளவு அவதி வைத்துக் கொள்கிறார்களோ அவ்வளவு அவதியையே பிறரும் வைத்துக் கொள்கிறார்கள் என்றபடி. 'க்ரியமாணம் ந கஸ்மைசித் யதர்த்தாய ப்ரகல்பதே, அக்ரியாவத் அநர்த்தாய தத்து கர்ம ஸமாசரேத்' என்கிற வசனத்தை மேலையார் நன்கறிந்தவர்களாகையாலே, எந்த கர்மங்களுக்கு ஒரு பலனுமிராதோ அகர்ணே ப்ரத்யவாயம் இருக்குமோ, அந்த கர்மங்களை மட்டும் அவஹிதர்களாய்ச் செய்துபோருவர். அதையே லோகமும் அநுவர்த்திக்கும். வேண்டாதவற்றை விட்டு 'வேண்டுவன' செய்வர் மேலையார்.

இப்படி உலகினர் ஶ்ரேஷ்டனுடைய அநுஷ்டானத்தைப் பின்பற்றும் நிலையில் இருக்கையால், அவ்வுலகினரைக் காப்பாற்றுவதற்காக ஶ்ரேஷ்டனானவன் தன் வர்ணாஶ்ரமங்களுக்குரிய கர்மங்களை ஆத்மதர்ஶனம் பெறும் வரையில் அநுஷ்டிக்க வேணும். தன்னை ஜ்ஞாநயோகாதிகாரியாக எண்ணி அவன் கர்மயோகத்தை அநுஷ்டியாதொழிந்தால் உலகினரைக் கெடுத்ததாலுண்டான பாபம் அவனை ஜ்ஞாநயோகத்தினின்று நழுவச் செய்துவிடும் என்று கருத்து. 'யே தத்ர ப்$_3$ராஹ்மணா: ஸம்மர்ஶிந: யுக்தா ஆயுக்தா:, அலூக்ஷா த$_4$ர்மகாமா: ஸ்யு: யதா தே தத்ர வர்த்தேரந், ததா தத்ர வர்த்தேத$_2$ா:' (ஆராய்ச்சியில் வல்லவர்களாய், சாஸ்திரஜ்ஞர்களாய், காம க்ரோதாதிகள்

அற்றவராய், அறத்தில் விருப்பமுள்ளவரான வைதிகர்கள் நடக்கிற வழியிலே நீயும் நடப்பாய்) எனும் வேதவிதியைத் திருவுள்ளத்தில் கொண்டேயருளிச் செய்யப்பட்டது இச்சுலோகம். (இங்கு *ஶ்*ரேஷ்ட *ஶ*ப்தம் *ஶ*ாஸ்த்ரங்களையறிந்து அவற்றை யநுஷ்டித்துப் புகழ்பெற்ற ப்ர*ஶஸ்*யதமனையே குறிக்கும்.)

**ந மே பார்த்த₂ாஸ்தி கர்த்தவ்யம் த்ரிஷு லோகேஷு கிஞ்சந|**
**நாநவாப்தம் அவாப்தவ்யம் வர்த்த ஏவ ச கர்மணி|| (3-22)**

(பார்த்தா! எனக்குச் செய்யவேண்டிய கர்மம் மூவுலகிலும் ஒன்றுமில்லை; என்னால் அடையப்படாததும் இனி அடையவேண்டியதும் ஒன்றுமில்லை; எனினும், நான் அவதரித்திருக்கும் வர்ணா*ஶ்*ரமங்களுக்குரிய கர்மத்தில் நிலைநிற்கவே செய்கிறேன்.) இதில் பகவான் தானும் கர்மாநுஷ்டானத்தில் ஊன்றியிருப்பதாக (ஏவகாரமிட்டு) வலியுறுத்திச் சொல்கிறான். 16108 மனைவிமாரோடு 16108 திருமேனிகளைக் கொண்டு கண்ணன் வர்ணா*ஶ்*ரம தர்மத்தை யநுஷ்டித்துக் கொண்டிருந்ததை நாரதர் நேரில் ஸாக்ஷாத்கரித்ததாக ஸ்ரீபாகவதம் சொல்கிறது. ஸ்ரீராமாவதாரத்தில் வி*ஶ்*வாமித்ர முனிவன், கௌஸல்யா ஸுப்ரஜா ராம பூர்வா ஸந்த்$_4$யா ப்ரவர்த்ததே| உத்திஷ்ட$_2$ நர*ஶ*ார்த்தூ$_3$ல கர்த்தவ்யம் தை$_3$வமாஹ்நிகம்|| - ப்ராதஸ் ஸந்த்யாநுஷ்டாநம் செய்யவேணும், அதற்காக எழுந்திராய் - என்று சொன்னவிதனால் எம்பெருமானுடைய அவதாரம் முக்கியமாக கர்மாநுஷ்டானத்திற்காகவே என்பது நன்கு விளங்கும். மேலே பிராட்டியைப் பிரிந்து வருந்திய காலங்களிலும் பெருமாள் ஸந்த்யா காலங்களில் தவறாது ஸந்த்யாவந்தநம் அநுஷ்டித்தபடியை வான்மீகி பகவான் அஸக்ருத் கூறியிருக்கிறார். ஆகவே பகவான் 'வர்த்த ஏவச கர்மணி' (கர்மத்தில் நான் நிலைநிற்கவே செய்கிறேன்) என்று சொன்னது மிகப்பொருந்தும். இதனால் கர்மாநுஷ்டானம் அவ*ஶ்*யம் கர்த்தவ்யம் (செய்யத்தக்கது) என்று கண்ணன் வலியுறுத்தினானாயிற்று.

பற்பல அங்கங்களோடு கூடிய கர்மயோகத்தை குறையற அநுஷ்டிப்பதென்பது சிரமமான கார்யம்; அங்கங்களில் குறையேற்படலாம். குறையற அநுஷ்டிக்கப்பட்டால்தான் காம்ய கர்மம் பலனளிக்கும்; இல்லையேல் நிஷ்பலமாகும். இப்படி அநுஷ்டிக்க வரிதான கர்மயோகத்தில் நான் ஏன் ஊன்றவேணும் என்ன -

***ஶ்*ரேயாந் ஸ்வத$_4$ர்மோ விகு$_3$ண: பரத$_4$ர்மாத் ஸ்வநுஷ்டி$_2$தாத்|**
**ஸ்வத$_4$ர்மே நித$_4$நம் *ஶ்*ரேய: பரத$_4$ர்மோ ப$_4$யாவஹ:|| (3-35)**

(ப்ரக்ருதியோடு சேர்ந்திருக்கும் சேதநனுக்கு இயல்பான கர்மயோகம் அங்கங்களில் குறையோடு அநுஷ்டிக்கப்பட்டபோதிலும், குறைவற அநுஷ்டிக்கப்பட்ட (இதுவரை பழகாத) பிறர்க்குரிய ஜ்ஞான யோகத்தைக் காட்டிலும் சிறந்தது. தனக்குரிய உபாயமான கர்மயோகத்தை யநுஷ்டித்துக்கொண்டு (அப்பிறவியில் பலனடையாது) மரணமடைவதும்

சிறந்தது. பிறர்க்குரிய உபாயமான ஜ்ஞாநயோகமோவெனில் (தவறு ஏற்பட்டு அழிவடைய இடமுள்ளதால்) பயத்தை அளிக்கக்கூடியது.)

விஸ்தாரமான கர்மங்களை யுள்ளடக்கிய கர்மயோகத்தை அநுஷ்டிக்கும்போது சில குறைகள் உண்டாகலாம். இருப்பினும், உனக்கு ஸ்வதர்மமான இக்கர்மயோகமே சிறந்தது. உனக்குரிய தர்மத்தை யநுஷ்டிப்பதே மிகச் சிறந்தது. பிறர்க்குரிய தர்மம் சிறந்ததாகத் தோன்றினாலும் அநாதரிக்கத் தக்கதே. ஜ்ஞானயோகமானது உனக்கு பரதர்மமே.

நீ இதுவரையில் பழகிப்போராததான ஜ்ஞானயோகத்தை அங்கங்களில் குறையின்றி சில காலம் அநுஷ்டித்தாலும், நடுவில் நழுவ இடமுள்ளது. அங்கியே இடையில் தடைபட்டுப் போகலாம். ஆனால் உன் ஸ்வதர்மமான கர்மயோகமானது நெடுங்காலம் நீ பழகிப் போந்ததாகையாலே செய்ய வெளியதாய் நழுவ இடமில்லை. ஆகையால் உன்னைப் பொருத்தவரை ஸகுணமான ஜ்ஞானயோகத்தைக் காட்டிலும் விகுணமான (அங்கங்களில் குறையேற்படினும்) கர்மயோகமே சிறந்தது.

நீ அநுஷ்டிக்கும் கர்மயோக அங்கங்களில் குறையேற்பட்டு ஆத்மதர்ஶநமாகிற பலன் இந்த ஜன்மத்தில் கிட்டாமற்போனாலும், உனது இந்த்ரியங்கள் ஏற்கனவே இயற்கையிலேயே கர்மங்களில் ஈடுபட்டிருக்கையாலே, அந்த வாஸநா ப$_3$லத்தாலே கர்மயோகத்தை அடுத்த ஜந்மத்தில் தொடர்ந்து நடத்துவதற்குத் தடையின்றி ஜந்மாந்தரத்தில் நிறைவுபெற்று ப$_2$ல ஸித்தியுண்டாகும். அங்கங்களில் ஏற்படும் குறைகளினால் ப$_2$லத்தில் காலதாமதம் மட்டுமே ஏற்படுமேயொழிய, ப$_2$லமானது இல்லை செய்யப்படுவதில்லை.

இதுபோலவே, ஜ்ஞான யோகமும் ஜந்மாந்தரத்தில் நிறைவு பெறலாமேயென்னில் – நீ ஜ்ஞானயோகத்தில் இழிந்தால், ப்ரக்ருதியோடுகூடிய உனக்கு பரதர்மமான ஜ்ஞானயோகத்தில் அங்கி ஸ்வரூபத்துக்கே தடையேற்பட்டு ஜந்மாந்த்ரத்திலும் தொடரயியலாமல் நிஷ்பலமாகலாம். ஆக, உன் ஸ்வதர்மமான கர்மயோகத்திலேயே ஊன்றுவாய் என்கிறான்.

**காம ஏஷ க்ரோத$_4$ ஏஷ ரஜோகு$_3$ண ஸமுத்$_3$ப$_4$வ:|**
**மஹாஶநோ மஹாபாப்மா வித்$_3$த்$_4$யேநமிஹ வைரிணம்|| (3-37)**

(ரஜோ குணத்தால் உண்டாகும் காமமே கோபமாக பரிணமித்து பெரும் பாவச்செயல்களைப் புரிய காரணமாகும். இக்காமமே ஜ்ஞானயோகத்திற்கு விரோதி என்றறிவாய்.)

அர்ஜுநன் கேள்வி: க்ருஷ்ணா! விஷயாநுபவம் அநர்த்தத்தைத் தரும் என்று தெரிந்தும் மனிதன் அதில் இழிகிறான். எது இவனை விஷயாநுபவத்திற்கு இழுத்துச் செல்கிறது? கண்ணன் பதில்: ரஜோ குணத்தால் உண்டாவது காமம். இது எத்தனை விஷயத்தீனிகளை

யிட்டாலும் வாரி விழுங்கும் பெறுவயிறு கொண்டது. புயற்காற்றைப் போலவும் பெருவெள்ளத்தைப் போலவும் உன்னை பலாத்காரமாக விஷயங்களை நோக்கி இழுத்துச் செல்வது இக்காமமேயாகும். இக்காமமே பெரும் பாவங்களைப் புரியும் கோபமாக பரிணமிக்கிறது. உனக்கு ஒரு விஷயத்தில் காமமுண்டானால், அக்காமம் நிறைவேறாதபடி ஒருவன் தடுத்தால் தடுத்தவன் மீது உனக்கு கடுங்கோபமுண்டாகி அவனை நீ நலியத் தொடங்குகிறாய். இப்படி உன் காமமே தடைபடும்போது கோபமாகப் பரிணமிக்கிறது. ஆக, காமமும் கோபமும் விஷயாநுபவ காரணமாகின்றன. காமத்தை ஜ்ஞானயோகத்திற்கு விரோதி என்றறிவாய். காலிடைப்பாசம், மான் குளம்பையொத்த விஷயத்தில் ஸ்நேஹம், ஜ்ஞானயோகத்தினின்று நழுவச்செய்யும்.

நம் ஸித்தாந்தத்தில் காமமும் க்ரோதமும் ஆத்மாவின் தர்மமான ஜ்ஞானத்தின் பரிணாம விஶேஷமே. இது, ப்ரக்ருதியிலிருக்கும் ரஜோ குணத்தால் எப்படி உண்டாக முடியுமெனில் – முக்குணமயமான ப்ரக்ருதியின் கார்யமான ஶரீரத்தோடு இவன் சேர்ந்திருக்கையாலே, அதன் குணங்கள் ஜ்ஞானத்தில் மாறுதலை விளைக்க முடியும். ஶரீரத்திலுள்ள ரஜோ குணத்தால் காமாதிகள் உண்டாவதுபோல் அதிலுள்ள ஸத்வ குணத்தால் ஜ்ஞாநாதிகளும் உண்டாகலாமேயெனில் – ஸத்வ குணத்தைக் காட்டிலும் பெரும்பாலும் ரஜோ குணமே விஞ்சியிருக்கையால் காமாதிகள் உண்டாகவே ஸந்தர்ப்பங்கள் அதிகமாயுள்ளது.

பின், ஸத்வ கார்யமான ஜ்ஞான யோகத்தை இவன் தொடங்க முடியுமோவெனில்– சிற்சில ஸமயங்களில் ஸத்வ குணமும் தலையெடுப்பதுண்டே. அப்போது தொடங்க முடியும். பின் ரஜோ குணம் தலையெடுத்து காமாதிகள் உண்டாகி அதனால் விஷயாநுபவம் ஏற்பட்டு ஜ்ஞான யோகம் தடைபடவும் கூடும். ஆக, ஒவ்வொரு காலத்தில் தலையெடுக்கும் ஸத்வாதி குணங்களோடு கூடிய ப்ரக்ருதி கார்யமான ஶரீரத்தோடு சேர்ந்திருக்கையாலே, அநாதி வாஸநையாலுண்டாகும் ஶப்தாதி விஷய காமமாகிற எதிரியாலே விஷயங்களை நோக்கி நீ இழுத்துச் செல்லப்படுகிறாய் என்றானாயிற்று.

பெருந்தீனி தின்பது காமமேயாகையாலே, மஹாஶந: – ந ஜாது காம: காமாநாம் உபபோ₄கே₃ந ஶாம்யதி| ஹவிஷா க்ருஷ்ண வர்த்மேவ பூ₄ய ஏவாபி₄வர்த்த₄தே|| (பாரதம்) காமிகளின் காமம் ஒருபோதும் அநுபவித்து அடங்காதது. விரகிட விரகிட மேன்மேலும் எரியும் அக்நிபோலே, அனுபவிக்க அநுபவிக்க மேன்மேலும் வளரும்.

* * * * *

# நான்காம் அத்யாயம் – ஜ்ஞான யோகம்

42 ஶ்லோகங்கள் அடங்கிய இவ்வத்யாயத்தில் ஞானத்தை உள்ளடக்கிய கர்மயோகம் ஜ்ஞானயோகமாகவேயுள்ளது என்று கூறுகையாலும், கர்மயோகத்தில் அடங்கிய ஜ்ஞாநாம்ஶத்தின் ப்ராதான்யத்தைக் கூறுகையாலும் 'ஜ்ஞான யோகம்' என்று பெயரிடப்பட்டுள்ளது. அர்ஜுநனுடைய கேள்விகள் ஸ்வல்பமாயும் அதற்கு எம்பெருமான் அருளிச்செய்யும் ஆழ்பொருள்கள் யாவும் விரிவாகவும் இருப்பதைக் காண்கிறோம். கீழ் அத்யாயத்தில் அர்ஜுநனுடைய கேள்விக்கு ஏழு ஶ்லோகங்களால் பகவான் விடை சொல்லி முடித்தான். இந்த அத்யாய தொடக்கத்தில் 'அர்ஜுந உவாச' என்று கேள்வி கேட்டிருக்க வேணும். ஆனால் கீழே கர்மயோகத்தைப் பற்றி விரிவாகச் சொல்லக்கேட்ட அர்ஜுநனுக்கு தலைவேதனையாயிருந்தது போலும். நாம் கேள்வியெழுப்பினால்தானே இவன் வாய் திறக்கிறான். கீதை கேட்டது போதும் என்பது போல் தலைகுனிந்து வாளாவிருந்தான். அகல் ஞாலத்தவர்க்கு இன்னம் எவ்வளவோ அர்த்த விஶேஷங்களை சொல்லப் பாரித்திருக்கும் பகவான் வாய்மூடி நிற்பனோ. அவனது கேள்வியை எதிர்பாராமலேயே 'பகவான் உவாச' என்று தன திருவுள்ளத்தில் தோன்றுகிற ஆழ்பொருள்களையெல்லாம் வெளியிடுகிறானாயிற்று.

பகவானுடைய பதிலிலிருந்து நாம் அர்ஜுநன் மனதில் ஓடும் கேள்விகளை ஊஹித்துக் கொள்ளலாம். கண்ணா! உனது பிறவிகள் யாவும் ஸத்யமானவையா? இந்த்ரஜாலம் போல் வெறும் தோற்றமா? உன் பிறவி ஸத்யமானால் உன் ஜ்ஞான ஶக்தி முதலான மேன்மைக் குணங்களுடனேயே பிறக்கிறாயா? நீயும் ஶரீரம் கொண்டு பிறப்பதால் உன் ஶரீரமும் எங்களுடையதைப்போல் முக்குணச்சேர்க்கையாலானதா? அல்லது அப்ராக்ருதமானதா? உன் அவதாரத்துக்கு காரணம் யாது? நீ எந்தெந்த காலங்களில் பிறக்கிறாய்? எங்களைப்போல் புண்யபாப கர்மத்தால் பிறக்கிறாயா? அல்லது ஸங்கல்ப மாத்ரத்தால் பிறக்கிறாயா? இவை அர்ஜுநன் மனதிலோடும் கேள்விகளாக இருக்க வேணும்.

**ப$_3$ஹூநி மே வ்யதீதாநி ஜந்மாநி தவ சார்ஜுந|**
**தாந்யஹம் வேத$_3$ ஸர்வாணி ந த்வம் வேத்த$_2$ பரந்தப|| (4-5)**

'அர்ஜுநா! உனக்குப்போலே எனக்கும் எண்ணற்ற பிறவிகள் கடந்துவிட்டன. உன்னுடைய என்னுடைய எல்லாப் பிறப்புகளையும் நான் அறிவேன். நீ அறியாய்' என்றதால் அர்ஜுநன் எடுத்த பிறவிகளும் உண்மை. அதைப்போல் தானெடுத்த பிறவிகளும் ஸத்யமே, செப்பிடு வித்தையன்று என்று சொல்லி, மேல் மூன்று ஶ்லோகங்களால் அர்ஜுநன் கேள்விகளுக்கு விரிவாக பதில் சொல்லி, அதற்கடுத்த ஶ்லோகத்தால் (4-9) இப்படி யறிபவனுக்கு மறுபிறவில்லை, என்னையே அடைவான் என்கிறான்.

'ப$_3$ஹூநி மே வ்யதீதாநி ஜந்மாநி' – அவன் அவதாரங்கட்கு கணக்கில்லை. கர்மமடியாகப் பிறக்கும் இவனுக்கு கர்மம் நஶியவே பிறப்பில்லை. அவனது பிறப்பு அநுக்ரஹமடியாகவிறே. அநுக்ரஹம் நித்யமிறே. அவன் எல்லோர்க்கும் அநுக்ரஹம் பண்ணவேணுமே. ஆக பரார்த்தமாக அவன் பிறப்புகள். பிறக்கிற ஸம்ஸாரிக்கு பிறவாமை ஏற்றமென்னா, அவனுக்குப் பிறக்கப் பெறுகை ஏற்றம். அவன் பிறக்க பிறக்க மேன்மையடைகிறான். 'ஸ உ ஶ்ரேயாந் ப$_4$வதி ஜாயமாந:' 'பல பிறப்பாய் ஒளிவரும் முழுநலம்'. அடியறிந்தால், 'ப$_4$வாந் நாராயணோ தேவ:' என்றால் அது அஸஹ்யமாய், 'ஆத்மாநம் மாநுஷம் மந்யே' என்றும் 'அஹம் வோ ப$_4$ாந்தவோ ஜாத:' என்றும் ஆணையிடும்படியிறே அவதாரத்தில் மெய்ப்பாடு இருப்பது!

**அஜோऽபி ஸந் அவ்யயாத்மா பூ$_4$தாநாம் ஈஶ்வரோऽபி ஸந்|**
**ப்ரக்ருதிம் ஸ்வாமதி$_4$ஷ்ட$_2$ாய ஸம்ப$_4$வாமி ஆத்மமாயயா|| (4–6)**

(கர்மத்தால் ஏற்பட்ட பிறப்பற்றவனாயும், கர்மத்தால் ஏற்பட்ட அழிவற்றவனாயும், எல்லாப் பொருள்களுக்கும் ஈஶ்வரனாயும் இருந்து கொண்டே எனக்கேயுரிய அப்ராக்ருத திருமேனியை தரித்துக் கொண்டே என் ஸங்கல்பத்தாலேயே பிறக்கின்றேன்.)

பிறப்பு இறப்பு அற்றவன், ஸர்வேஶ்வரன் என்று புகழ்பெற்ற எம்பெருமான் தேவர், மனிதர் முதலானாரோடு ஒக்கப் பிறக்கும்போது அஜோऽபி ஸந் ஸம்பவாமி – பிறப்பற்றவனாயிருந்து கொண்டே பலபடியாகப் பிறக்கிறான். பிறப்பற்றவனாயிருக்கையும் பலபடியாகப் பிறக்கையும் முரணாயுள்ளதே யென்னில் – கர்மம் காரணமாக ஏற்படும் பிறப்பன்று. 'அஜாயமாநோ ப$_3$ஹுத$_4$ா விஜாயதே' என்று பண்டை மறையும், 'பிறப்பில் பல்பிறவிப்பெருமான்' என்று தமிழ் மறையும் பகர்வதுபோல் பிறக்கிறான்.

அவ்யயாத்மா – இங்கு ஆத்ம ஶப்தம் தேஹத்தையே குறிக்கும். ஸ்வரூப விகாரமின்றி, அழிவற்ற ஸ்வபாவத்தையுடையவனாகப் பிறக்கிறான். தர்மபூ$_4$த ஜ்ஞானமாகிற ஸ்வபாவத்தில் ஏற்றத்தாழ்வுள்ள ஸம்ஸாரி ஜீவனைக் காட்டிலும் சிறந்தவனாகப் பிறக்கிறான். ஆக, 'அஜ: அவ்யயாத்மா' என்று பரமனுக்கேயுரிய உபய லிங்கங்களில் ஒன்றான ஹேய ப்ரத்யநீகனாயிருக்கை (தாழ்வுகளுக்கெல்லாம் எதிர்த் தட்டாயிருக்கை) பேசப்பட்டது.

இனி, மற்றோரடையாளமான ஸர்வ கல்யாண குணங்களையுடையவனாயிருக்கை பேசப்படுகிறது 'பூ$_4$தானாம் ஈஶ்வரோऽபி ஸந்' என்பதால். பூ$_4$த ஶப்தம் ஸத்தையுடைய எல்லாப் பொருள்களையும் குறிக்கும். ஸர்வ வஸ்துக்களுக்கும் ஈஶ்வரனாயிருந்து கொண்டே பிறக்கிறான். இந்த ஈஶ்வரத்வத்திற்கு உறுப்பான ஸர்வஜ்ஞத்வம், ஸத்ய ஸங்கல்பத்வம், அவாப்த ஸமஸ்தகாமத்வம் முதலான கல்யாணகுணங்கள் யாவும் உபலக்ஷணம். ஆக, பகவான் தன் மேன்மைக்குரிய குணங்கள் ஒன்றையும் விடாமல் பிறக்கிறான். அந்தந்த

அவதாரங்களில் சிற்சில ஸமயங்களில் தன் மேன்மையை தன் இச்சையாலே மறைத்துக் கொள்கிறானேயொழிய, எந்த அவதாரத்திலும் மேன்மை இல்லாமலில்லை. க்ருஷ்ண ஏவஹி லோகாநாம் உத்பத்திரபி சாப்யய:| க்ருஷ்ணஸ்ய ஹி க்ருதே பூ$_4$தம் இத$_3$ம் விஶ்வம் சராசரம்|| (பாரதம்) – அசைவன அசையாதனவும் அடங்கிய இவ்வுலகனைத்தும் கண்ணனுக்கு இயல்பாகவே அடிமைப்பட்டுள்ளது. வ்யக்த மேஷ மஹாயோகீ$_3$ பரமாத்மா ஸநாதந:| அநாதி$_3$ மத்$_4$ய நி$_4$தநோ மஹத: பரமோ மஹாந்| (ரா.யு) என்று இவனுடைய பரமேஶ்வரத்தன்மை பேசப்பட்டதிறே.

ஸ்வாம் ப்ரக்ருதிம் அதிஷ்டாய – எனக்கேயுரிய ஸ்வபாவமான அப்ராக்ருத திருமேனியை தரித்துக்கொண்டு. 'ந பூ$_4$தஸங்க$_4$ ஸம்ஸ்த$_2$ாநோ தே$_3$ஹோஸ்ய பரமாத்மந: (பாரதம்) – இந்த பரமாத்மாவின் தேஹம் பஞ்சபூதங்களால் ஏற்பட்டதன்று; 'ந தஸ்ய ப்ராக்ருதா மூர்த்திர் மாம்ஸமேதே$_3$ாऽஸ்தி$_2$ ஸம்ப$_4$வா' (வாயு.பு) என்று பரமபுருஷனுக்கு அவதார நிலையிலும் முக்குணமான ப்ராக்ருத ஶரீரம் இல்லையென்று ஶாஸ்த்ரங்கள் கோஷிக்கின்றன. 'ப்ரக்ருதி பஞ்சபூதேஷு ஸ்வபாவே மூலகாரணே' என்றபடி ப்ரக்ருதி ஶப்தம் ஸ்வபாவத்தையும் குறிக்கும். 'நித்யா லிங்க$_3$ா ஸ்வப$_4$ாவ ஸம்ஸித்$_3$தி$_4$:' என்று இயல்பாகவே பரமனுக்குரிய ஸ்வபாவமாய் 'திருமேனி' கூறப்படுவதால், இங்கு **ப்ரக்ருதி ஶப்தம் திருமேனியைக் குறிக்கும்.** தனக்கேயுரிய அப்ராக்ருத ஶரீரமேயிது என்று காட்டுவதற்காக 'ஸ்வாம்' (தனக்கேயுரிய) என்று விஶேஷிக்கிறான்.

அதிஷ்ட்டாய – தரித்து நின்று – என்கையாலே இங்கு ப்ரக்ருதி ஶப்தம் தரிக்கப்படும் விக்ரஹத்தையே குறிக்கும். அதையும் கர்மம் காரணமாகவல்லாமல் இச்சையாலேயே தரிக்கிறான் என்று உணர்த்துகிறான். 'ஆதித்ய வர்ணம் தமஸ: பரஸ்தாத்' (ஸூர்யனைப் போல ஒளியுடையவனாய் தமஸ்ஸுக்கு மேற்பட்ட மஹாபுருஷன்); 'க்ஷயந்தமஸ்ய ரஜஸ: பராகே' (ரஜஸ் எனப்படும் மூலப்ரக்ருதிக்கு மேற்பட்ட உலகில் வஸிப்பவன்) எனும் வாக்யங்கள் பரமபுருஷனுக்கு அப்ராக்ருதமான சிறந்த திருமேனி உண்டென்று நிரூபிக்கிறது. ஆக, பரமபதத்தில் எம்பெருமான் நித்ய விக்ரஹத்தோடு விளங்குகிறான் என்பது ஸத்யம். இந்த விக்ரஹம் பலவிதமான அவதார நிலைகளையடைகிறது. 'ய ஏக்ஷோऽந்தராதி$_3$த்யே ஹிரண்மய: புருஷ:' – ஸூர்யனுக்கு நடுவில் பொன்மயமான புருஷன் எவன் இருக்கிறானோ – எனும் வாக்யம் ஸூர்யமண்டலத்தின் நடுவில் உபாஸகர்கள் உபாஸிப்பதற்காக பரமபுருஷனால் எடுத்துக் கொள்ளப்பட்ட திவ்யமங்கள விக்ரஹமொன்றைக் காட்டுகிறது. 'தஸ்மித் நயம் புருஷோ மநோமய: அம்ருதோ ஹிரண்மய:' – அந்த ஹ்ருதயத்தில், பரிசுத்தமான மனத்தால் அறியத்தக்கவனாய், பொன்மயமானவனான புருஷனிருக்கிறான் – என்று ஹ்ருதயத்தின் நடுவில் உபாஸனத்தின் பொருட்டு அந்தர்யாமி ரூபத்துடன் இவன் எழுந்தருளியிருப்பதையும் ஒரு வேதவாக்யம் கோஷிக்கிறது. இப்படி ஒவ்வொரு

ஸ்தானத்திலிருக்கும் எம்பெருமான் வர்ணமுடையவனாகவும், புருஷனென்றும் வேதவாக்யங்கள் படிக்கையால் புருஷ ஸூக்தத்தில் சொன்ன பரமாத்மா நாராயணனுக்கு அப்ராக்ருதமாய் உண்மையான திருமேனியுண்டென்று நிரூபிக்கப்பட்டது. நம் ஆழ்வார்கள் வடிவழகுக்கு அவ்வருகு ஸ்வரூப குணங்களில் இழியார். 'திவ்ய விக்ரஹத்தை *ஶு*பாஶ்ரயமாகப் பற்றின பின்னை அவ்வருகு போவான்' என்று *ஶா*ஸ்த்ரங்கள் சொல்லுகிறது – இத்தைவிட்டுப்போகச் சொல்லுகிறதல்ல; ஸ்வரூப குணங்களும் உபாஸ்யம் என்கைக்காகச் சொல்லுகிறது.

ஆத்ம மாயயா – என்னுடைய மாயையாலே. மாயா *ஶ*ப்தம் பொதுவாக *ஆஶ்*சர்யத்தை விளைக்கும் பொருள்களைக் குறிக்கும். 'மாயா வயுநம் ஜ்ஞாநம்' (மாயை, வயுநம் எனும் *ஶ*ப்தங்கள் ஜ்ஞானத்தைச் சொல்லும்) என்கிறபடி மிகுந்த *ஆஶ்*சர்யத்தை விளைக்கும் அறிவையே குறிக்கும். தன் இச்சையாலே அவதரிப்பதைக் கூறும் ப்ரகரணமாகையால் அறிவுமயமான அந்த விருப்பத்தையே இங்கு மாயை என்கிறான். வெறும் அறிவாலே அவதரிப்பதாகக் கொண்டால் எப்போதும் அறிவையுடைய இவன் எப்போதும் அவதரித்துக்கொண்டேயிருக்க வேண்டி வருமாகையால் **ஸங்கல்பரூபமான அறிவையே இங்கு மாயா *ஶ*ப்தம் குறிக்கும்.** 'மாயயா ஸததம் வேத்தி ப்ராணிநாம் ச *ஶு*ப₄ா*ஶு*பம்' (மாயை எனப்படும் அறிவினால் ப்ராணிகளுக்கு நன்மை தீமைகளை எப்போதும் அறிகிறான்) என்று அ₄பியுக்தர்களும் மாயா *ஶ*ப்தத்தை அறிவு என்ற பொருளிலேயே ப்ரயோகித்தார்கள். 'யா வந்த: பாம்ஸவோ பூ₄மேஸ் ஸங்க்₂யாதா தே₃வ மாயயா' (தேவனின் அறிவாலே கணக்கிடப்பெற்ற பூமியின் துகள்கள் எத்தனையிருக்கின்றனவோ) என்று *ஶ்*ருதியிலும் மாயா *ஶ*ப்தம் 'அறிவு' எனும் பொருளிலேயே ப்ரயோகிக்கப்பட்டது.

இவ்விடங்களில் அத்வைதிகள் கருதும் மாயையைப் பொருளாகக் கொண்டால் அறிவை மறைக்கக்கூடிய அந்த மாயையாலே அறிவதாகவும், கணக்கிடுவதாகவும் சொல்வது ஒட்டாது. மாயா *ஶ*ப்தத்திற்கு பொருளாக வேத நிகண்டுவில் சொல்லப்பட்ட 'அறிவே' இவ்விடங்களிலே பொருளாக முடியும். மாயா *ஶ*ப்தத்திற்கு பொய்யென்றும், ப்ரக்ருதி *ஶ*ப்தத்திற்கு முக்குணப்ரக்ருதி என்றும் பொருள்கொள்வது பொருந்தாது. 'என் மாயையாலே பிறக்கிறேன்; உலகத்தில் காண்பது போல் உண்மையாகப் பிறக்கவில்லை' என்று பொருள் கொள்வது பொருந்தாது. ஏனெனில், மற்றுள்ளாருடைய பிறப்பும் பொய்யாகுமேயொழிய மெய்யாகாது.

ஸம்பவாமி – என்னுடைய அப்ராக்ருத திருமேனியையே தேவர், மனிதர், திர்யக் முதலான உருகொண்டு பலபடியாகப் பிறக்கிறேன். 'பிதா புத்ரேண பித்ருமாந் யோநியோநெள' (அனைத்துலகுக்கும் தந்தையானவன், தன் பிள்ளை யொருவனை தந்தையாகக் கொண்டு பிறக்கிறான்) என்று வேதபுருஷனும், ஸமஸ்த *ஶ*க்தி ரூபாணி தத்

கரோதி ஜநேஶ்வர:| தேவ திர்யங் மநுஷ்யாக்$_2$யா சேஷ்டாவந்தி ஸ்வலீலயா|| (வி.பு) என்று பாராசராதி மகர்ஷிகளும், 'எந்நின்ற யோனியுமாய்ப் பிறந்தாய்' 'மாவாகி ஆமையாய் மீனாகி மானிடமாம் தேவாதி தேவபெருமான்' என்று தத்வதர்ஶியான ஆழ்வாரும் இவ்வர்த்தத்தை அறிவித்தனரன்றோ. அஜத்வம், அவ்யயத்வம், ஸர்வேஶ்வரத்வமாகிற பரமேஶ்வரத் தன்மையை விடாமலே பிறக்கிறேன் என்கையாலே **அவதார ப்ரகாரம்** சொல்லிற்று. 'ப்ரக்ருதிம் ஸ்வாம் அதிஷ்ட்டாய ஸம்பவாமி' என்று அப்ராக்ருத திவ்யமங்கள விக்ரஹத்தைக் கொண்டு அவதரிப்பதாகச் சொல்லுகையாலே **திவ்யமங்கள விக்ரஹத்தின் ஸத்யத்வம்** சொல்லிற்று. 'ஆத்ம மாயயா' என்று என்னுடைய ஸங்கல்பத்தினாலேயே பிறக்கிறேன் என்கையாலே **இச்சைதான் அவதார ஹேது** என்றதாயிற்று.

**யத$_3$ா யத$_3$ா ஹி த$_4$ர்மஸ்ய க்$_3$லாநிர் ப$_4$வதி ப$_4$ாரத|**
**அப்யுத்த$_2$ாநம் அத$_4$ர்மஸ்ய தத$_3$ாத்மாநம் ஸ்ருஜாம்யஹம்| (4-7)**

(பரதகுலத்துதித்தவனே! எந்த எந்தக் காலங்களில் அறத்திற்கு வாட்டம் ஏற்படுகிறதோ, மறத்திற்கு எழுச்சி ஏற்படுகிறதோ, அந்தந்தக் காலங்களில் நான் என்னையே படைத்துக் கொள்கிறேன்.) பகவான் அவதரிக்கும் காலம் எதுவென்னில் - யதா யதா (எப்போதெப்போது) என்கையாலே இன்ன காலத்தில்தான் அவதரிப்பது எனும் **காலநியமம் இல்லை.** ஜீவனுடைய பிறப்பானது புண்யபாபங்கள் பரிபக்வமடையும் காலத்தில் ஏற்படும். பகவானுக்கு புண்யபாபங்கள் இல்லாமையாலே அத்தகைய காலநியமங்களில்லை. மேலும், இன்ன காலத்தில்தான் அவதரிப்பேன் என்று அவன் ஸங்கல்பமும் செய்துகொள்வதில்லை.

அடுத்த ஶ்லோகத்தில் 'ஸம்பவாமி யுகே யுகே' 'இன்ன யுகத்தில்தான் நான் பிறப்பேன் என யுகநியமம் இல்லை' என்று கூறப்போகிறானாகையாலே, இங்கு யுகத்தைக் காட்டிலும் சிறிதான இன்ன கல்பத்தில் இன்ன வருஷ மாத திதி நக்ஷத்ரத்தில்தான் பிறப்பேன் எனும் நியமமும் இல்லை.

'த$_4$ர்மஸ்ய க்$_3$லாநிர் ப$_4$வதி' (தர்மத்திற்கு வாட்டம் ஏற்படுகிறதோ) - 'இதைச் செய், இதைச் செய்யாதே' என்று வேதத்தில் விதிக்கப்பட்ட ப்ரவ்ருத்தி-நிவ்ருத்தி ரூபமான தர்மமே தர்மம். அது நாலு வர்ணங்களைப் பற்றியதாகவும், நாலு ஆஶ்ரமங்களைப் பற்றியதாகவும் உள்ள வரம்புகளைப் பற்றியதாயிருக்கும். இந்த வேத தர்மத்திற்கு முரண்பட்ட பௌத்தம் முதலான ப$_3$ாஹ்ய மதங்களில் கூறப்பட்டவையும், சைவம் முதலான குத்$_3$ருஷ்டி மதங்களில் கூறப்பட்டவையும் தர்மம் அல்ல. ப்ரமாண தூஷகர் - ப$_3$ாஹ்யர்; ப்ரமேய தூஷகர் - குத்$_3$ருஷ்டிகள். தர்மத்திற்கு மூலமான வேதத்தின் பிரசாரம் மலினமடைந்தால் வைதிக தர்மத்திற்கு வாட்டம் ஏற்படக்கூடும். இப்படி வேத தர்மத்திற்கு எவ்வெப்பொழுது வாட்டம் ஏற்படுகிறதோ. 'அப்யுத்த$_2$ாந மத$_4$ர்மஸ்ய' (அதர்மத்திற்கு எழுச்சி எவ்வெப்பொழுது

ஏற்படுகிறதோ) - ப$_3$ாஹ்ய குத்$_3$ருஷ்டி மத தர்மங்கள் இங்கு அதர்மம் எனப்படுகின்றன. தர்மம் வாட்டமடைவதைக் கூட பொறுக்கமாட்டாத நான், தர்மமம் அடியோடு அழிவதைப் பொறுப்பேனோ?

ததா - அவ்வப்போது. அஹம் ஆத்மாநம் ஸ்ருஜாமி - நானே என்னைப் படைத்துக் கொள்கிறேன். என் **ஸங்கல்பத்தினாலேயே அவதரிக்கிறேன்.** 'இன்ன துணைகொண்டு படைத்துக் கொள்கிறேன்' என்று கூறாமையால் காலம் முதலான எத்துணையும் தேவையில்லை என்றானாயிற்று. காலம் முதலிய அனைத்தையும் ஆட்டி வைப்பவனிறே.

ஸ்வரூபம் நித்யமாகையாலே 'ஆத்மாநம் ஸ்ருஜாமி' என்றது 'என் ஸ்வரூபத்தை படைத்துக் கொள்கிறேன்' என்று பொருள்படாது. தன் பிறப்பைப் பற்றியே இப்பிரகணத்தில் பேசுவதால் 'அவதார திருமேனியோடு கூடியயென்னைப் படைத்துக் கொள்கிறேன்' என்றே பொருள். 'த்ரிணி பதா விசக்ரமே விஷ்ணுர் கே$_3$ாபா அத$_3$ாப்$_2$ய: அதோ த$_4$ர்மாணி த$_4$ாரயந்' (ஸர்வரக்ஷகனும், வெல்லமுடியாதவனுமான விஷ்ணு பகவான் மூன்றடிகளால் உலகளந்தான், இதன் மூலம் தர்மங்களை நிலைநிறுத்தினான்) என்று *ஶ*்ருதிகளிலே தர்மத்தை நிலைநிறுத்தவே அவன் அவதரிக்கிறான் என்பது ப்ரஸித்தம். என்னோடு உறவுள்ள நீயும் யுத்தமாகிற உன் தர்மத்தை நிலைநிறுத்த வேண்டாவோ?

(இங்கு 'ததா ஆத்மாநம் ஸ்ருஜாம்யஹம்' என்றவிடத்தில் ரஸ்யமும் ரஹஸ்யமுமான ஒரு வி*ஶே*ஷார்த்த முண்டு. மேலே 'ஜ்ஞாநீ து ஆத்மைவ மே மதம்' என்று ஜ்ஞாநிகளைத் தனக்கு ஆத்மாவாகச் சொல்லுகையாலே, இங்கு 'ஆத்மாநம் ஸ்ருஜாமி' என்றதற்கு ஞானிகளை அவதரிப்பிக்கிறேன் என்பதும் அந்தரங்கமான பொருளாம். பகவான் தான் வந்து அவதரிப்பதிலும் ஞானிகள் அவதரிப்பதில் ப்ரயோஜநாதி*ஶ*யமுண்டு. 'மண்மிசை யோனிகள் தோறும் பிறந்து எங்கள் மாதவனே கண்ணுற நிற்கிலும் காணகில்லா, உலகோர்களெல்லாம் அண்ணலிராமநுசன் வந்து தோன்றியவப்பொழுதே நண்ணருஞானம் தலைக்கொண்டு நாரணற்காயினரே' என்ற இராமநுச நூற்றந்தாதி பாசுரம் இங்கு அநுஸந்திக்கத்தக்கது. அன்றியும் இந்த அத்யாயத்திலேயே (4-34) மேலே ஞானிகளின் உபதேசப் பெருமையை கூறப்போவதால் 'அப்படி யுபதே*ஶி*த்து திருத்திப் பணி கொள்ளவல்ல ஞானிகளை ஸமய வி*ஶே*ஷங்களில் நானே அவதரிக்கச் செய்கிறேன்' என்கிறானாகவுமாம். ஞானிகளின் அவதாரத்தைப் பற்றி இங்கு பேச என்ன ப்ரஸக்தியென்று நினைக்க வேண்டா - 'பீதகவாடைப் பிரானார் பிரமகுருவாகி வந்து' என்று பெரியாழ்வார் அருளிச்செய்தபடியும், 'ஸாக்ஷாத் நாராயணோ தே$_3$வ க்ருத்வா மர்த்யமயீம் தநும், மக்$_3$நாத் உத்$_3$த$_4$ரதே லோகாந் காருண்யாத் *ஶ*ாஸ்த்ர பாணிநா' (ஜயாக்ய ஸம்.) - தேவனான நாராயணனே மனிதவுருவை யெடுத்துக்கொண்டு *ஶ*ாஸ்த்ரமாகிற கையினாலே ஸம்ஸாரத்தில் அழுந்திக்கிடப்பவர்களை தூக்கி விடுகிறான் - என்கிற ப்ரமாணத்தின்படியும் ஞானிகளின் அவதாரமும் பகவதவதார

விஶேஷமேயாகையாலே. தேனார்கமலத் திருமாமகள் கொழுநன், தானே குருவாகித் தன்னருளால், மானிடர்க்காய் இந்நிலத்தே தோன்றுவதால், யார்க்குமவன் தாளிணையை உன்னுவதே சாலவுறும் (ஞானஸாரப் பாசுரம்). 'சேமம் குருகையோ! செய்ய திருப்பாற்கடலோ! நாமம் பராங்குசமோ? நாரணமோ? தாமம் துளவோ வகுளமோ? தோளிரண்டோ நான்குமுளவோ பெருமானுனக்கு' - ஆழ்வாரைப் பற்றி ஓர் பரமபக்தர் பணித்த பாசுரம். ப்ராஸங்கிகமானவிது நிற்க.)

**பரித்ராணாய ஸாதூ$_4$நாம் விநாஶாய ச து$_3$ஷ்க்ருதாம்|**
**தர்ம ஸம்ஸ்த$_2$ாபநார்த்த$_2$ாய ஸம்ப$_4$வாமி யுகே$_3$ யுகே$_3$|| (4-8)**

(நல்லோர்களை நன்கு ரக்ஷிப்பதற்கும், தீயவர்களை சித்ரவதை செய்து அழிப்பதற்கும், அறத்தை நன்கு நிலைநிறுத்துவதற்கும் அந்தந்த யுகங்களில் பலபடியாகப் பிறக்கிறேன்)

இங்கு பகவானுடைய அவதார ப்ரயோஜநம் சொல்கிறது. இவற்றில் ஸாது பரித்ராணமே ப்ரதான உத்தேஶ்யமாகையாலே அதனை முற்படச் சொல்கிறான்.

'துயரில் மலியும் மனிசர் பிறவியில் தோன்றிக் கண்காண வந்து' 'நாட்டில் பிறந்து படாதனபட்டு மனிசர்க்காய்' என்கிறபடியே கர்மவஶ்யர்களான ஸம்ஸாரிகள் படாத கஷ்டங்களையும் பட்டு இந்நிலவுலகில் எம்பெருமான் வந்து அவதரிக்க வேணுமோ? ஸத்யஸங்கல்பனான தான் தன்னுடைய ஸங்கல்ப ஶக்தியைக் கொண்டே எதுவும் செய்யலாமே? எத்தனை ஸாதுக்களை ரக்ஷிக்க வேணுமானாலும், எத்தனை துஷ்டர்களை சிக்ஷிக்க வேணுமானாலும் தன்னுடைய அவ்யாஹத ஶக்திகமான ஸங்கல்பத்தினாலேயே செய்து தலைக்கட்ட வொண்ணாதோ? தர்ம ஸம்ஸ்தாபனமும் ஶாஸ்த்ர ப்ரதானம் முதலானவற்றால் ஆகாதோ? இதற்காக எம்பெருமான் இங்கு வந்து அவதரிக்க வேணுமோ யென்னில் -

துஷ்ட நிரஸநமும் ஸங்கல்பத்தால் ஸாத்யமாகலாம். துஷ்டர்களை யழித்தவுடன் தர்மமும் தன்னடையே ஸித்திக்கலாம். ஆனால், ஸாது பரித்ராணம் எம்பெருமான் வந்து தோன்றியதல்லது நிறைவேறாது. ஸாதுக்களை ரக்ஷிப்பது ஸங்கல்பத்தால் ஏன் நிறைவேறாதென்னில் - 'ஸாதுக்கள் இன்னார், இப்படிப்பட்டவர்கள்' என்றறியும்போது அவன் தன் ஸங்கல்பத்தால் ஸாதுக்களை ரக்ஷிப்பதியலாது என்று தெளியலாம். ஸாதுக்கள் யார் என்னில் - வேதத்தில் சொல்லப்பட்ட நாலு வர்ணாஶ்ரம தர்மங்களை யநுஷ்டிப்பவர்கள். அந்த வேததர்மத்தின்படியே சிவன், இந்த்ரன், ஸூர்யன் முதலான தேவதாந்தரங்களை உபாஸிக்கும் அவைஷ்ணவர்களுக்காக பகவான் தன் அவதார ரூபத்தைக் காட்டவேண்டிய அவஶ்யமில்லை. அந்தந்த தேவதைகளுக்கு அந்தர்யாமியாயிருந்து கொண்டே அவர்கள் விரும்பும் பலனையளிக்கலாம். ஆகையால், இங்குள்ள ஸாது ஶப்தம் இவர்களைக்

குறிக்காமல், வைஷ்ணவர்களில் மிகச் சிறந்தவர்களாய் எம்பெருமானையே நேராக உபாஸிப்பவர்களையும், அவனையே உபாயமாகக் கொண்ட ப்ரபந்நர்களையுமே குறிக்கும். ந சலதி நிஜவர்ண த₄ர்மதோ ய: ஸம மதிராத்ம ஸுஹ்ருத்₃ விபக்ஷபக்ஷே| ந ஹரதி நச ஹந்தி கிஞ்சிது₃ச்சை: ஸிதமநஸம் தமவேஹி விஷ்ணுப₄க்தம்|| (எவனொருவன் தன் வர்ணத்தற்குரிய தர்மத்தினின்று நழுவாதவன், தன் நண்பன் எதிரிகளிடம் விருப்பு வெறுப்பற்றவன், எதையும் திருடாதவன், எதையும் ஹிம்ஸிக்காதவன், (இக்காரணங்களாலேயே) மிகவும் வெள்ளை மனத்தினனாயிருப்பவனோ அவனையே விஷ்ணுபக்தன் என்றறிவாய்); வர்ணாश்ரம ஆசாரவதா புருஷேண பர: புமாந்| விஷ்ணுர் ஆராத்₄யதே பந்த₂ா ந அந்யஸ் தத்தோஷ காரக:|| (வர்ணாश்ரமங்களுக்குரிய கர்மங்களை யநுஷ்டிக்கும் மனிதனாலேயே பரமபுருஷனான விஷ்ணு ஆராதிக்கப்படுகிறான். இக்கர்மங்களை விட்டு (நாம ஸங்கீர்த்தனாதிகளைச் செய்வது முதலான) வேறு வழிகள் அவனை உகப்பிக்கமாட்டா) என்று விஷ்ணு புராணம் பகர்கிறது. 'சந்திவேள்வி சடங்குநான்மறை யோதியோதுவித்து ஆதியாய்வரும் அந்தணாளர்' என்று ஆழ்வார்களும் இவ்வர்த்தத்தை உணர்த்தினர்.

பரித்ராணாய – நன்கு ரக்ஷிப்பதற்காக. த்ராணம் (ரக்ஷணம்) இஷ்டத்தைத் தருவது, அநிஷ்டத்தைப் போக்குவது என்றிருவகைப்படும். வைஷ்ணவ ஶ்ரேஷ்டர்களின் இஷ்டாநிஷ்டங்களையறிந்து இரண்டையும் நிறைவேற்றி ஸாதுக்களை ரக்ஷிக்கவே எம்பெருமான் அவதரிக்கிறான். இந்த வைஷ்ணவோத்தமர்கள் எப்படிப்பட்டவர்கள் என்னில் "ஸாத₄வ: – உக்தலக்ஷண த₄ர்மஶீலா: வைஷ்ணவாக்₃ரேஸரா: மத் ஸமாஶ்ரயணே ப்ரவ்ருத்தா:, மந்நாமகு₃ண கர்மஸ்வரூபாணாம் வாங்கமநஸா கோ₃சரதயா, மத்தர்ஶநேந விநா, ஸ்வாத்மத₄ாரண போஷணாதி₃கம், அலப₄மாநா:, க்ஷணமாத்ர காலம் கல்பஸஹஸ்ரம் மந்வாநா:, ப்ரஶிதில ஸர்வ கா₃த்ரா ப₄வேயுரிதி, மத்ஸ்வரூப சேஷ்டித அவலோகநா லாபாதி₃ தா₃நேந தேஷாம் பரித்ராணாய".

'அடியிணையடைந்தேன்' 'துயரறு சுடரடி தொழுதெழு' என்று பரமபுருஷனை ஆஶ்ரயிப்பதிலேயே ஈடுபட்டவர்கள். 'யானுமேத்தி ஏழுலகுமுற்றுமேத்திப் பின்னையும் தானுமேத்திலும் தன்னையேத்தயேத்த எங்கெய்தும்' என்கிறபடியே எம்பெருமானுடைய நாமங்கள் குணங்கள் செயல்கள் ரூபமென்றெத்தனை யனுபவித்தாலும் அநுபவித்துமுடிக்க வொண்ணாமையாலே, அவற்றில் பெறாத அம்ஶத்தை நினைத்து பெற்ற வம்ஶம் அஸத்கல்பமா யிருப்பதைக்கண்டு நோவுபடுவர்கள். 'உண்ணுஞ்சோறு பருகுநீர் தின்னும் வெற்றிலையுமெல்லாம் கண்ணனெம்பெருமான்' என்று வாஸுதேவனையே த₄ாரக போஷக போ₄க்₃யங்களாக எண்ணியிருக்கும் மஹாத்மாக்களாகையாலே, 'தொல்லைமாலைக் கண்ணாரக்கண்டு கழிவதோர் காதலுற்றார்க்கும் உண்டோ கண்கள் துஞ்சுதலே',

'காணவாராயென்றென்று கண்ணும் வாயும் துவர்ந்து', 'கூராழிவெண்சங்கேந்திக் கொடியேன்பால்வாராய் ஒருநாள்' 'தாமரைநீள் வாசத்தடம்போல் வருவானே! ஒருநாள் காண வாராயே', 'அவனைவிட்ட கன்றுயிராற்றகில்லா' என்றவனைக் காணாவிடில் த$_4$ாரக போஷக போ$_4$க்$_3$யங்களைப் பெறாதவர் போலே தவிப்பர்கள். 'ஒருபகலாயிரம் ஊழியாலோ', 'தெய்வங்காள் என் செய்கேன் ஓரிறவு ஏழுழியாய்' என்றவனைவிட்டு ஒரு நொடிப் பொழுது பிரிந்திருந்தாலும் கல்ப ஸஹஸ்ரமாக நினைப்பவர்கள். 'காலாழும் நெஞ்சழியும் கண்சுழலும்' 'காலுமெழா கண்ணநீரும் நில்லா உடல்சோர்ந்து நடுங்கிக்குரல் மேலுமெழா மயிர்க்கூச்சுமறா என்தோள்களும் வீழ்வொழியா' 'உள்ளெலாமுருகிக் குரல்தழுத்தொழிந்தேன் உடம்பெலாம் கண்ணநீர் சோர' 'கங்குலும் பகலும் கண்துயிலறியாள் கண்ணநீர் கைகளாலிறைக்கும் ... எங்ஙனே தரிக்கேன் உன்னைவிட்டென்னும்' 'ஆஹ்லாத$_3$ சீதநேத்ராம்பு$_3$: புளகீக்ருத க$_3$ாத்ரவாந் ஸதா$_3$ா பரகு$_3$ணாவிஷ்டோ த்$_3$ரஷ்டவ்ய: ஸர்வதே$_3$ஹிபி:' என்கிறபடியே ஸர்வ அவயவ சைதில்யமுடையவர்கள். 'அச்சுவை பெறினும் வேண்டேன்' 'ப$_4$ாவோ நாந்யத்ர க$_3$ச்ச$_3$தி' என்கிறபடியே மோக்ஷவின்பத்தையுமுபேக்ஷித்து இவ்வுலகில் இவ்வுடம்போடே எம்பெருமானைக் காணவேணும், அவனோடு பேசவேணும், அவனைத் தழுவவேணுமென்று பாரித்திருப்பவர்கள். இத்தையிறே 'உன் தாளிணைக்கீழ் வாழ்ச்சி' என்றது! இப்படியாகப்பட்ட அவர்களுடைய இஷ்டங்களை அவர்களுக்கு கொடுப்பதென்பது எம்பெருமான் அவதரித்தாலொழிய நிறைவேறாதிறே! ஸங்கல்பம் இங்கு என்ன செய்யக்கூடும்? ஆக இங்கு ஸாது ஶப்த விவக்ஷிதர்கள் ஆழ்வார்கள் போன்றவர்கள். அவர்களுடைய பாரிப்பு ஸங்கல்பத்தினால் ஒருபோதும் தீர்க்க முடியாதிறே!

விநாஶாயச து$_3$ஷ்க்ருதாம் – இந்த ஸாதுக்களுக்கு தீங்கிழைக்கும் துஷ்டர்களை யழித்தாலொழிய ஸாது பரித்ராணம் நிறைவேறாதாகையாலே அவதாரத்துக்கு ஆநுஷங்கிக ப்ரயோஜநமான துஷ்ட விநாஶத்தையும் சொல்கிறான். 'ந க்ஷமாமி' என்கிறபடியே தன்னாலும் பொறுக்க வொண்ணாத பாகவதாபசாரத்தைச் செய்பவர்களை சித்ரவதம் செய்வதற்காகவும் பிறக்கிறான். 'கோபம் ஆயாரயத் தீவ்ரம் வத$_4$ார்த்தம் ஸர்வ ரக்ஷஸாம்' என்று தன் விஷயத்தில் அபசாரப்பட்டவர்களைக் குறித்து கோபத்தை நிர்பந்தித்து வரவழைத்துக் கொள்பவன், 'கோபஸ்ய வஶமேயிவாந்' என்றபடி ராவணனால் காயமடைந்த அநுமனைப்பார்த்து கோபவஶமானானன்றோ. தன்னடியார் திறத்தில் அபசாரப்படுவோரை ஒருபோதும் க்ஷமிக்கமாட்டானிறே. திறந்தெரிகான்ற பிலவாயையும் எரிவட்டக் கண்களையும் கையும் வில்லுமாக நிற்கும் நிலையையும் மல்லாண்ட திண்டோளையும் காட்டி, 'வெந்நரகம் சேராவகையே சிலைகுனித்தான்' 'கஞ்சன் வயிற்றில் நெருப்பென்ன நின்ற நெடுமால்' 'எங்குமுளன் கண்ணன் என்ற மகனைக்காய்ந்து இங்கில்லையாயென்று இரணியன் தூண்புடைப்ப, அங்கப்பொழுதே அவன்வீயத் தோன்றிய என் சிங்கப்பிரான்' என்றபடி

இவர்களைத் தானே சித்ரவதம் செய்தழிப்பதற்காகப் பிறக்கிறான். 'மண்ணின் பாரம் நீக்குதற்கே வடமதுரைப் பிறந்தான்' என்று அருளிச்செயல். 'ஈஶ்வரன் அவதரித்துப் பண்ணின ஆனைத்தொழில்களெல்லாம் பாகவதாபசாரம் பொறாமை' என்று ஆசார்யர்கள் ஸ்ரீஸூக்தி. சத்ருக்கள் என்பது ஜாதிபரமன்று, ஸ்வபாவபரம். 'ந நமேயம்' என்றிருப்பவர்கள். அஸுர ஜாதியைச் சேர்ந்த ப்ரஹ்லாதனை 'உபமாநம் அஶேஷாணாம் ஸாதூநாம்' என்கையாலும், ராக்ஷஸ ஜந்மமான ஸ்ரீவிபீஷணாழ்வானை 'விபீஷணஸ்து தர்மாத்மா' என்கையாலும், தேவயோநியாயிருக்கச் செய்தே ஜயந்தன் ப்ரஹ்மாஸ்த்ரத்துக்கு இலக்காகையாலும் ஜாதிபரமன்று, ஸ்வபாவபரம்.

தர்ம ஸம்ஸ்தாபநார்த்தாய - மூன்றாம் அவதார ப்ரயோஜநம் - தனக்கு ஆராதனமாயிருக்கும் தர்மத்தை நன்கு நிலைநிறுத்துவதற்காக. இங்கு ஸத்யம், தானம் முதலிய ஸாதாரண தர்மங்களைச் சொல்லவில்லை. வேதத்தில் சொல்லப்பட்டுள்ள யஜ்ஞாதி தர்மங்களை நன்கு நிலைநிறுத்துவதற்காக. ஸ்தாபநமாவது - தான் அநுஷ்டிப்பதன் மூலமும், பிறர்க்கு உபதேஶிப்பதன் மூலமும் தர்மங்களைப் பரவச் செய்வது. இச்செயலை வ்யாஸர் முதலான ஜீவர்களை அதி₄ஷ்ட்டித்து நின்றும் செய்யலாம். ஸம்ஸ்தாபநமாவது - கர்மங்களால் ஆராதிக்கப்படும் தன் திவ்யமங்கள விக்ரஹத்தைக்காட்டி பக்தியை உண்டுபண்ணுவது. இடக்கையும் வலக்கையும் அறியாத இடைச்சி (சிந்தயந்தீ), போ₄க்₃யமான பூவைவிற்று வயிறு வளர்க்கும் மாலாகாரர் முதலானார்க்கு தன்னிடம் அன்பையும், இதரவிஷயங்களில் விரக்தியையும் விளைவிக்க உதவுவது அவதார விக்ரஹமேயிறே. எது மோக்ஷத்திற்கு ஸாதனமோ அதுவே தர்மம். கர்ம ஜ்ஞான பக்தி ப்ரபத்தி இவை யாவும் மோக்ஷ ஸாதனமாகாது. அவைகள் நம்மை மோக்ஷத்துக்கு அதிகாரிகளாக ஆக்குபவை. 'க்ருஷ்ணம் த₄ர்மம் ஸநாதனம்' 'ராமோ விக்ரஹவாந் த₄ர்ம' என்று சொல்லப்படுகிற ஸர்வேஶ்வரனே மோக்ஷத்திற்கு ஸாதனமான ஸித்த தர்மம். இப்படி ஸாக்ஷாத் தர்மமான தன்னைக் காட்டி 'தானே உபாயம்' என்று காட்டுவதும் அவதார ப்ரயோஜநமாகிறது.

யுகே₃ யுகே₃ ஸம்ப₄வாமி - க்ருதம், த்ரேதா, த்வாபரம், கலி எனும் நாலு யுகங்களில் இன்ன யுகத்தில்தான் பிறப்பது எனும் நியமமும், ஒவ்வொர் யுகத்திலும் பிறந்தே தீர வேணும் எனும் நிர்பந்தமும் இல்லை. எந்த யுகத்திலும் பிறக்கிறேன். ஸம்ப₄வாமி - தேவர், மனிதர், திர்யக், ஸ்தாவரம் எனும் நாலு யோனிகளிலும் பிறக்கும்போதும் என் இச்சையே ஹேதுவாகப் பிறக்கிறேன்.

விஜாயதே - விஶேஷமாகப் பிறக்கிறான். 'ஸ உ ஶ்ரேயாந் ப₄வதி ஜாயமாந:' (அவன் பிறக்கப் பிறக்கவே பெருமை பெறுகிறான்), 'நிலை வரம்பில பலபிறப்பாய் ஒளிவரும் முழுநலம்' என்கிறபடியே பரம ஸாம்யத்தையடைந்தோர் நிறைந்த பரமபதத்தில் பகல் விளக்கு

போலே மங்கியிருக்கும் ஸௌஶீல்ய ஸௌலப்$_4$ய வாத்ஸல்யாதி$_3$ குணங்கள், இருட்டறையில் விளக்கு போலே ப்ரகாசிப்பது இவ்விருள் தருமா ஞாலத்திலே யாகையாலும், துஷ்டர்கள் நிறைந்த இவ்வுலகிலேயே ஶௌர்ய வீர்யாதி குணங்களும் நிறம்பெற வேணுமாகையாலும், பிறந்தே பெருமை பெறுகிறான். 'நிலைவரம்பில' – அவதரித்து எளியனாய் நின்றநிலையிலே ஏழுநாள் கோவர்த்தனத்தை தரித்து பரத்வம் தோற்றநிற்கிலும் நிற்கும். ஸாரத்ய வேஷத்தோடே தாழநிற்கச்செய்தே ஶ்ரீவிஶ்வரூபத்தையும் காட்டும். புத்ரார்த்தமாக போகா நிற்கச்செய்தே கண்டாகர்ணனுக்கு மோக்ஷத்தையும் கொடுக்கும். ஒன்றிலும் ஒரு நியதியில்லை; ரக்ஷணத்துக்குறுப்பாமத்தனையே வேண்டுவது.

ஆகவிப்படியாக, ஸாது$_4$ ஸம்ரக்ஷணம், துஷ்ட விநாஶம், தர்ம ஸம்ஸ்தாபநம் எனும் மூன்றும் இங்கு அவதரித்தாலொழிய நிறைவேறாதாகையாலே அதற்காகவே அவதரிக்கிறேன் என்றானாயிற்று.

**ஜந்ம கர்ம ச மே தி$_3$வ்யம் ஏவம்யோ வேத்தி தத்த்வத:|**
**த்யக்த்வா தே$_3$ஹம் புநர் ஜந்ம நைதி மாமேதி ஸோऽர்ஜுந|| (4-9)**

அர்ஜுநா! என்னுடைய அப்ராக்ருதமான பிறப்பையும் செயலையும் எவனொருவன் முற்கூறியபடி உள்ளபடி அநுஸந்திக்கிறானோ, அம்மனிதன் இப்போதுள்ள ஶரீரத்தை கைவிட்டு மீண்டும் பிறவியெடுப்பதில்லை; என்னையே அடைகிறான்.)

எம்பெருமானுடைய **அவதார ரஹஸ்ய ஜ்ஞான**மானது பக்திநிஷ்டனுக்கு இந்த பிறப்பிலேயே மோக்ஷத்தையளிக்க வல்லது என்கிறான்.

எம்பெருமானுடைய பிறப்பு ஸம்ஸாரிகளுடையதைப் போலே கர்மமடியாகவன்றி, அவன்தன் இச்சையாலேயே எடுக்கப்படுகிறது. 'ப$_3$ஹுஸ்யாம் ப்ரஜாயேய' – நானே பலவாகக் கடவேன்; தேவர் மனிதர் முதலான பல பொருள்களாகப் பிறக்கக் கடவேன் என்று ஸ்ருஷ்டி ஸங்கல்பம் செய்து பிறக்கும்போது, தனக்கு ஶரீரமாய் தேவ மநுஷ்யாதி ரூபமாகப் பிறக்கும் சேதநர்க்கும் தனக்கும் பொதுவானதாயிராமல், விலக்ஷணமான பிறப்பையுடையவன்.

பரமாத்மாவினுடைய பிறப்பு அப்ராக்ருதமானது. மற்ற சேதநர்களுடையதைப்போலே ப்ராக்ருதமான ஶரீரத்தோடு (முக்குணமயமான சரீரத்தோடு) எடுக்கும் ஜந்மமல்ல. ந பூ$_3$த ஸங்க$_4$ ஸம்ஸ்த$_2$ாநோ, தே$_3$ஹோऽஸ்ய பரமாத்மந' (பரமாத்மாவின் திருமேனி பஞ்சபூதங்களின் சேர்த்தியினாலானதன்று) என்கிறபடியே ப்ராக்ருதமான சரீரத்தினின்று வேறுபட்ட திவ்யமான பிறப்பு. ஜீவர்களுடைய பிறப்பைப்போலே தாழ்ந்ததாய், பந்தகமானதாயிராமல், மிகச்சிறந்ததாய், நினைக்கயினியதாய், இதையநுஸந்திப்பார் பந்தத்தை யறுப்பதாயுமிருக்கும். 'ஸ உ ஶ்ரேயாந் ப$_4$வதி ஜாயமாந:' (அவன் பிறந்த பின்பே

மேன்மை பெறுகிறான்), 'நிலை வரம்பில பலபிறப்பாய் ஒளிவரும் முழுநலம்' என்று உபயவேதாந்தங்களிலும் பேசப்பட்டது. 'என்னுடைய ஜந்மங்கள் கர்மமடியாகவன்று. இச்சையடியாகவாயிருக்கும். நாம் பிறவாநிற்கச்செய்தே பிறவாமையும் கிடக்கும். தாழநின்ற நிலையில் மேன்மையும் கிடக்கும். அப்ராக்ருத ஸம்ஸ்தானத்தை இதரஸஜாதீயமாக்கி வந்து பிறப்புதோம். இவற்றிலே ஒன்றையறிந்தவர்களுக்கும் பின்னை ஜந்மமில்லை' என்று இந்த *ஶ்*லோகத்தின் கருத்தை விவரிக்கிறது நம்பிள்ளை ஈ.டு.

'பிதா புத்ரேண பித்ருமாந் யோநியோநௌ' (ஸர்வலோக பிதாவானவன் தன்பிள்ளையொருவனை பிதாவாகக் கொண்டு யோனிகள்தோறும் பிறக்கிறான்) என்ற இவனுடைய அவதார நீர்மையை என்னென்பது! அமைவுடை நாரணன் மாயையை அறிபவர் யாரே? 'இவனுடைய அவதார ரஹஸ்யம் ஒருவர்க்கும் அறிய நிலமல்லவே. ப்ரகாரியான தான், ப்ரகாரமான வஸ்துவிலே ஒன்று 'என் மகன்' என்று அபிமானிக்கும்படி வந்து பிறந்த இவ்வா*ஶ்*சர்யம் ஒருவர்க்கும் நிலமல்ல. நித்ய*ஸூ*ரிகள் பரத்வாநுபவம் பண்ணுகையாலே அறியார்கள்; ஸம்ஸாரிகள் நாஸ்திகராகையாலே அறியார்கள்; ப்$_3$ரஹ்மாதிகள் தந்தாமறிவாலே அறிய இருக்கிறவர்களாகையாலே அறியார்கள்; மயர்வற மதிநலம் அருளப் பெற்றவர்கள் மோஹித்துக் கிடப்பர்கள்; ஸ்வதஸ் ஸர்வஜ்ஞனான தானும் 'ஜந்ம கர்ம ச மே திவ்யம்' என்னுமாகையாலே ஒருவர்க்கும் நிலமல்ல என்கிறார்' என்று ஈட்டு ஸ்ரீஸூக்திகள்.

எம்பெருமானுடைய சேஷ்டிதங்கள் ஒவ்வொன்றும் எவராலும் நெஞ்சாலும் நினைக்க வொண்ணாதது. 'எத்திறம் உறவினோடு இணைந்திருந்தேங்கிய எளிவே' 'பிறந்தவாறும் வளர்ந்தவாறும் பெரிய பாரதம் கைசெய்து ஐவர்க்குத் திறங்கள் காட்டியிட்டுச் செய்துபோன மாயங்களும்' 'வதுவை வார்த்தையுள் ஏறு பாய்ந்ததும் மாயமாவினை வாய் பிளந்ததும் மதுரை வார்குழலார் குரவை பிணைந்த குழகும் அது இது உது என்னலாவன வல்ல என்னையுன் செய்கை நைவிக்கும்' 'பெய்யும் பூங்குழல்பேய்முலையுண்ட பிள்ளைத்தேற்றமும், பேர்ந்தோர் சாடிறச் செய்ய பாதமொன்றால் செய்த நின் சிறுச்சேவகமும் நெய்யுண் வார்த்தையுள் அன்னை கோல்கொள்ள நீயுன் தாமரைக்கண்கள் நீர்மல்கப் பையவே நிலையும் வந்து என் நெஞ்சை யுருக்குங்களே' 'உண்ண வானவர்கோனுக்கு ஆயரொருப்படுத்த வடிசிலுண்டதும், வண்ணமால்வரையை யெடுத்து மழைகாத்ததும், மண்ணைமுன் படைத்துண்டுமிழ்ந்து கடந்திடந்துமணந்த மாயங்கள் எண்ணுந்தோறும் எந்நெஞ்சு எரிவாய்மெழுகொக்கும் நின்றே' 'நின்றவாறும் இருந்தவாறும் கிடந்தவாறும் நினைப்பரியன ஒன்றலாவுருவாய் அருவாய நின்மாயங்கள் நின்றுநின்று நினைகின்றேன் உன்னையெங்ஙனம் நினைகிற்பன்?' 'அடியைமூன்றை யிரந்தவாறும் அங்கே நின்றாழ்கடலும் மண்ணும்விண்ணும் முடிய, ஈரடியால் முடித்துக்கொண்ட முக்கியமும் நொடியுமாறவை கேட்குந்தோறுமென்நெஞ்சம் நின்றனக்கே கரைந்துகும்' என்று ஆழ்வாரும்,

'தூ₄த்தாயிதம் தவஹி யத்கில ராஸகோஷ்ட்₂யாம் தத் கீர்த்தநம் பரமபாவநம் ஆமநந்தி' (ராஸலீலையில் நீ கோபிகளோடு தழுவி புகுந்து சுற்றிச் சுழன்று பறிமாறிய தூ₄ர்த்த க்ருத்யங்களும் அனைவரையும் மிகவும் பரிசுத்தப்படுத்துபவை என்று ஞானிகள் கூறுகின்றனர்) என்று ஆழ்வானும் அருளிச் செய்தார்கள். ப்ரபந்நர்கட்கு யாவதாயுஷம் பகவத்குண சேஷ்டிதங்களே காலக்ஷேபத்துக்கு விஷயம்.

ஜீவர்களிடம் ஜந்ம சேஷ்டிதங்கள் தாழ்ந்தவையாயும், இகழத்தக்கவையாயும் காணப்படா நிற்க – 'மச்சொடு மாளிகையேறி மாதர்கள் தம்மிடம் புக்கு, கச்சொடு பட்டைக் கிழித்து காம்பு துகிலவை கீறி நிச்சலும் தீமைகள் செய்வாய்' 'தொத்தார் பூங்குழல் கன்னியொருத்தியைச் சோலைத் தடங்கொண்டுபுக்கு, முத்தார் கொங்கை புணர்ந்து, இராநாழிகை மூவேழு சென்றபின் வந்தாய்' என்ற தூ₄ர்த்த ஜார க்ருத்யங்கள் எம்பெருமான் பக்கலிலே சிறந்தவையாகவும் அமைவது ஏனென்னில் – எம்பெருமானை *ஶ*ாஸ்த்ரம் காட்டும்போது திவ்யமான ஜந்ம சேஷ்டிதங்களையுடைய பரமாத்மாவாகவே காட்டுவதால், ஜீவாத்மாக்களிடமே செல்லுபடியாகும் தர்க்கங்கள் இப்பெருமையை இல்லை செய்ய முடியாது. வெண்ணையை திருடியதும், பெண்களை களவு கொண்டதும், உண்மையில் உபயவிபூதிநாதனான அவனுடைய உடைமைகளையே யாகையால், ஜீவர்கள் செய்யுமிச்செயல்கள் குற்றமாகவும், எம்பெருமான் செய்வது புகழப்படுவதாகவுமாகிறது. இங்கு 'யதி மே ப்ரஹ்மசர்யம் ஸ்யாத் ஸத்யம்ச மயி திஷ்டதி, அவ்யாஹதம் மமை*ஶ்*வர்யம் தேந ஜீவது பாலக:' எனும் (பரிக்ஷித் ஜனன கட்ட) *ஶ்*லோகம் அநுஸந்தேயம்.

இப்படியாக **'இவனுடைய ஜந்ம சேஷ்டிதங்கள் திவ்யங்களே'** என்று உள்ளபடியறிந்து எந்த பக்திநிஷ்டன் (யோ வேத்தி) அநுஸந்திக்கிறானோ, அவன் 'த்யக்த்வா தேஹம் புநர் ஜந்ம நைதி ஸ' – இவ்வுடலை விட்டபின் மீண்டுமோர்வுடலை எடுத்துக் கொள்வதாகிற பிறப்பை யடையமாட்டான். அம்மை வயிறு எமன் கயிறு என்றுழல மாட்டான். மத்துறுகடை வெண்ணெய் களவினில் உரவிடை ஆப்புண்டு உரலினொடு இணைந்திருந்தேங்கிய இவனுடைய ஒரு திவ்யகர்மத்தை யநுஸந்திப்பவர்களுக்கும் ஸம்ஸார பந்தம் அறுந்துபோம்; மோக்ஷம் நி*ஶ்*சயம் என்று சுகப்ரஹ்மரிஷியும் (பாகவதத்தில்) அருளிச்செய்தார்.

'ஸம்ஸார ப₃ந்த₄ ஸ்தி₂தி மோக்ஷஹேதுவான தானிறே இப்படி கட்டுண்டிருக்கிறான். ப்ரஹ்மாதிகளைத் தன் ஸங்கல்பத்தாலே கட்டுவது விடுவது ஆகிறவனிறே இப்போது ஒரு அபலை கையாலே கட்டுண்டிருக்கிறான். 'த்யக்த்வா தேஹம் புநர்ஜந்ம நைதி' என்கிறபடி நம்முடைய கட்டை அவிழ்க்கவிறே தான் கட்டுண்டிருக்கிறது' என்று ஈட்டு ஸ்ரீஸூக்தி. 'ஜரா மரண மோக்ஷாய' 'பிறவித்துயரற' என்கிறபடியே கைவல்யநிஷ்டனைப் போலே பிறவித் துயரற்றவுடன் ஸ்வாத்மாநுபவ மாத்ரமான மோக்ஷத்தில் இழியாதே, என்னையே யடைகிறான்.

உபாஸகனுக்குப் பல ஜந்மங்களில் அநுபவிக்க வேண்டியதான ப்ராரப்த கர்மம் எந்த ஜன்மத்தில் முடிகிறதோ, அந்த ஜன்மத்தில்தான் உபாஸநம் பூர்த்தியாகி அவன் மோக்ஷமடைவான் என்று ஶாஸ்த்ரங்களில் கூறப்படுவது இவன் விஷயத்தில் பொருந்தாது. அவதார ரஹஸ்யத்தையநுஸந்தித்துக் கொண்டு உபாஸிக்குமிவனுக்கு இந்த ஜன்மத்திலேயே உபாஸநம் பூர்த்தியாகி மோக்ஷம் கிடைத்தே தீரும். புருஷஸூக்தத்தில், 'வேத₃ாஹ மேதம் ..... தமேவம் வித்வாந்' என்று அவதார ரஹஸ்ய ஜ்ஞானத்தோடு உபாஸிப்பவனை எடுத்து 'அம்ருத இஹ ப₄வதி' என்று அவன் இந்த ஜன்மத்திலேயே மோக்ஷமடைகிறான் என்று கூறப்பட்டது.

ப்ரபன்னனுக்கு அர்ச்சாவதார பர்யந்தமான குணபூர்த்தியுள்ள அவதாரங்களிலேயே ப்ரபத்தி செய்யவேணும் எனும் நியமம் இருக்கையாலே அவதார ரஹஸ்ய ஜ்ஞானம் மிகவும் அவஶ்யம். ப்ரபன்னனுக்கு இந்த ஜன்மத்திலேயே மோக்ஷம் என்பது ஶாஸ்த்ர ஸித்தம். ஆக, பக்திநிஷ்டனோடு ப்ரபன்னனோடு வாசியற அவதார ரஹஸ்யாநுஸந்தானமுடையவனுக்கு இந்த ஜன்மத்திலேயே மோக்ஷம் என்றதாயிற்று.

இப்படியானால் எல்லோரும் ப்ரபத்தியிலேயோ அவதார ரஹஸ்யாநுஸந்தானத்தோடு கூடிய பக்தியிலேயோ இழிவார்களேயொழிய, பல ஜன்மங்கள் ஸம்ஸாரத்தில் இழுத்தடிக்கக்கூடிய கேவல பக்தியில் இழியமாட்டார்களேயென்னில் ருசி பேதத்தாலும், ஜ்ஞான ஶக்தி தாரதம்யத்தாலும் அதிகாரிகள் பலதரப்பட்டவர்களா யிருக்கையால் இவ்வதிகாரிகள் கேவல பக்தியில் இழிவார்களாகையால் இக்குறை வாராது. 'ஆத்மவஸ்துவானது பரமபுருஷனுக்கு அசித்தைப்போலே அத்யந்த பரதந்த்ரமாகையாலே, தன் முயற்சியாலே அவனைப் பெற நினைப்பது தகாது' எனும் சிறந்த ஜ்ஞானமுடையவர்களே ப்ரபத்திக்கு அதிகாரிகள். இந்த ஜ்ஞானமில்லாத த்ரைவர்ணிக புருஷர்கள் அனைவரும் கேவல பக்திக்கு அதிகாரிகள். 'கூவிக்கொள்ளும் காலமின்னம் குறுகாதோ' என்கிறபடியே ஸம்ஸாரத்தில் அடிக்கொதிப்பாலே இந்த ஜன்மத்திலேயே மோக்ஷமடைய வேணும் என்று துடிக்கும் பக்திநிஷ்டர்கள் அவதார ரஹஸ்யாநுஸந்தானத்தோடு பக்தியோகத்தை அநுஷ்டிக்க அதிகாரிகள்.

ப்ரபந்நர்க்கு ப்ரபத்தி செய்யத்தக்க விஷயத்தை தெரிவிப்பதற்கும், இந்த ஜன்மத்திலேயே மோக்ஷமடைய விரும்பும் உபாஸகனுக்கு அங்கமாகவுமாகிறது அவதார ரஹஸ்ய ஜ்ஞாநம். 'போர் புரிவாய்' என்றவுடன் அப்படியே என்னாமல் 'போர்புரியமாட்டேன்' என்று மறுத்துரைத்தமையால் 'ஆத்மா அச்யுதனுக்கு அத்யந்த பரதந்த்ரமானது' எனும் அறிவு அர்ஜுநனுக்கு இல்லையென உணர்ந்து, கண்ணன் அவனுக்கு பக்தியோகத்தை யுபதேஶிக்கிறானாகையால், இங்கு பக்தியோகத்துக்கு அங்கமாகவே அவதார ரஹஸ்ய ஜ்ஞானம் அர்ஜுநனுக்கு உபதேஶிக்கப்படுகிறது.

ஆக இந்த ஶ்லோகத்தில், தன்னுடைய திவ்யமான ஜன்மங்களையும் சேஷ்டிதங்களையும் உள்ளபடி அநுஸந்திப்பதால் உபாஸநவிரோதி பாபங்கள் அனைத்தும் இந்த ஜன்மத்திலேயே கழியப்பெற்று ஶாஸ்த்ரங்களில் சொல்லியபடி என்னை த்யானித்து பக்தி நிலையையடைந்து என்னிடமே நெஞ்சு செலுத்தி என்னையே யடைவான் என்று கூறப்பட்டதாயிற்று.

**'சாதுர்வர்ண்யம் மயா ஸ்ருஷ்டம் குணகர்ம விப$_4$ாக$_3$ஶ:'** (4–13) எனும் ஶ்லோகத்தாலே கர்மயோக ஆரம்பவிரோதி பாபங்கள் நீங்க வழிகாட்டுகிறான். ஸர்வேஶ்வரனான என்னாலே, ஸத்வம் முதலான குணத்திற்கேற்பவும் அதையொட்டிச் செய்யவேண்டிய செயல்களுக்கேற்பவும், நாலு வர்ணங்கள் ஸ்ருஷ்டிக்கப்பட்டது. இந்த விசித்ர படைப்புக்கு கர்த்தாவான என்னை தோஷமற்றவனாக அறிவாய்.

ஏற்றத்தாழ்வுகளுடன் சேதனர்களைப் படைப்பதினால் வைஷம்யம் (பக்ஷபாதம்), நைர்க்$_4$ருண்யம் (கருணையின்மை) ஆகிய தோஷங்கள் என்னை ஸ்பர்ஶியா என்றறிவாய். ஏனென்னில், கு$_3$ணகர்ம விப$_4$ாக$_3$ஶ: – ஸத்வம் முதலான குணங்களுக்கேற்பவும், அதையொட்டிய செயல் பிரிவுகளையுட்கொண்டேயும் வர்ணங்கள் என்னால் ஸ்ருஷ்டிக்கப்பட்டன.

**கு$_3$ணகர்ம விப$_4$ாக$_3$ஶ:** – குணகர்ம பிரிவாவது – ஸத்வ குணத்தை முக்கியமாகவும், ஶமம் (மனதையடக்குதல்) தமம் (வெளிஇந்த்ரியங்களையடக்குதல்) அவற்றுக்கேற்ப செயல்களைக் கொண்டது ப்ராஹ்மண வர்ணம். ரஜோ குணத்தை முக்யமாகவும் அதற்கேற்ப யுத்தம் முதலான செயல்களைக் கொண்டது க்ஷத்ரிய வர்ணம். ரஜஸ்தமோ குணங்களிரண்டும் முக்கியமாகவும் அதற்கேற்ப பயிர்த்தொழில வாணிபம் முதலான செயல்களைக் கொண்டது வைஶ்ய வர்ணம். தமோ குணத்தை முக்யமாகக் கொண்டு முந்திய வர்ணங்களுக்கு வேலை செய்வது முதலான செயல்களைக் கொண்டது ஶூத்ர வர்ணம். சேதநர்களிடையே காணும் இந்த ஏற்றத்தாழ்வுகளுக்கு அவரவர்களுடைய கர்மங்களே காரணம்; நான் காரணமல்ல. ஒரு ஜன்மத்தில் ஒரு வர்ணத்தில் பிறந்தவன் மறுஜன்மத்தில் அவனது கர்மங்களுக்கேற்பவே வர்ணம் பெறுகிறான். ஆகையால் வைஷம்ய நைர்க்$_4$ருண்ய தோஷங்கள் என்னைத் தொடமாட்டா.

நீ அநுஷ்டிக்கும் கர்மம், பலன்களில் பற்றை விளைவித்து நிஷ்காம கர்மயோகத்தை தடை செய்யக்கூடும். அல்லது உன் ப்ராசீன கர்மங்கள் க்ஷுத்$_3$ர பலன்களில் பற்றினாலே செய்யப்பட்டிருந்தால், அந்த தாழ்ந்த பலன்களையே உனக்குத்தந்து உன்னை நிஷ்காம கர்மயோகத்தில் ஈடுபடமுடியாதபடி செய்யலாம். இத்தகைய கர்மயோக ஆரம்பவிரோதி

பாபங்களை, 'ஸர்வகாரணனான நான் மேற்சொன்ன தோஷங்களற்றவன்' என்றறிவதன் மூலம் நீ போக்கிக் கொள்ளலாம் என்று வழிகாட்டினானாயிற்று.

கர்மயோகிக்கு ஆரம்ப நிலையில் நெஞ்சு ஆத்மஜ்ஞானத்தில் ஊன்றியிராது. கர்மாவே முக்யமாயிருக்கும். காமேந்த்ரியங்கள் ஊற்றத்துடன் செயல்படும். கர்மாவை பகவதாராதனம் என்று அதன் பயனில் ஆசையின்றி செய்வதால் கர்மேந்த்ரியங்கள் இதர விஷயங்களில் செல்லாமல் அநுகூலவிஷயமான பகவதாராதனத்தில் ஊன்றும். இந்த்ரியங்கள் அடங்கி வசப்பட்டுவிட்டால் ஆத்மசிந்தனம் முக்யமாகி, கர்மத்தைச் செய்யும்போதும் நெஞ்சில் ஆத்மாவே நிறைந்திருப்பதால் கர்மம் செய்தபோதிலும் செய்யாதவன் என்னலாம்படியிருப்பவன். இப்படிப்பட்டவனுக்கு கர்மம் ஞானமாகவும் ஜ்ஞானம் கர்மமாகவும் ஆய்விடுகிறது.

தேவதைகளைக் குறித்து அர்ச்சனம் முதலான கர்மாக்கள் மூலம் நன்றாக பூஜிப்பதில் ஊன்றியிருப்பவர் ஒருவகை கர்மயோகிகள். எந்த தேவதையைப் பூஜித்தாலும் அப்பூஜை, அந்த தேவதைக்கு அந்தர்யாமியான பரமபுருஷனையே சேரும். ஆகாஶாத் பதிதம் தோயம் யத$_3$ா க$_3$ச்ச$_2$தி ஸாக$_3$ரம்| ஸர்வ தே$_3$வ நமஸ்கார: கேஶவம் ப்ரதி க$_3$ச்ச$_2$தி|| எல்லா நல்ல கர்மங்களும் கர்மயோகத்தில் சேர்ந்தவையே.

சில அதிகாரிகள் (அக்நிஹோத்ரிகள்) ப்ரஹ்மாத்மகமான அக்நியில் யாகத்துக்கு வேண்டிய ஸாதனங்களைக் கொண்டு யாகம் பண்ணுவதில் (ஹவிஸ்ஸை சேர்ப்பதில்) ஊன்றியிருப்பர். இந்த்ரிய நிக்ரஹத்தில் ஊன்றியிருப்பவர்கள் இவர்கள்; வேதாத்யயநம், வேதார்த்த விசாரம் இவற்றில் ஊன்றியிருப்பர். ப்ராணாயாமத்தில் ஊன்றியிருப்பர் சிலர். இப்படி நற்காரியங்களில் ஊன்றிநிற்கும் அதிகாரிகள் யாவரும் கர்மயோகிகள்தாம். எந்தவிதமான யோகத்தில் ஊன்றியிருந்தாலும், பகவத் கைங்கர்ய ரூபமான நித்ய நைமித்தக கர்மாக்கள் அவஶ்யம் விடாமல் அநுஷ்டிக்கப்பட வேண்டும். இவை ஆத்மஸாக்ஷாத்காரத்துக்கு உதவுவன.

எல்லாக் கர்மங்களும் ஞானத்திலேயே முடிவடைகின்றன. வர்ணாஶ்ரம தர்மத்தை யநுஷ்டிப்பதும் கர்மயோகமே. அர்ஜுநனுக்கு வில் முதலான த்ரவ்யாம்ஶங்களைக் கொண்டு கர்மாநுஷ்டானம் வாய்க்கிறது. கர்மாவை முறைப்படி பகவதாராதனமாகச் செய்பவனுக்கு **ஆத்மஸாக்ஷாத்காரமான ஜ்ஞானயோகம்** நிஶ்சயம் ஏற்படும்.

ஜீவாத்மா எம்பெருமானுக்கு ஶரீரமாக இருக்கிறான் (பகவச்சரீதபூதன்) என்றறிதல் யாதாத்ம்ய ஜ்ஞானம். இதை மனதில் கொண்டே பகவதாராதனமாக கர்மாவை யநுஷ்டிக்கும்போது இந்த நினைவு முதிர்ச்சியடையும். மோக்ஷ தஶையில் ஜீவாத்மாநுபவத்துக்கு கர்மா, ஜ்ஞானம் இரண்டுமே ப்ரயோஜனங்களாக வுள்ளன.

**தத்$_3$வித்$_3$தி$_4$ ப்ரணிபாதேந பரிப்ரஶ்நேந ஸேவயா|**
**உபதே$_3$க்ஷ்யந்தி தே ஜ்ஞாநம் ஜ்ஞாநிநஸ் தத்வ த$_3$ர்ஶிந:|| (4-34)**

(நன்கு வணங்குவதாலும், அருகில் நின்று கேட்பதாலும், கைங்கர்யத்தினாலும் அந்த ஆத்மஜ்ஞானத்தை ஞானிகளிடமிருந்து அறிவாயாக. ஆத்மஸ்வரூபத்தை ஸாக்ஷாத்கரித்த ஞானிகள் உனக்கு ஆத்மாவைப் பற்றிய அறிவை உகந்து உபதேஶிப்பர்கள்.)

ஆத்ம ஜ்ஞானத்தை அவ்வப்போது தெளிவு பெறுவதற்காக மீண்டும் மீண்டும் பல ஞானிகளிடம் கேட்கவேண்டுமென விதிக்கிறான். ஆத்மஜ்ஞானத்தோடு கலந்த கர்மயோகத்தை பயிலும் நீ அவ்வப்போது ஜ்ஞானத்தில் தெளிவு பெறுவதற்காக ஞானிகளையண்டி கேட்டு அறிவாய். ப்ரணிபாதேந – மனம், புத்தி, (நான் எனது எனும்) அபிமானம் ஆகிய மூன்றையும் அடக்கி, இரு கைகள், இரு பாதங்கள், ஶிரஸ் ஆகிய ஐந்து அங்கங்களும் தரையில்படும்படியாக (ஸ்வரூபத்துக்குச் சேர உகப்புடன்) ஸாஷ்டாங்கமாக வணங்கி ஸகலார்த்தங்களையும் வேண்டிய அளவு கேட்பாய். பரிப்ரஶ்நேந – உன் அறிவை வெளிப்படுத்தாது, ப்ரதிவாதியைப் போல மறுத்துப் பேசாமல், வினயத்துடன் கேட்பாய். ஸேவயா – அவர்கள் உகப்புடன் உனக்கு உபதேஶிக்கும்படி அவர்களுக்குத் தொண்டு பல செய்து கேட்டறிவாய்.

பகவான் ஆத்மதத்வ ஜ்ஞானத்தை அர்ஜுநனுக்குத் தெளிவாகத்தானே உபதேஶித்திருக்கிறான். மேதாவியான அர்ஜுநனும் தெளிவாகவன்றோ க்ரஹித்திருக்கிறான். பின்னை எதற்காக பிறர் காலிலே விழுந்து துவளவேணும் என்னில் – கர்மயோகத்தை அநுஷ்டிப்பதன் மூலம் பாபங்கள் சிறிதுசிறிதாக நீங்கும். பாபங்கள் நீங்கநீங்கத் தெளிந்த அறிவையேற்கும் பக்குவநிலை ஏற்படும். அப்போது பொதுவாக கேட்டறிந்த அர்த்தத்தை நிஶ்சயித்துக் கொள்ளவும், கேட்டறியாத அர்த்தத்தை அறிவதற்காகவும், கேட்டதில் மறந்ததை நினைவுபடுத்திக் கொள்ளவும் ஞானிகளை அண்டி நீ கேட்டறிய வேண்டியது அவஶ்யமாகிறது. இதனாலேயே ஶாஸ்த்ரமும் 'ஸகு$_3$ருமே வா$_4$பி க$_3$ச்சே$_2$த்' – ஞானத்தெளிவுபெற குருவை அடையவேண்டும் – என்று விதித்தது. தான் கீதையில் கேட்ட அர்த்தத்தை இவ்வர்ஜுநனே சிறிது காலத்தில் மறந்து கண்ணனிடம் அநுகீதை உபதேஶமும் பெற்றானிறே.

தத்வ தர்ஶிந: ஜ்ஞாநிந: – ஆத்மஸ்வரூபத்தை ஸாக்ஷத்கரித்த ஜ்ஞானிகள். ஜ்ஞாநிந: – ஜ்ஞானிகள் எனும் பன்மையாலே பலரிடம் பலகால் பலவிஷயங்களைக் கேட்கவேணும் என்று உணர்த்தப்படுகிறது. ஜ்ஞாநம் உபதே$_3$க்ஷ்யந்தி – 'தஸ்மை ஸ வித்$_3$வாந் உபஸந்நாய ஸம்யக்....ப்ரோவாச தாம் தத்வதோ ப்$_3$ரஹ்ம வித்$_3$யாம்' (முண்ட.) – நன்கு வந்தடைந்த சீடனுக்கு அறிவாளியான அவ்வாசார்யன் ப்$_3$ரஹ்மவித்யையை உபதேஶிக்க வேணும் –

என்கிற *ஶ*ாஸ்த்ர விதியின்படி, ஆத்மதத்வ ஜ்ஞானத்தை உகந்து உபதே*ஶி*ப்பர்கள். ஆக, அவ்வப் பக்குவ நிலைக்கேற்ப ஆத்மதத்வ ஜ்ஞானத்தைப் பல ஞானிகளிடம் பலகால் கேட்டுத் தெளிவு பெறவேணும் என்று விதித்தானாயிற்று.

* * * * *

## ஐந்தாம் அத்யாயம் – கர்ம ஸந்யாஸ யோகம்

கர்மயோகம் அநுஷ்டிக்க எளியது என்றும், ஜ்ஞானயோகத்தைக் காட்டிலும் ஆத்மஸாக்ஷாத்காரமாகிற பலனை விரைவில் அளிக்கக்கூடியது என்றும், கர்மயோகத்தை யநுஷ்டிப்பவன் 'நான் கர்த்தாவல்லன்' என்று அநுஸந்திக்க வேண்டிய ப்ரகாரத்தையும், ஶுத்த ஆத்மாக்கள் யாவும் ஸமம் என்று நினைக்க வேண்டிய கர்மயோகியின் நிலையைப் பற்றியும் இவ்வத்யாயத்தில் கூறப்படுகிறது. அத்யாயத்தின் தொடக்கத்தில் கர்மஸந்யாஸமாகிற ஜ்ஞானயோகத்தைப் பற்றி ப்ரஸ்தாவிக்கையாலும், 'நான் கர்த்தாவல்லன்' என்று கர்மயோகி நினைப்பது 'கர்ம ஸந்யாஸம்' என்று கூறலாமாகையாலும் இவ்வத்யாயம் கர்மஸந்யாஸ யோகம் எனப்படுகிறது.

கர்மயோகத்தை யநுஷ்டிப்பதால் மனஸ் தூய்மை அடையும். விருப்பு வெறுப்புகள் நீங்கும். இந்த்ரிங்களின் செயல்கள் மெதுவாக அடங்கும். மனஸ் ஆத்மாவை நோக்கி நிற்கும். இந்த்ரியங்கள் முற்றிலும் அடங்கி, மனது ஆத்மாவலோகனத்தில் ஊன்றியிருக்கும் நிலையையே ஸந்யாஸம் என்றும் ஜ்ஞானயோகம் என்றும் கூறலாம். ஜ்ஞானம் பூர்ணமாக விகாஸமடையும்போது, உறங்குவான் கைப்பண்டம் போலே, கர்மம் தன்னடையே நீங்கும்.

கீதாசார்யன் முதலில் கர்மயோகத்துக்கு உறுப்பான ப்ரகாரங்களைக் கூறுகிறான். எதையும் 'நான் செய்கிறேன்' எனும் எண்ணத்துடன் ஒரு செயலைச் செய்யாதே. குணகார்யமாய் செய்ய நேரிட்டது; அந்தர்யாமி தூண்டுதலால் செய்ய நேரிட்டது; கர்ம ஜ்ஞாநேந்த்ரியங்கள், ப்ராணன் முதலானவையே செய்தன, ப்ராக்ருத *ஶ*ரீரம் செய்தது என்று எண்ணுவாய். நீ செய்ததாக எண்ணாதே. புகவதாராதனத்தை நாம் ஸாத்விக த்யாகத்துடன் செய்கிறோம். 'ஸர்வஸ்வாமியான எம்பெருமானே *ஶே*ஷபூதனான வடியேனைக் கொண்டு தனக்கு ப்ரீதி விளைவிக்கும் காரியங்களை தானே செய்வித்துக் கொள்கிறான்' என்றநுஸந்திப்பது ஸாத்விக த்யாகம். இவ்வாறே மற்ற கர்மாக்களை யோஜிக்கக்கடவது.

ஆத்மாவில் ஈடுபட்டவன் கர்மாவின் ஐஹிக பலன்களில் இச்சையின்றி ஆத்மாநுபவ ரூபமான ஆனந்தத்தையடைகிறான். விஷய ஸுகத்தில் ஆசையுள்ளவன் ஸம்ஸாரத்தில் கட்டுப்படுகிறான். ஆத்மஸாக்ஷாத்காரத்திலேயே உறுதியுடன் நின்று அதையே

பரமப்ரயோஜனமாகக் கொண்டவன், பாபங்கள் கழியப்பெற்று புநராவ்ருத்தி (திரும்பிவருதல்) இல்லாத கைவல்ய மோக்ஷத்தை அடைகிறான்.

மேலே, ப்$_3$ரஹ்மஜ்ஞான ப்ரகாரம் பேசப்படுகிறது. பலவிதமான சரீரங்களிலுள்ள ஜீவர்கள் வெவ்வேறு ஜீவர்களாயினும், ஞானமே ஸ்வருபமானவர்களாகையாலே, அந்த ஜ்ஞான ஆகாரத்தால் ஸமமாயிருப்பது பற்றி அறிவாளிகள் ஒன்றாகப் பார்க்கின்றனர்.

**வித்யா விநய ஸம்பந்நே ப்$_3$ராஹ்மணே க$_3$வி ஹஸ்திநி|**
***ஶு*நி சைவ *ஶ்*வபாகே ச பண்டி$_3$தா: ஸமதர்*ஶி*ந:|| (5-18)**

(கல்வியும் அடக்கமுமுடைய அந்தணன், அவையற்ற அந்தணன், பசு, யானை, நாய், அதைக் கொன்று தின்னும் சண்டாளன் இவர்கள் அனைத்திலும் ஆத்மாவின் ஸ்வரூபம் ஒருபடிப்பட்டிருக்கையாலே அறிவாளிகள் அனைவரையும் ஸமமாகப் பார்க்கின்றனர்.)

வித்யா விநய ஸம்பந்நனான உத்தம ப்ராஹ்மணன், அவையொன்றுமில்லாத ஸாமாந்ய ப்ராஹ்மணன் இருவர்களிடமும் வித்யை, விநயம் இவை ஆத்மஸ்வரூபத்தில் எந்த மாறுபாட்டையும் விளைவிக்கமாட்டா. உருவத்தில் சிறிய பசு, உருவத்தில் பெரிய யானை எனும் சிறுமை பெருமைகளும் ஆத்மஸ்ரூபத்தில் எந்த மாறுபாட்டையும் விளைவிக்கமாட்டா. நாய், அதைக் கொன்று தின்னும் சண்டாளன் என்று தொழில் முதலானவற்றில் உள்ள வேறுபாடுகள் ஆத்மஸ்வரூபத்தில் எந்த வேறுபாட்டையும் விளைவிக்கமாட்டா. மூன்று இரட்டைகளும் முறையே ஸாத்விக ராஜஸ தாமஸங்களிடையே வேறுபாட்டைக் காட்டுகையாலே, '*ஶ்*வபாகே ச' என்றவிடத்திலுள்ள சகாரம் ஸாத்விகாதி குணங்களால் வேறுபட்டு நிற்கும் எல்லாச் சேதநர்களையும் குறிக்கும். ஆக, சேதநர்கள் எல்லோரையும் அறிவாளிகள் ஸமமாகப் பார்க்கிறார்கள். இதுவே ப்ரஹ்மஜ்ஞாந ப்ரகாரம்.

பண்டி$_3$தா: – 'பண்ட$_3$ா' எனும் *ஶ*ப்தம் ஜ்ஞானத்தைக் குறிக்கும். அதை உடையவர்கள் பண்டிதர்கள். இங்கு சொல்லப்படும் ஸாம்யம் ஆத்மஸ்ரூப விஷயத்திலேயே. சரீர ஸம்பந்தத்தாலுண்டாகும் ஆத்மாவின் தர்மபூதஜ்ஞாந வேற்றுமைகளைப் பற்றியோ, அந்த சரீரங்களினால் உண்டான வர்ணா*ஶ்*ரம, ஆசார பேதங்களைப் பற்றியோ அன்று. சிலர் இச்சுலோகத்தைக் காட்டி எல்லோரும் ஸமம்; ஜாதி மத பேதமில்லை என்று சொல்லுவது தவறு. கர்மாநுகுணமாக ஒவ்வோர் ஆத்மாவுக்கும் ஏற்படும் தேஹம், நான்கு ஜாதிகள், அச்சாதிகளையொட்டிய குணங்கள், தர்மபூதஜ்ஞானத்தின் மலர்ச்சி இவை அவரவர் வினைப்படி வேறுபடும். ஆத்மஸ்வரூபம் ஒன்றைப் பற்றியே இங்கு ஸாம்யம்.

மேலே, இப்படி ஸமதர்*ஶி*யான பண்டிதனின் பெருமை பேசப்படுகிறது. இந்த பண்டிதன் ஆத்மாவை உள்ளபடி உணர்ந்தவன்; கர்மாநுஷ்டானத்தினால் மனத்தூய்மை பெற்று இந்த்ரியங்களையடக்கி ஐஹிக பலன்களில் ஆசையற்று ஆத்மாவை அநுபவிக்கும்

ஆனந்தத்தில் நிலைநிற்பவன்; ஸுகம் துக்கம், ப்ரியம் அப்ரியம் இவைகளால் மனம் விகாரமடையாமலிருப்பவன். இப்படியிருக்க வல்லவனுக்குத்தான் ஸர்வத்ர ஸமதர்*ஶ*ந ரூபமான ஜ்ஞாந விபாகம் உண்டு என்கிறான். அத்தகைய ஓர் அதிகாரி *தேறுவனாகில்* அவனுடைய ஸர்வத்ர ஸமதர்*ஶி*த்வம் எப்படிப்பட்டதென்று நாம் நேராகக் கண்டு கொள்ளலாம்.

**யே ஹி ஸம்ஸ்பர்*ஶ*ஜா போ$_4$கா$_3$ து$_3$:க்க$_2$யோநய ஏவ தே|**
**ஆத்$_3$யந்த வந்த: கௌந்தேய ந தேஷு ரமேதே பு$_3$த$_4$|| (5-22)**

(குந்தீபுத்ரனே! விஷயங்களோடு இந்த்ரியங்கள் தொடர்பு கொள்வதால் ஏற்படும் இன்பங்கள் யாவை சில உண்டோ, அவை துன்பத்திற்கே காரணமாயிருப்பவை; முதலும் முடிவும் உள்ளவை. அவற்றின் இயல்பை அறிபவன் அவற்றில் ஈடுபடமாட்டான்)

அநாதி காலமாக *ஶ*$_3$ப்த$_3$ாதி விஷயங்களில் மண்டியிருப்பவன், அதைக் கைவிடுவது எப்படியென்னில் - அவ்வின்பங்களை ஸம்பாதிப்பதிலும், காப்பாற்றுவதிலும் ஏற்படும் வருத்தங்களை யநுஸந்தித்தால் அவற்றை எளிதில் கைவிட்டு விடலாம் என்கிறான். அல்பமான இந்த்ரியங்கள் அத்யல்பமான விஷயங்களோடு தொடர்பு கொள்வதால் ஏற்படும் இவ்வின்பங்கள் செயற்கையானவை; கேவலம் ஸ்பர்*ஶ* *ஶு*க$_2$மேயொழிய அநந்த ஸுகமில்லை. இப்படி அற்பமாயிருக்கும் ஸுகம் அநந்தமான பல துன்பங்களை விளைவிப்பதாயுமிருக்கிறது. க்ஷுத்ர விஷயாநுபவத்தால் இவ்வுலகில் துன்பங்களை விளைவிப்பதோடன்றி பரலோகத்திலும் பல துன்பங்களை விளைவிப்பனவாயுள்ளன. 'ஆனைக்குத் தக்க வாதம்' என்னுமாப்போலே தேவதைகளுக்கு நம்மிற்காட்டில் அறிவுகேடு விஞ்சியிருக்கும். ஸ்வர்க்கம் சென்றால் இந்த்ராதிகள் இவனை *தமக்கு* பரதந்த்ரன் என்றே நினைத்து வேலை வாங்குவர்கள். வைகுண்டவாஸிகளன்றோ 'ஆண்மின்கள் வானகம்' என்று ப்ரார்த்திப்பது! இப்படி அற்பமாய், துன்பம் கலந்ததாயிருக்கும் இவ்வல்ப ஸுகத்தை நீண்ட காலத்திற்காவது அனுபவிக்கலாமோவெனில், அதுவுமில்லை. இவை முதலும் முடிவும் உள்ளவையாகையாலே, அற்ப காலத்திற்கேயிருப்பவை. ப்ரமனின் போ$_4$க$_3$மும் அப்பிரமனின் வருடங்களாலே நூறு வருடங்களேயிருப்பது. இப்படி ப்ராக்ருத போகங்கள் யாவும் அற்ப ஸுகமாயும் துன்பங்கள் நிறைந்ததாயும் அநித்யமாயும், ஒருவர் உபதே*ஶி*க்க வேண்டாதபடி ப்ரத்யக்ஷமாகவும் காணப்படுவதால், இவற்றில் அறிவாளியாயிருப்பவன் ரமிக்கமாட்டான். இவற்றின் தோஷங்களைக் காணக்காண க்ரமமாக இவற்றினின்று உபரமத்தையும் (வைராக்யத்தையும்) அடைவான்.

ப்ராக்ருத போகங்களிலுள்ள ஐந்துவிதமான தோஷங்களை அறிவாளியான நீ விவேகித்து அறிய வேண்டாவோ? தோஷங்களாவன - (i) போக்யத்துக்கு ஸாதனமான த்ரவ்யத்தை ஸம்பாதிக்க உயிருக்கு ஆபத்து உண்டாகும்படி கடல் கடப்பது, ஆயுதமெடுத்து

போரிடுவது முதலான ஆர்ஜந தோஷங்கள் (ii) ஆயிரம் மதிளிட்டு காவலிட்டாலும் அரசர்கள், நெருப்பு, திருடர், எலிகள் முதலானவற்றால் அபாயங்கள் வருமாதலால் அவற்றைத் தடுக்க முயலும் ரக்ஷண தோஷங்கள் (iii) ஸ்வர்க்கத்தில் இருப்பவனுக்கும் 'என்று புண்ணியம் தீர்ந்து கீழே விழுவோமா' என்ற பயம் உண்டு. இப்படி அநுபவத்தின் க்ஷய ப$_4$யத்தினால் வரும் க்ஷய தோஷங்கள் (iv) மேன்மேலும் ஆசையை வளர்த்து அநர்த்தங்களை விளைத்து தகாத செயல்களில் ஈடுபடுத்தும் பே$_4$க$_3$ தோஷங்கள் (v) ப்ராக்ருதாநுபவம் பெரும்பாலும் பிறர்க்கு தீங்கை விளைத்தே பெறவேண்டியதாய் இருக்கையால் அப்பரஹிம்ஸையினால் ஏற்படும் ஹிம்ஸா தோஷங்கள். இந்த தோஷங்களை யநுஸந்திப்பவர்களுக்கு, அநாதிகாலமாகப் பழகிப் போந்ததானாலும் ப்ராக்ருத போகம் எளிதில் கைவிடத்தக்கதே என்பது இந்த *ஶ*லோகத்தின் ஸாரார்த்தம்.

இவ்வத்யாய தொடக்கத்தில் கர்மயோக ஜ்ஞாநயோகங்களில் எது சிறந்தது என்று கேட்கப்பட்ட வளவில், ஜ்ஞானயோகம் செய்தற்கரியது, கர்மயோகம் விரைவில் பயனளிக்கும் என்று சொல்லி, கர்மயோகமே சிறந்தது என்றான். பின்பு, நித்யநைமித்திக கர்மங்கள் ஆத்மஸாக்ஷாத்காரத்துக்கு உதவுபவை என்று சொல்லி, கர்மயோக வகைகளை விவரித்தான். இவ்வயத்யாயத்தின் முடிவிலும் கர்மயோகம் மற்றொரு முறையாலும் செய்தற்கெளியது என்பதைக் காட்டுகிறான்.

**பே$_4$ாக்தாரம் யஜ்ஞதபஸாம் ஸர்வலோக மஹே*ஶ*வரம்|**
**ஸுஹ்ருத$_3$ம் ஸர்வபூ$_4$தாநாம் ஜ்ஞாத்வா மாம் *ஶ*ாந்திம் ருச்ச$_2$தி|| (5-29)**

(யாக தவங்களை ஏற்றுக் கொள்பவனும், எல்லா உலகங்களுக்கும் பெரிய ஈ*ஶ*வரனும், எல்லா உயிர்களுக்கும் நண்பனுமான என்னை அறிந்து *ஶ*ாந்தியை யடைகிறான்.)

'யஜ்ஞங்கள், தவங்கள் முதலான கர்மயோக வகைகள் அனைத்தையும் எனக்கு ஆராதனமாக ஏற்றுக் கொள்பவன் நான்' என்பதை அறிந்து. இப்படி எல்லாக் கர்மங்களும் தனக்கு ஆராதனமாயிருப்பதற்கு காரணத்தைக் கூறுகிறான் - ஸர்வலோக மஹே*ஶ*வரம் - உலகில் ஈ*ஶ*வரர்களாயிருக்கும் பிரமன், ருத்ரன் முதலானார்க்கும் ஈ*ஶ*வரனாயிருப்பவனை. வெறுமனே 'மஹே*ஶ*வரன்' என்றால் ரூ$_4$டியினாலே ருத்ரனைச் சொல்வதாகச் சிலர் மயங்கக் கூடுமென்று ஸர்வலோகங்களுக்கும் மஹே*ஶ*வரன் என்று வி*ஶே*ஷிக்கிறான். 'தமீ*ஶ*வராணாம் பரமம் மஹே*ஶ*வரம்' (*ஶ*வே.) 'ஈ*ஶ*வரர்களுக்கெல்லாம் மேலான மஹே*ஶ*வரன் - என்றிறே உபநிஷத்தும் ஓதிற்று. இப்படி ஈ*ஶ*வரர்களை உள்நுழைத்து நியமிக்கும் ஈ*ஶ*வரனாகையாலே, அவர்களை ஆராதிப்பவையாகத் தோன்றும் எல்லாக் கர்மங்களும் உண்மையில் தன்னையே ஆராதிக்கின்றன என்று உணர்த்துகிறான்.

ஸர்வ பூதாநாம் ஸுஹ்ருதம் – எல்லா உயிர்களுக்கும் நண்பனாக என்னை அறிந்து. மாதா பிதா ப்$_4$ராதா.... ஸுஹ்ருத்... நாராயண: (ஸுபால.உப.) என்கிறபடியே ஸகலரும் இயற்கையுறவினனான என்னை கர்மங்களால் ஆராதிப்பதே தக்கது என்கிறான். மாம்– பரமோதா$_3$ரனாக என்னை அறிந்து. பிறர் அல்பாஸ்த்$_2$ரங்களான பலன்களையே அளிப்பர்கள். அநந்த ஸ்திர பலனையளிப்பவன் நானேயாகையால் எல்லாக் கர்மங்களாலும் ஆராதிக்கத்தக்கவன் நானே.

இப்படி பரமோதா$_3$ரனாகவும், ஸர்வதேவதாந்தர்யாமியாகவும், ஸர்வ ஸுஹ்ருத்தாகவும் என்னையறிந்து அதனாலேயே யாகம், தவம் முதலான எல்லாக் கர்மயோகங்களும் எனக்கே ஆராதனமாயிருக்கின்றன என்பதையறிந்து கர்மயோகத்தை யநுஷ்டிப்பவன், உடலை வருத்தும் செயல்களான அக்கர்மங்களைச் செய்தபோதும் அதனால் வருத்தத்தையடையாமல் ஸுகத்தையேயடைகிறான். ஆக, கர்மஸந்யாஸ யோகமாகிற இவ்வத்யாயத்தில் கர்மயோகத்திலடங்கிய ஞானத்தின் பெருமை விளக்கப்பட்டதாயிற்று.

* * * * *

## ஆறாம் அத்யாயம் – யோகாப்யாஸ யோகம்

இவ்வத்யாயத்தில் ஆத்மஸாக்ஷாத்காரமாகிற யோகத்தை பழகும்முறை, அந்த யோகிகளில் நாலுவகை, அவர்களுக்கு ஸாத$_4$னமாயிருக்கும் அப்யாஸம் (சிந்தனம்), வைராக்யம் முதலானவை, தொடங்கிய யோகம் இடையில் தடைபட்டாலும் காலக்ரமத்தில் ஸித்தியடையும், ஸர்வேஶ்வரனை விஷயமாகக் கொண்ட பக்தியோகம் முற்கூறிய ஆத்மஸாக்ஷாத்காரத்திலும் சிறப்புடையது எனுமர்த்தங்கள் கூறப்படுகின்றன. இவற்றில் யோகப்யாஸ விதி என்கிற முதல் விஷயமே ப்ரதா$_3$நமாகையால் இவ்வத்யாயம் யோக அப்யாஸ யோகம் என்றழைக்கப்படுகிறது. மற்ற விஷயங்கள் ப்ரஸங்காத் சொல்லப்படுபவை என்பது ஸ்ரீபாஷ்யகாரர் திருவுள்ளம். நம்மை நாம் எவ்வளவு உத்க்ருஷ்டராக மதித்துக்கொண்டாலும் உண்மையில் நம் போல்வார் நேரே ஜீவஸாக்ஷாத்காரத்துக்கான யோகத்தை அப்யஸிக்க வல்லவரல்லர் என்பதே பகவதபிப்ராயம். ஆகையிறே பக்தியோகம் சிறப்புடைத்து எனும் கடைசி அர்த்தம், மேலே மத்யம ஷட்கத்தில் சொல்லப்போகும் பக்தியோகத்திற்கு, தோற்றுவாயாக அமைகிறது.

ஐஹிக பலன்களில் பற்றின்றி கர்மயோகத்தை ஸ்வயம் ப்ரயோஜநமாக அநுஷ்டிப்பவன் ஸந்யாஸியே, ஜ்ஞானயோக நிஷ்டனே. இவன் கேவலம் கர்மயோகியுமல்ல, வெறும் ஞானயோகியுமல்ல என்று முன் அத்யாயத்தில் சொன்னதை திடப்படுத்துகிறான். தேஹாத்மாபிமானத்தை விடாதவன் கர்மயோகியாகமாட்டான். கர்மயோக நிஷ்டன்

இந்த்ரியங்களால் அநுபவிக்கப்படும் விஷயங்களில் பற்றற்ற நிலையையடைந்து ஆத்மஸாக்ஷாத்காரம் பெறுகிறான். அவனுக்கு மனமே பற்றற்ற நிலையில் நண்பன்; அம்மனமே பற்றுடன் இருப்பின் கொடிய விரோதி.

**உத்$_3$த$_4$ரேத்$_3$ ஆத்மநா ஆத்மாநம் ந ஆத்மாநம் அவஸாத$_3$யேத்|**
**ஆத்மைவ ஹி ஆத்மநோ ப$_3$ந்து$_4$ர் ஆத்மைவ ரிபுராத்மந:|| (6-5)**

(விஷயத்தில் பற்றற்ற மனத்தினால் தன்னை உயர்த்தக்கடவன்; விஷயங்களில் பற்றுள்ள மனத்தால் தன்னைக் கீழே தாழ்த்தக் கடவனல்லன். விஷயப் பற்றற்ற மனமே தனக்கு பந்து; விஷயப் பற்றுள்ள மனமே தனக்கு எதிரி.)

தன்னைக் கொண்டே தான் கடைத்தேற வேணும்; தன்னைத்தானே கெடுத்துக் கொள்ளலாகாது. தனக்குத் தானே உறவு, தனக்குத் தானே பகைவன். ஒருவன் கடைத்தேறுவதற்குப் பலபல ஸாதனங்கள் வேண்டியிருக்கின்றன. ஸத்ஸஹவாஸம் வேணும், ஆசார்ய ஸேவை வேணும், பிராட்டியை முன்னிட்டு எம்பெருமான் திருவடிகளைப் பற்ற வேணும் என்றிப்படியாக உஜ்ஜீவனத்திற்கு வேண்டியவை பல இருந்தாலும், இவற்றுள் மிக முக்கியமான ஸாதனம் மனம் ஒன்றேயாம். அதை விஷயாந்தரங்களில் யதேஷ்டமாக மேயவிட்டால் அது தன்னைத்தானே மாய்த்துக் கொண்டபடியாகும். மனதை விஷயக்ராமங்களில் புகவிடாமல் ஆத்மோஜ்ஜீவனத்திற்கு அபிமுகமாக்குமளவில் அந்த மனத்தைக் கொண்டு தான் வாழ்ந்தவனாவன். ஆகவே, மனமானது உறவாயுமிருக்கும்; பகையாயுமிருக்கும். உறவாகக் கொண்டு வாழ்வதே விவேகிகளின் பணி; பகையாய்க்கொண்டு பாழாய்ப்போகவேண்டாம் என்று கீதாசார்யன் உபதே*ஶி*த்தருள்கிறான்.

ஆனது பற்றியே ஆழ்வார்கள் அடிக்கடி நெஞ்சைக் கொண்டாடுகிறார்கள். 'நெஞ்சமே! நல்லை நல்லை உன்னைப் பெற்றால் என் செய்யோம், இனியென்ன குறைவினம்?' 'ஊனில் வாழுயிரே! நல்லை போ உன்னைப் பெற்று' 'முயற்றி சுமந்தெழுந்து முந்துற்ற நெஞ்சே! இயற்று வா எம்மோடு நீ கூடி' இத்யாதி.

இச்சுலோகத்தில், **ஆத்மாஸாக்ஷத்காரமாகிற கைவல்ய மோக்ஷமே** பேசப்படுகிறது. ஆத்மஸாக்ஷாத்காரத்தை அடைய விரும்புகிறவனுக்கு விஷயாநுபவங்களில் பற்றின்மை அவ*ஶ்*யம். இதற்கு, விஷயங்களில் பற்றின்மையை பழகித்தரும் கர்யோகத்தையே **ஆருருக்ஷு** (ஆத்ம ஸாக்ஷாத்காரத்தைப் பெற விரும்புமவன்) அநுஷ்டிக்கவேணும். விஷயங்களில் பற்றற்ற மனத்தாலே தன்னை **யோக$_3$ாரூட$_4$ன்** (ஆத்ம ஸாக்ஷாத்காரமடைந்தவன்) ஆக்கி, ஸம்ஸாரக் கடலிலிருந்து உயர எடுக்கக்கடவன். விஷயங்களில் பற்றற்ற மனமே ஆத்மஸாக்ஷாத்கார மோக்ஷத்தையளித்து இவனுக்கு நன்மை செய்யும் உறவினனாயிருப்பது. மற்ற உறவினர்கள், இம்மோக்ஷத்திற்கு

தடையாயிருப்பதன் மூலம், இவனுக்கு விரோதிகளே. தாயே-நோயே, தந்தையே-நோயே, தாரமே-நோயே, கிளையே-நோயே, மக்களே-நோயே.

விஷயங்களில் பற்றுள்ள நெஞ்சாலே ஒருவன் தன்னை அந்த ஸம்ஸாரக் கடலிலே நழுவவிடக் கடவனல்லன். விஷயங்களில் பற்றுள்ள மனமே இவனை ஸம்ஸாரக் கடலில் தள்ளுவதன் மூலம் இவனுக்கு எதிரியாயிருப்பது. மற்ற எதிரிகள் இவனுக்கு ஸம்ஸாரத்தில் வெறுப்பையுண்டாக்கி ஆத்மாவையடையும் முயற்சியில் ஈடுபடுத்துகிறவர்களாகையாலே அவர்கள் உண்மையில் நன்மை செய்பவர்களே என்றும் கூறலாம்.

இப்படியாக, மனமே ஆத்மாவுக்கு உறவினனாகவும் பகைவனாகவும் ஆகிறது. இச்சுலோகத்தில் ஆத்ம *ஶ*ப்தங்களை ஜீவபரமாகவே பொருள்கொள்வது பொருந்தாது. கரையேற்றும் கருவியாக ஓராத்மாவும், கரையேற்றப்படுவதாக ஓராத்மாவும் கூறப்படுகையால், கரையேற்றும் கருவியான ஆத்மா நெஞ்சு, கரையேற்றப்படும் ஆத்மா ஜீவன் என்று கொள்ளவேணும்.

**ப$_3$ந்து$_4$ராத்மா ஆத்மநஸ்தஸ்ய யேந ஆத்மைவ ஆத்மநா ஜித:|**
**அநாத்மநஸ்து *ஶ*த்ருத்வே வர்த்தே தாத்மைவ *ஶ*த்ருவத்|| (6-6)**

(எந்த மனிதனால் தன் மனம் விஷயங்களில் செல்லாமல் வெல்லப்படுகிறதோ அவனுக்கு அம்மனம் நல்ல உறவாகும். மனதை வெல்லாதவனுக்கு அம்மனம், எதிரியைப்போல, நன்மைக்குத் தடையாகும்.)

மனமே தன் ஆகார பே$_4$த$_3$த்தாலே ஆத்மாவுக்கு உறவினனாகவும் பகைவனாகவும் ஆகிறது. மனிதன் தன் மனதை வெல்ல வேண்டும். மனதை வெல்வதாவது அதை விஷயங்களில் பட்டிமேயாதபடி அடக்குவது. இப்படி வெல்லப்பட்ட மனமே அவன் ஆத்மாவுக்கு உறவினனாகும். இம்மனத்தைக் கொண்டே இவன் ஆத்மஸாக்ஷாத்காரம் பெறமுடியும்.

வெல்லப்படாத மனமானது இவனுடைய ஆத்மாவுக்கு எதிரியாகும். இவன் தன் ஆத்மாவை காணமுடியாதபடி செய்யும். இவ்விஷயத்தையிறே பரா*ஶ*ர பகவானும் 'மநஏவ மநுஷ்யாணாம் காரணம் ப$_3$ந்த$_4$ மோக்ஷயோ:| ப$_3$ந்த$_4$ாய விஷயாஸங்கி முக்த்யை நிர்விஷயம் மந:|| (மனமே மனிதர்களின் ஸம்ஸார பந்தத்திற்கும், மோக்ஷத்திற்கும் காரணமாகிறது; விஷயத்தில் ஈடுபடும் மனம் பந்தத்திற்கும், விஷயத்தில் பற்றற்ற மனம் மோக்ஷத்திற்கும் காரணமாகிறது) என்றருளிச் செய்தது.

இச்சுலோகத்திலும் ஆத்ம *ஶ*ப்தங்களை ஜீவபரமாகவே கொள்ளமுடியாது. ஓராத்மாவை வெற்றி கொள்வதாகவும், மற்றோராத்மாவை வெல்லப்படுவதாகவும் கூறுகையால், வெல்லப்படும் ஆத்மா மனம், வெற்றிகொள்ளும் ஆத்மா ஜீவன் என்று கொள்ளவே ப்ராப்தம்.

மனதை பரிசுத்த ஜீவனில் ஒன்றவைத்து ஜீவஸாக்ஷாத்காரம் பெறவிரும்புமவன் குளிர் வெப்பம், ஸுகம் து:க்கம், மானம் அவமானம் எல்லாவற்றிலும் மனவிகாரமடையாமல் பொறுமையுடன் இருத்தல் வேண்டும். நண்பன், எதிரி, மண், பொன் இவற்றை ஸமநோக்குடன் பார்ப்பவன் யோகத்திற்கு தக்க அதிகாரி. தம்புத்ரரை கர்மநிஷ்டரில் தேர்ந்த அதிகாரியாகச் சொல்லாம். அஜாதசத்ரு – எதிரியே இல்லாதவர் என்று பேர் பெற்றவர். பொய்ச்சூதிலே ராஜ்யத்தை இழந்து வனம் செல்லும்போது கௌரவர்களைக் கண்ணால் பார்த்தால் அவர்களுக்கு ஏதாவது தீங்கு வருமோ, அவர்களும் வாழவேண்டும் என்று கண்களை மூடிக்கொண்டு சென்றாராம்.

யோகிக்கு அப்யாஸ தசையில் பல கட்டுப்பாடுகள் விதிக்கப்படுகின்றன. அவனுக்கு தனிமை அவச்யம். ஏகாகியாய் பற்றற்றவனாய் ஆத்மதர்சநம் பண்ணவேணும். சுத்தமான இடத்தில் அப்யஸிக்க வேணும். பாபிகள் ஸம்பந்தம் கூடாது. பாஷண்டி – வேதத்தில் சொன்ன ஆசாரத்தை விட்டவன், பதிதன் – குடிகாரன், பிறர் மனைவியை புணர்பவன், பொன்திருடுபவன் இவர்கள் முக்கியமாகப் பாபிகளாகப் பார்க்கப்படுகிறார்கள். யோகி அமரும் ஆஸனம் – முதலில் துணி விரிப்பு, அதன்மேல் மான்தோல், அதன்மேல் தர்ப்பம் என்று அமைய வேண்டும். உடல் நேராகவும் அசையாமலும் இருக்கவேணும், கண்பார்வையை மூக்கின் நுணியில் செலுத்தவேணும். மனதையடக்கி ஆத்மாவில் நிலைநிறுத்த வேணும். மிதமான ஆகாரம், மிதமான தூக்கம், ப்ரஹ்மசர்யம் இவை மிக அவச்யம். ஸாக்ஷாத்கார தசையில் ஆத்மாநுபவ ஸுகம் பேரின்பமாக இருக்கும். நல்ல தூக்கத்தில் ஸம்ஸாரி ஜீவனும் ஆத்மாநுபவம் பண்ணுகிறான்; ஆனால் அது தெளிவான ஆத்மாநுபவமன்று. யோக தசையில் இவ்வநுபவம் விலக்ஷணமாய் இன்பமயமாயிருக்கும். அத்தசையில் அவன் பகவத்ப்ராப்தியையும் விரும்பான். பகவத்ப்ராப்தி காமன் குணவிசிஷ்டமாக உபாஸிப்பன். ஆத்மப்ராப்தி காமன் சுத்திவிசிஷ்டனாக உபாஸிப்பன், ஜராமரண மோக்ஷமே அவனுக்கு புருஷார்த்தமாகையாலே.

(உண்மையில் இக்கைவல்யாநுபவம் 'அளவிலின்பம்' என்கிறபடி திகட்டாத இன்பமாயினும், பகவதநுபவத்தை இல்லை செய்யும் பெரும் அநர்த்தத்தை தருவதாகையால் 'பெருந்துன்பம்' என்றும், பகவதநுபவமாகிய பேரின்பத்திற்கு முன் இந்த மோக்ஷம் 'சிற்றின்பம்' என்றும் சொல்லத்தக்கது. ஆகையிறே ஆழ்வார், 'அற்றது பற்றெனில் உற்றது வீடுயிர்' – ப்ராக்ருத விஷயங்களில் பற்றறுந்துவிட்டால் ஸுத்தாத்ம அனுபவமாகிய கைவல்ய மோக்ஷம் கிடைத்துவிடும். 'செற்றது மன்னுறில் அற்றிவை பற்றே' – அந்த அபாயத்தில் அகப்படாது தப்புவதற்கு, விஷயங்களில் பற்றறும்போதே எம்பெருமானைப் பற்றிவிடுங்கள் என்று உபதேசித்தார். பொய்கையாழ்வாரும் இவர்களை 'விடை கொள்வார்' என்றருளிச்செய்தார்.)

யோகிக்கு நாலு வகைப்பட்ட ஸாம்யத்தை பார்க்கும் நிலைகள்: யோகிக்கு 'ஸர்வத்ர ஸமதர்ஶன:' (6-29) - தன்னையறிந்து கொள்வதால் மற்ற ஆத்மாக்களும் ஜ்ஞான ஸ்வரூபத்தில் ஸாம்யம் (தன்னையொத்தவை) என்றறிதல் முதல்படி. இரண்டாம்படி - 'யோ மாம் பஶ்யதி ஸர்வத்ர, ஸர்வத்ர மயி பஶ்யதி' (6-30) - முக்தி நிலையில் தன்னையும் ஈஶ்வரனையும் மற்ற ஜீவர்களையும் ஸமமாகக் காண்பது. மூன்றாம் படி - முக்தி நிலையில் இவன் அறிவு பரமாத்மாவின் அறிவைப் போல் எங்குமுள்ளதாய் (விபுவாய்) இருக்கும்; இப்படி பரமாத்மாவோடு ஒற்றுமையையறிவது மூன்றாம் நிலை (6-31). நான்காம் நிலை - ஸுகது:க்கமற்ற நிலை (6-32).

**சஞ்சலம் ஹி மந:** (6-34). காற்றைப் பிடித்து கரகத்தினுள்ளே அடைக்க முடியுமோ? மனதை நிலை நிறுத்தமுடியுமோ? மனஸ்ஸானது அநாதிகால பாபவாஸநையாகிற சூறாவளியாலே அலைபட்டு, தன் ஸ்தானமான ஹ்ருதயகுஹையில் க்ஷணகாலமும் தங்கப்பெறாதே கண்ட விஷயங்களிலே மண்டித் திரியுமொரு தத்வம். மனம் இயற்கையாகவே சஞ்சலமானது. ஒரு நொடிப்பொழுதும் கூட ஒரு விஷயத்தில் ஏகாக்ரமாக ஒருவனாலும் நிலைநிறுத்த முடியாது. தான் எப்போதும் பழகும் விஷயாந்தரங்களிலுங் கூட ஒன்றினில் ஒன்றி நிற்கமாட்டாத நெஞ்சை, தான் பழகியறியாத ஆத்மாவில் ஒன்ற வைப்பதென்பது எவனாலும் ஆகுமோ? 'நின்றவா நில்லா நெஞ்சு' 'உள்ளமோ ஒன்றி நில்லாது' என்றார் கலியன். 'வஞ்சிக்கும் கள்ள மனம்' என்றார் ஆழ்வார். எல்லோரையும் விஷயங்களில் இழுத்துவிடும் பஞ்சேந்த்ரியங்களை அடியாட்களாக் கொண்ட மனம் எனும் வன்குறும்பனை போரிட்டு வெல்வதென்பது கடினம். இந்த்ரியங்கள் நலிகிற காலத்திலே ஒன்று ப்ரதானமாய் நலிதல், மற்றொன்று அப்ரதானமாய் நலிதல் இன்றிக்கே எல்லாம் ஒரே ஸமயத்தில் நலியுமிறே. 'விண்ணுலாற் பெருமாற்கடிமை செய்வாரையுஞ் செறும் ஐம்புலன்' - ஸுமுகன் என்கிற ஸர்ப்ப விஶேஷம் தன்னை பக்ஷிக்க வந்த திருவடியை எதிரிடவும் செய்யாதே, வேறோரிடத்திற்கும் போகாதே, பகவானைச் சரணடைந்தான். பெரிய திருவடி ஓடிச்சென்று 'எனக்கு ஆமிஷமாயிருக்கிற இத்தைக்கொண்டு நோக்குவதே; தேவரீரையும் நாய்ச்சிமாரையும் நெடுங்காலம் வஹித்துத் திரிந்ததற்கு நான் என் பெற்றேன்' என்றான். (திருவடி செருக்கிப் பேசினாலும் ஆஶ்ரிதனிறே. தானே அநாஶ்ரிதனான ஸுமுகனை ரக்ஷித்தால் திருவடி துணுக்கென்னும் என்று திருவடி மனம் நோகாமைக்காக ஸுமுகனை திருவடி கையிலேயே காட்டிக்கொடுக்க, 'தானே ரக்ஷிக்க முடியுமாயினும் நம் கையில் காட்டித்தருவதே' என்று ஸுமுகனை அடைக்கலமாக (ரக்ஷ்ய வஸ்துவாக)க் கொண்டக்ஷணம் திருவடியின் பசியும் தீர்ந்தது. தானே ரக்ஷியாமையாலே 'ந க்ஷமாமி'க்குச் சேரும்; திருவடி மூலமாயினும் ரக்ஷிக்கையாலே 'ந த்யஜேய'த்துக்குச் சேரும்.)

மத்பக்தம் ஶ்வபசம் வாபி நிந்தாம் குர்வந்தி யே நரா:|
பத்மகோடி ஶதேநாபி ந க்ஷமாமி வஸுந்தரே||
(வராஹ புராணம்)
(பூதேவி! சண்டாளனாய் இருந்தபோதிலும், என்னுடைய பக்தனை யார் நிந்தனை செய்கிறார்களோ, அவர்களை கோடிக் கணக்கான வருஷங்களானாலும் மன்னிக்கமாட்டேன்)

மனதிற்கு சஞ்சலத்வம் இயற்கைக் குணமாதலால், அதனை ஒன்றினில் ஒன்றவைப்பதென்பது இயலாத காரியம்தான். இதில் ஸந்தேஹமில்லை. ஆனாலும், விஷய தோஷங்களைக் காணக்காண வைராக்யம் உண்டாகக்கூடுமாதலால் மனத்தையடக்கப் பழக்கம் செய்து நாளடைவில் ஸாதிக்கவேணும் என்கிறான் கீதாசார்யன், க்ஷுத்ர விஷயங்களில் தோஷ தர்ஶநம் பண்ணப்பண்ண அவற்றில் விரக்தராகலாம் என்றபடி.

மேலே, அர்ஜுநன் ஒரு கேள்வி கேட்கிறான். க்ருஷ்ணா! கர்மயோகத்தால் ஜீவஸாக்ஷாத்காரம் கைகூடும் என்றாய். இப்படி ஸாக்ஷாத்கரிப்பதற்கு முன் இந்த யோகத்திலிருப்பவன் மரணமடைந்து விட்டால் என்னவாகும்? இவ்வுலக வாழ்க்கை போகமுமில்லாமல் அவ்வுலக மோக்ஷமுமில்லாமல் நாஶமடைவனோ? இதற்கு கண்ணன் பதில்: **'கல்யாணக்ருத் கஶ்சித் து$_3$ர்க்க$_3$திம் தாத க$_3$ச்ச$_2$தி'** (6-40) - நல்ல காரியமான ஆத்மஸாக்ஷாத்காரத்தைச் செய்யும் ஒருவன் து$_3$ர்க்க$_3$தியை யடையமாட்டான். இப்படி நழுவியவன் நல்லுலகங்களுக்குச் சென்று ஸுகப்பட்டு, பிறகு நற்குடியில் பிறந்து ஆத்மப்ராப்தியை யடைகிறான். (6. 41-45)

மேலே, இதுவரை பேசப்பட்ட யோகியின் உயர்வு பேசப்படுகிறது. தபஸ்வி (ஐம்புலனடக்கி தபஸ் மட்டும் செய்பவர்), கர்மி (பலனை யுத்தேஶித்து கர்மாக்களைச் செய்பவர்), ஞானி (ஆத்ம ஞானம் தவிர மற்ற அறிவு படைத்தவர்) இவர்கள் எல்லோரையும் விட ஜீவாத்மயோகியே சிறந்தவன்.

இவ்வத்யாயத்தின் இறுதி ஶ்லோகத்தில் கண்ணன் மேல் ஆறு அத்யாயங்களில் பேசப்போகும் பக்தியோகத்தை அறிமுகப்படுத்துகிறான். **'ஶ்ரத்$_3$த$_4$ாவாந் ப$_4$ஜதே யோ மாம் ஸ மே யுக்ததமோ மத:'** (6-47) - முற்கூறிய யோகிகளைக் காட்டிலும், நெஞ்சினால் என்னை யடைவதில் ஶ்ரத்தையுடையவனாய் எவன் என்னை பஜிக்கிறானோ அந்த பக்திநிஷ்டன் மிகவும் உயர்ந்தவன் என்பது என் எண்ணம் என்கிறான்.

**ப்ரதம ஷட்கம் நிறைவடைந்தது.**

* * * * *

## ஏழாம் அத்யாயம் – விஜ்ஞான யோகம்

பகவான் முதல் ஷட்கத்தில், பக்திக்கு அங்கங்களான கர்ம ஜ்ஞான யோகங்களையும், அதற்கு வேண்டிய ஶரீர-ஆத்ம விவேகத்தையும் விரிவாக உபதேஶித்தான். இந்த இரண்டாம் ஷட்கத்தில் அங்கியான பகவத்பக்தியை உபதேஶிக்கிறான். ஶாஸ்த்ரங்களில் ஒருவன் மோக்ஷம் பெற ஓர் அடைவு சொல்லப்பட்டிருக்கிறது. அத்வேஷம், ஆபிமுக்யம், ஆசார்ய உபதேஶம், கர்மாநுஷ்டானம், சித்தஸுத்தி, சரீர-ஆத்ம விவேகம், கர்மயோகம்,

ஜ்ஞானயோகம், ஆத்மத3ர்ஶநம், பகவத்பக்தி. இந்த பக்தி, பரபக்தி பரஜ்ஞான பரமபக்தியாகப் பக்குவமடைந்து பிறகு மோக்ஷம். ஆத்மத3ர்ஶநம் பெறும் வரையில் விரிவாக முதல் ஷட்கத்தில் உபதேஶித்தான். இந்த இரண்டாம் ஷட்கத்தில் பக்தியை உபதேஶிக்கிறான்.

பக்தியாவது யாது? 'மஹநீய விஷயே ப்ரீதி: பக்தி:' – உயர்ந்தவன் விஷயத்தில் தாழ்ந்தவன் செய்யும் அன்பே பக்தி. தாழ்ந்தவனான ஜீவனின் ஸ்வரூபம் பற்றியும், பக்தி பெற அவன் செய்யவேண்டியவைகளையும் முதல் ஷட்கத்தில் கூறினான். உயர்ந்தவனான தன் ஸ்வரூப, ரூப, விபவ குணங்களைப் பற்றியும், பக்தி செய்யும் விதத்தையும் இந்த இரண்டாம் ஷட்கத்தில் சொல்கிறான்.

மோக்ஷோபாயம் வெறும் ஜ்ஞானமல்ல, உபாஸநமே. அதுவும் வெறும் உபாஸநமல்ல, பக்திரூபமான உபாஸநமே. அவ்வுபாஸநமும் பரமபுருஷ விஷயமேயொழிய தேவதாந்தரங்கள் விஷயமானதல்ல. **நாயமாத்மா ப்ரவசநேந ல$_4$ப்ய: ந மேத$_4$யா நப$_3$ஹுநா ஶ்ருதேந| யமேவைஷ வ்ருணுதே தேந லப்$_4$ய: தஸ்யைஷ ஆத்மா விவ்ருணுதே தநூம் ஸ்வாம்||** (கட) (இப்பரமாத்மாவானவன், (அன்பின்றி) நீ அவனை மனதால் நினைத்துக் கொண்டிருப்பதாலோ, வாயால் துதித்துக் கொண்டிருப்பதாலோ, அவனைப் பற்றிய விஷயங்களைக் காதால் கேட்டுக் கொண்டிருப்பதாலோ அடையத் தக்கவனன்று. எவனை இப்பரமாத்மா வரிக்கிறானோ அவனாலேயே அடையத் தக்கவன். அந்த ஜீவனுக்கே இப்பரமாத்மா தன் திருமேனியைப் ப்ரகாசிப்பிக்கிறான்) எனும் வேதவாக்யம் – ஸ்நேஹபூர்வ த்$_4$யானமான ப$_4$க்தியாயிருந்தால் மட்டுமே பரமாத்மாவை அடைய முடியும் என்று காட்டுகிறது. இம்மந்த்ரத்தில் பரமாத்வே ஜீவனை வரிக்கிறான் என்று சொல்லியிருந்த போதிலும், அதில் பரமாத்மாவினால் வரிக்கத் தகுந்த ஒரு கு$_3$ணவிஶேஷத்தை உடையவனாயிருப்பதினால்தான் இந்த ஜீவன் பரமாத்மாவினால் வரிக்கப்படுகிறான். வரிக்கத் தக்கவனாயிருப்பதற்கு உறுப்பான குணவிஶேஷம் பக்தியே. ஆக, பரமாத்மாவிடம் பேரன்பு வைப்பவனே அவனால் வரிக்கப்படுகிறான் என்பது ஸித்$_3$த$_4$ம். இனியவனாயிருப்பவனே வரிக்கத்தக்கவன். **'ப்ரியோ ஹி ஜ்ஞாநிநோऽத்யர்த்தம் அஹம் ஸ ச மம ப்ரிய:'** (7-17) (ஜ்ஞானிக்கு நான் மிகவும் ப்ரியமானவன்; அவனும் எனக்கு ப்ரியமானவன்) என்று கீதாசார்யனே கூறப்போகிறான். வேத$_3$நம், த்$_4$யாநம், உபாஸநம் என்றெல்லாம் சொல்லப்படும் மோக்ஷோபாயம் பக்தியே.

இனி, இவ்வுபாஸநம் பரமபுருஷ விஷயமேயொழிய தேவதாந்தரங்கள் விஷயமானதல்ல என்றறிய வேணும். ஸம்ஸார பீஜம் – இதரதேவதைகள் பக்கல் ப்ராவண்யமும் பகவத் பரத்வஜ்ஞானம் இல்லாமையும். ரக்ஷகன் ரக்ஷணத்தில் நெகிழ நின்றானென்று அரக்ஷகரைப் பற்றவொண்ணாதே! 'களைவாய் துன்பம் களையாதொழிவாய் களைகண் மற்றிலேன்'. வேறொருவன் கடைத்தலை நிற்கை அவனுக்கு தேஜோஹாநியிறே;

'நின் சாயை அழிவு கண்டாய்'. புருஷ ஸூக்தத்தில் லக்ஷ்மீபதியாகக் கூறப்படும். நாராயணனே ஶ்வேதாஶ்வதரத்தில் ஸத்வ ப்ரவர்த்தகன், உபாஸிக்கத்தக்கவன் என்று கூறப்படுகிறான். ஸர்வஶாகா ப்ரத்யய ந்யாயத்தாலே, அத₂ர்வஶிகை₂ முதலான சில உபநிஷத்துக்களில் படிக்கப்படும் ஶிவ ருத்ராதி ஶப்தங்கள் அந்தர்யாமியான நாராயணனையே குறிக்கும். ஆக பரம்பொருளான நாராயணன் விஷயமான ப₄க்திரூபமான ஜ்ஞானத்தாலேயே பரமாத்மப்ராப்தி ரூபமான மோக்ஷம் என்று நிர்ணயிக்கப்பட்டது.

**மநுஷ்யாணாம் ஸஹஸ்ரேஷு கஶ்சித் யததி ஸித்₃த₄யே|**
**யததாமபி ஸித்₃த₄ாநாம் கஶ்சிந் மாம் வேத்தி தத்த்வத:|| (7-3)**

(ஶாஸ்த்ர அதி₄காரிகளுக்குள்ளே ஆயிரத்தில் ஒருவனே என்னிடம் பக்தி செய்ய முயல்கிறான். இவர்களில் ஆயிரத்தில் ஒருவனே என்னை உள்ளபடி அறிகிறான்.) பரமாத்ம விஷய ஜ்நாநம் மிகவும் பெறற்கரியது என்று இதைப் புகழ்கிறான் கீதாசார்யன்.

இங்கு மநுஷ்ய ஶப்தம் ஶாஸ்த்ர விஹிதமான மோக்ஷ ஸாதநங்களில் அதி₄காரமுடைய அனைவரையும் குறிக்கும். இப்படி தமக்கு நன்மையை விரும்பி ஶாஸ்த்ரங்களில் சொல்லப்பட்டிருக்கும் ஸாதநங்களை அநுஷ்டிக்கத் தகுதி பெற்றவர்கள் ஆயிரக் கணக்கில் தேறுவர். இப்படிப்பட்ட ஶாஸ்த்ராதி₄காரிகளில் பெரும்பாலோர் ப்ராக்ருத ஸுகங்களையே தமக்கு நன்மையென்று மயங்கி, அவற்றின் பொருட்டே ஶாஸ்த்ரங்களில் விதிக்கப்பட்டிருக்கும் ஜ்யோதிஷ்டோமாதி ஸாதநங்களை யநுஷ்டித்துப் போருகிறார்களாகையால், இவர்களில் ஒருவனே மோக்ஷாநந்தத்தை விரும்பி மோக்ஷ ஸாதநத்தை யநுஷ்டிக்கிறான்.

கஶ்சித் ஸித்தயே யததி – அப்படி மோக்ஷ ஸாத₄னத்தை யநுஷ்டிப்பவர்களிலும் எவனோ வொருவனே மோக்ஷ ஸித்₃தி₄யடையும் வரையில் முயல்கிறான். (இடையில், விஷயாந்தரங்களால் இழுக்கப்பட்டு தடுமாறுபவர்கள் பலர்.) விரக்தனான விஶ்வாமித்ரனையும், கைங்கர்ய ருசியுடைய மஹாராஜரையும் விஷயம் நலிந்ததிறே.

யததாம் ஸித்₃த₄ாநாமபி – மோக்ஷ ஸித்தியடையும் வரையில் முயலுமவர்க்குள்ளும், (கஶ்சித் மாம் வேத்தி) எவனோவொருவன்தான் என்னையே ப்ராப்யனாகவும் அறிந்து என்னையடையும் பொருட்டு என்னை ஸித்தோபாயமாகக் கொண்டு ஶாஸ்த்ரங்களில் விதிக்கப்படும் பக்தியோக₃மாகிற ஸாத்₄யோபாயத்தை யநுஷ்டிக்கிறான். (பலர் தம் ஆத்மாவையே ப்ராப்யமாக எண்ணி அதன் பொருட்டு என்னை ஸித்தோபாயமாகக் கொண்டு ஶாஶ்த்ரங்களில் விதிக்கப்படும் கர்மஜ்ஞான யோகங்களை ஸாத்யோபாயமாக அநுஷ்டித்து கைவல்ய மோக்ஷத்தைப் பெற்றுப் போகின்றனர்.)

கஶ்சித் மாம் வேத்தி தத்த்வத: – இப்படி என்னையடைவதை விரும்புகிறவர்களிலும் எவனோவொருவன்தான் என்னை உள்ளபடியறிகிறான்; என்னையே உபாயமாக அறிகிறான்.

அதாவது, நானே தாயாய்த் தந்தையாய் மற்றுமாய் முற்றுமாய் நின்று ஒரு சேதநனையடையப் பாடுபடுபவனாகையாலே, தன்னுடைய ஆனந்தத்திற்காகத் தான் பாடுபடுவதிலிருந்து கைவாங்கி, மோக்ஷத்திலும் என்னுடைய ஆநந்தத்தையே விரும்புகின்றவனாய், சாதகம் போலே, எனது அருளையே பார்த்திருப்பன். இப்படிப்பட்டவன் மிகவும் கிடைத்தற்கரியவன். **'ஸ மஹாத்மா ஸுது$_3$ர்லப$_4$:'** (7-19) - வாஸுதேவனையே ப்ராப்யம், ப்ராபகம் எல்லாமாக நினைத்திருக்கும் மஹாத்மா மிகவும் கிடைத்தற்கரியவன். 'யாருமோர் நிலைமையெனன அறிவறிய எம்பெருமான், யாருமோர் நிலைமையெனன அறிவெளிய எம்பெருமான்' என்று ஆழ்வாரும் தம் முயற்சியாலே அவனைக் காண நினைப்பார்க்கு அவனை உள்ளபடி அறியமுடியாது என்றும், நிர்ஹேதுக க்ருபையாலே அவன் தன்னைக்காட்ட அவனைக் காண நினைப்பவர்களுக்கே அவனை உள்ளபடி அறியமுடியும் என்றும் அருளிச்செய்தாரிறே.

வ்யாஸர், பீ$_4$ஷ்மர் முதலான பலர் எம்பெருமானை உள்ளபடி அறிபவர்களாகக் காண்கையாலே, இங்கு 'ஒருவனேயறிகிறான்' என்றது இப்படித்தேறும் அதிகாரியின் அருமையைச் சொன்னபடி. மேல் பல *ஶ்*லோகங்களில் கண்ணன் தன் சிறப்பையே சொல்கிறான்.

**பூமி ராபோSநலோ வாயு: க$_2$ம் மநோ பு$_3$த்$_3$தி$_4$ரேவச|**
**அஹங்கார இதீயம் மே பி$_4$ந்நா ப்ரக்ருதிரஷ்டத$_4$ா|| (7-4)**

(நிலம், நீர், தீ, காற்று, ஆகாயம் எனும் ஐம்பூதங்களும், மனம் முதலிய இந்த்ரியங்களும், மஹான், அஹங்காரமுமாகிய எட்டுவித இந்த ப்ரக்ருதி என்னுடையதே என்றறிவாய்)

வ்யஷ்டி ஸ்ருஷ்டிக்கு காரணமாய் எட்டுவிதமாகப் பிரிந்து நிற்கும் இந்த ப்ரக்ருதி எனக்கு *ஶே*ஷமாய், ந்யாம்யமாய், த$_4$ார்யமாயிருப்பது. உலகிலுள்ள பல வஸ்துக்கள் உண்டாகக் காரணமான பூமி, தண்ணீர், நெருப்பு முதலான எட்டுவித அசேதனப் பொருட்கள் என்னுடையவை - நான் இட்ட வழக்காயிருப்பவை. அவை என் ஸொத்து; நான் அவற்றுக்கு ஸ்வாமி. ஆக, அசேதனப் பொருள்கள் யாவும் எனக்கு பரதந்த்ரமானது என்று காட்டப்பட்டது.

**மத்த: பரதரம் நாந்யத் கிஞ்சித$_3$ஸ்தி த$_4$நஞ்ஜய|**
**மயி ஸர்வமித$_3$ம் ப்ரோதம் ஸுத்ரே மணிக$_3$ணா இவ|| (7-7)**

(அர்ஜுநா! என்னைக் காட்டிலும் வேறுபட்டிருக்கும் எதுவும் மிகவும் மேலானதாயில்லை. இந்த எல்லாப் பொருள்களும் நூலில் ரத்தினங்கள் கோர்க்கப்பட்டிருப்பது போலே என்னிடத்தில் கோர்க்கப்பட்டிருக்கின்றன.)

சேதநாசேதனங்கள் யாவும் என் உடமைகள். எல்லா சேதநர்களுக்கும் நான் ஶேஷியாயிருக்கிறேன். ஒப்பற்ற ஞானம், ஶக்தி, ப$_3$லம் முதலான குணங்களோடு கூடிய நானே மிகவும் மேலானவன். சேதந வஸ்துக்கள் எதுவும் (இக்குணங்களில்) பரதரமாக – மிகவும் மேலானதாக – இல்லை. பரதரம் நாஸ்தி – ஸாமான்ய ஜீவர்கள் மட்டுமன்று; பிரமன் ருத்ரன் முதலான அதிகாரி புருஷர்கள், நித்யமுக்தர்கள் இவர்கள் ஜ்ஞாநப$_3$லாதி குணங்களில் மேலானவர்களானாலும், அவர்களிலும் மேம்பட்ட என்னைப் போலே மிகவும் மேலானவர் எவருமில்லை. 'ந தத் ஸமஶ்ச அப்$_4$யதி$_4$கஶ்ச த்$_3$ருஶ்யதே' 'ஒத்தார் மிக்கார் இலையாய மாமாயா' என்றன உபய வேதாந்தங்களும். 'இந்திரர்க்கும் பிரமர்க்கும் முதல்வன்தன்னை' – ஸாதாரண ஜீவராஶிகளில் பரிகணிதரான இந்த்ரனுக்கு எப்படி எம்பெருமான் காரணபூதனோ அப்படியே நான்முகனுக்கும் காரணபூதன். ருத்ரனைச் சொல்லாதொழிந்தது அவனுக்கு ப்ரஹ்மபுத்ரத்வம் ப்ரஸித்தமாகையாலே. எல்லோரிலும் ப்ரத$_4$ானனான ப்ரஹ்மாவையும் கீழான இந்த்ரனையும் சொன்னபோதே ('ஆத்யந்தங்களைச் சொல்லவே நடுவுள்ளதும் ஸித்திக்கும்' எனும் ப்ரத்யாஹார ந்யாயத்தாலே) மத்யே அவனையும் சொல்லிற்றாகக் கடவது. இந்த ஶ்லோகார்த்தத்தாலே, மும்மூர்த்திகளும் ஒன்று, மும்மூர்த்திகளும் ஸமர், மும்மூர்த்திகளுக்கும் மேற்பட்ட வேறொன்றே பரம்பொருள், மும்மூர்த்திகளில் பிரமனோ அல்லது ருத்ரனோ பரம்பொருள், மும்மூர்த்திகளில் ஒவ்வொருவர் ஒவ்வொரு கல்பத்தில் பரம்பொருள் எனும் வாதங்கள் யாவும் தள்ளப்பட்டன. தானே உலகிற்கு காரணமாகையாலும், ப்ரத$_4$ானனாகையாலும், தானே சேதநர்க்கு மோக்ஷத்தில் ப்ராப்யனாய் மோக்ஷோபாயமாயிருக்கத்தக்கவன் என்றானாயிற்று.

கார்ய நிலையிலும், காரண நிலையிலும் உள்ள இந்த சேதநாசேதனங்கள் யாவும் உறுதியான நூலில் ரத்னங்கள் போலே, என்னிடம் கோர்க்கப்பட்டிருக்கின்றன. அவைகள் எனக்கு ஶரீரம்; நான் அவற்றுக்கு ஆத்மா என்றபடி. ஒரே நூல் எல்லா மணிகளுக்கும் ஆத$_4$ாரமாயிருப்பது போலே, தான் மற்ற எல்லாப்பொருள்களுக்கும் ஆதாரமாயிருப்பவன் என்றும், நூல் ரத்னங்களினுள் மறைத்திருப்பதுபோலே தான் ஸர்வ வஸ்துக்களிலும் மறைந்திருப்பவன் என்றும், 'அந்தர் ப$_3$ஹிஶ்ச தத் ஸர்வம் வ்யாப்ய நாராயண: ஸ்தி$_2$த:' உலகிலுள்ள ஸர்வ வஸ்துக்களிலும் உள்ளும் புறமும் வ்யாபித்திருப்பவன் என்கிறான். இப்படி யாவும் இவனுக்குச் ஶரீரமாகவும், இவன் அனைத்துக்கும் ஶரீரியாகவும் இருக்கிறான் என்பதை 'யஸ்ய ப்ருதி$_2$வீ ஶரீரம், யஸ்யாத்மா ஶரீரம்' என்று ஸுபாலோபநிஷத் கோஷித்தது. 'ஏஷ ஸர்வ பூ$_4$தாந்தராத்மா அபஹதபாப்மா தி$_3$வ்யோ தே$_3$வ ஏகோ நாராயண:' (இவனே எல்லா பூதங்களுக்கும் அந்தராத்மாவாய், தாழ்வுகள் அற்றவனாய், அப்ராக்ருதனாய், ஒப்பற்றவனாயிருக்கும் தேவனான நாராயணன்) என்று இவனை 'நாராயணன்' என்று காட்டி, 'ஶரணம் க$_3$திர் நாராயண:' என்று இவனே நிருபாதி$_4$க ப்ராப்யனாகவும், ப்ராபகனாகவும்

இருப்பவன் என்று காட்டிற்று. ஆக, ஸகல சேதனாசேதனங்களுக்கும் காரணமாகவும், ஶேஷியாகவும், ஆத்மாவாகவும், சேதநங்களைக் காட்டிலும் குணங்களில் மேலானவனாகவுமிருக்கையாலே, சேதநர்க்கு இயற்கையாகவே உபாய உபேயங்களாயிருப்பவன் தானே என்றானாயிற்று.

எம்பெருமானோ எல்லையற்ற பெருமையையுடைய ஆனந்த ஸ்வரூபன். காலத்தால் அளவுபடாத நித்யன். ஒரு படிப்பட்டவன். இவ்வுலகிலுள்ள வஸ்துக்களிலுள்ள இனிமைகளைக் காட்டிலும் மிகவினியவன். அப்படி அவன் இருக்கும்போது, உயர்வு தாழ்வு தரமறியவல்ல ஜீவர்கள் மிகமிக தாழ்ந்தவைகளாய் அநித்யமாயுள்ள முக்குணமயமான வஸ்துக்களை இனிமையென்று மயங்கி அவற்றில் இழிவது ஏனென்னில் –

**தை₃வீ ஹ்யேஷா கு₃ணமயீ மம மாயா து₃ரத்யயா|**
**மாமேவ யே ப்ரபத்₃யந்தே மாயாமேதாம் தரந்தி தே|| (7–14)**

(அர்ஜுநா! ஸர்வேஶ்வரனான என்னால் படைக்கப்பட்ட முக்குணமயமான ப்ரக்ருதி எவராலும் (தம் முயற்சியால் மாத்திரம்) கடக்கவரிது. எவர்கள் என்னையே ஶரணமடைகிறார்களோ அவர்கள் இந்த மாயையைத் தாண்டுகிறார்கள்.)

மம ஏஷா கு₃ணமயீ மாயா – என்னுடைய முக்குணமயமான இந்த ப்ரக்ருதியானது; தை₃வீ ஹ்யேஷா து₃ரத்யயா – என்னால் விசித்ர ஸ்தூல வஸ்துக்களாகப் படைக்கப்பட்டதாகையாலே கடத்தற்கு மிகவும் அரியது. அக₄டிதக₄டநா ஸமர்த்தனான என்னால் என் லீலைகளுக்காக படைக்கப்பட்டது இப்பிரபஞ்சம். சேதநர்களின் முயற்சியால் மட்டும் கடக்கவரியதாய், என்னை ஶரணமடைந்தால் கடக்க வெளியதாயிருப்பது என்கிறான். 'தைவீ' 'மம' எனும் இரண்டு பதங்களால் மாலையயான ப்ரக்ருதியை ஆட்டி வைக்கும் மஹேஶ்வரன் நானே என்றுணர்த்துகிறான்.

இங்கு மாயா ஶப்தம் மெய்யான ப்ரக்ருதியையே குறிக்கும். ஶ்ருதியில் ஆஶ்சர்யமான காரியங்களைச் செய்யும் தேவனுடைய அறிவு 'மாயா' எனப்பட்டது. வேத நிகண்டுவும் 'மாயா வயுநம் ஜ்ஞாநம்' என்றது. உபநிஷத் 'மாயாம் து ப்ரக்ருதிம் வித்யாந் மாயிநம் து மஹேஶ்வரம்' – மாயை என்பது ப்ரக்ருதி; மாயை உடையவனை மஹேஶ்வரன் என்றறிவாய் என்று விசித்ர கார்யங்களைப் படைப்பதனால் ப்ரக்ருதியை மாயை என்றது. இந்த ப்ரக்ருதி செய்யும் விசித்ர கார்யமாவது – பகவானுடைய ஸ்வரூபத்தை மறைக்கையும், தன்னை இனியதாகக் காட்டுகையுமேயாம். ஆக, பகவானுடைய ப்ரக்ருதி எனும் மாயையால் மயங்கப்பட்ட எல்லா உலகும் எல்லையற்ற பெருமையுடைய ஆனந்த ஸ்வரூபனான பகவானை உள்ளபடி அறிவதில்லை என்றதாயிற்று.

இனி, மாயையாகிற ப்ரக்ருதி ஸம்பந்தத்தை போக்கடிக்கும் உபாயமாயிருப்பதான ஶரணாகதியை உபதேஶிக்கிறான். மாமேவ யே ப்ரபத்$_3$யந்தே மாயாமேதாம் தரந்தி தே - என்னையே எவர்கள் சரணமாக அடைகிறார்களோ, அவர்கள் இம்மாயையைத் தாண்டுகிறார்கள்.

மாம் - ஸத்யஶங்கல்பனாய், பரம காருணிகனாய், உயர்வு தாழ்வு பாராமல் அனைத்துலகிற்கும் புகலாயிருப்பவனான என்னை. இவனுடைய அநாதி ஸங்கல்பத்தாலே ஜீவர்களுக்கு அநாதிகாலமாக ப்ரக்ருதி ப$_3$ந்த$_4$ம் ஏற்பட்டிருக்கையால், இவனது மற்றொரு ஸங்கல்பத்தால்தான் அந்த ப$_3$ந்த$_4$த்தை நீக்க முடியுமாகையால், இங்கு ஸத்யஸங்கல்ப குணத்தை 'மாம்' எனும் ஶப்தத்துக்கு பொருளாக அநுஸந்திக்க வேணும். ப$_3$ந்த$_4$ விமோசனத்திற்குறுப்பான ஜ்ஞாநம், ஶக்தி, பூர்த்தி முதலான குணங்களும் இங்கு அநுஸந்தேயம். ஜ்ஞாநம், ஶக்தி உடையவனானாலும் கருணையற்றவனாயிருந்தால் ஶரணாகதி பலியாமற் போவதோடன்றி இவனை மேன்மேலும் குற்றம் பார்த்து தண்டிப்பதற்கே அவை உறுப்பாகுமாகையாலே பரமகாருணிகத்வமாகிற குணமும் 'மாம்' ஶப்தத்திற்கு பொருளாக வேணும். காருணிகனாய் இருந்தால் மட்டும் போதாது; உலகத்தார் போல் ஜீவனிடமுள்ள நன்மை தீமைகளைப் பார்த்து நன்மையுடையவனையே ரக்ஷிப்பது எனும் நியமமுடையவனாயிருந்தால் அளவற்ற பகவத் பாகவத அபசாரங்களைப் புரியும் ஜீவனுக்கு உய்யவழியில்லையாகையால் உயர்ந்தார் தாழ்ந்தார் என்ற வாசியற அனைவரையும் ரக்ஷிக்கையாகிற 'ஸர்வலோக ஶரண்யத்வம்' எனும் குணமும் 'மாம்' ஶப்தத்திற்கு பொருளாக அநுஸந்திக்க வேணும். அரக்கனாகிற விபீஷணன், அஸுரனாகிற காகம், குரங்காகிற ஸுக்ரீவன், பெண்பிள்ளையான த்ரௌபதி, வேடனாகிற குஹன், வேடுவச்சியான ஶபரி, ஏழையந்தணன் குசேலன், மதுரைக் கூனி, ஆய்ச்சிகள், மாலாகாரர் முதலானோரை இவன் தாழ்வுபாராமல் ஆட்கொண்டது ப்ரஸித்தமிறே. 'யதி வா ராவண: ஸ்வயம்' என்று ராவணனையும் ஆட்கொள்ள ஆசைப்பட்டவனிறே.

சேதநனானவன் மற்றொரு சேதநரையோ தன் முயற்சியையோ தன் அபீ$_4$ஷ்ட ஸித்திக்கு உபாயமாகக் கருதினானாகில், சணற்கயிறு கண்ட ப்ரஹ்மாஸ்திரம் போலே, ஶரணாகதி பலிக்காதாகையாலே ஏவகாரத்தாலே அவற்றைத் தவிர்க்கிறான்.

தன் முயற்சியாகிற உபாஸனத்தைச் சொல்லுமிப்பிரகரணத்தில், தன் முயற்சியைத் தவிர்த்துக் கொள்வது ஒட்டுமோவெனில் - மோக்ஷ ஸாதனமாக உபாஸனமாகிற ஸ்வப்ரவ்ருத்தியில் ஈடுபடுபவனுக்கு உபாஸநவிரோதி பாபங்களைக் கழித்துக்கொள்வது தன் முயற்சியால் முடியாமையாலே, அதன் பொருட்டு தன் முயற்சியினின்று கைவாங்கி ஶரணமடைவது ஒட்டும். ஸ்வப்ரவ்ருத்தியுடைய உபாஸகரோடு ஸ்வப்ரவ்ருத்தி நிவ்ருத்தியடையும் ப்ரபந்நரோடு வாசியற அனைவருமே ஶரணாகதி செய்தே தீர வேணும்.

இப்படி என்னைச் சரணடைந்தவர்கள் கடக்கவரிதான இம்மாயையை, தரந்தி – தாண்டுகிறார்கள்.

ஸம்ஸார தரணத்திற்கு *ஶ*ரணாகதியை நேராக உபாயமாகச் சொல்லியிருக்க, ப$_4$ாஷ்யகாரர் *ஶ*ரணாகதியை இங்கு பக்திக்கு அங்கமாக வ்யாக்யாநம் செய்ததேனென்னில், இது உபாஸந ப்ரகரணமாகையாலும், ஸம்ஸார விமோசனமற்ற ஐ*ஶ்*வர்யார்த்தியான ப$_4$க்தனுக்கு அங்க$_3$ ப்ரபத்தியே அபேக்ஷிதமாகையாலும் அங்க$_3$ ப்ரபத்திபரமாக வ்யாக்யாநம் செய்தது. இந்த கீதா *ஶ*ாஸ்த்ரமானது அர்ஜுநனை வ்யாஜமாகக் கொண்டு ஸகல லோகத்திற்கும் உபதே*ஶி*க்கப்பட்டது. லோகத்தில் பெரும்பாலோர் ஸ்வார்த்தமான ஸ்வப்ரவ்ருத்தியினின்று நீங்காதவர்களாகையால் அவர்களுக்காக கர்மஜ்ஞான பக்தி யோகங்களாகிற ஸாதநாந்தரங்களை விதித்து, ஆங்காங்கு அந்தந்த ஸாதநங்கள் செயற்கரியவை எனும் *ஶோ*கமேற்படும் போது, அவை நிறைவடைய தன் விஷயமான *ஶ*ரணாகதியை விதித்து, 'இந்த ஸாதனங்கள் எல்லாம் செயற்கரியவை, அத்யந்த பாரதந்த்ர ஸ்வரூபத்துக்கு விருத்தமானவை' எனும் *ஶோ*கம் விளைந்தவுடன் சரம *ஶ்*லோகத்தில் தானே நிரூபாதி$_4$கமான உபாயம் எனக்காட்டுகிறான். 'என் கார்யம் என்னால் செய்யவொண்ணாது' என்றவனுக்குச் சொன்ன வார்த்தையிறே 'மெய்ம்மைப் பெருவார்த்தை'. 'உன் கார்யத்துக்கு நான் உளேன்; நீ ஒன்றும் கரையாதே; உன் ஸர்வப$_4$ரத்தையும் என் தலையில் ஸமர்ப்பித்து நிர்ப்ப$_4$ரனாயிரு' என்றிறே திருத்தேர்த்தட்டிலே யருளிச்செய்தது.

ஆக, எம்பெருமானுடைய திருவுள்ளம் தனது நிரபேக்ஷ உபாய பாவத்தைக் காட்டுவதிலேயே ஊன்றியிருப்பது. இங்கு கர்மஜ்ஞான பக்தியோகங்களான ஸாதனங்களை விதிக்கும்போது எம்பெருமானுடைய திருவுள்ளம் ஸ்வயம் ப்ரயோஜநமான கர்மஜ்ஞாந பக்திகளை சேதநர் அனைவரும் பெற்றவராக வேணுமென்பதே. அர்ஜுநனைப் போன்ற ப்ரவ்ருத்திபரரைக் கருதி ப$_4$ாஷ்யகாரர் கர்மஜ்ஞான பக்திகளை ஸாதநாந்தரமாகவும், ப்ரபத்தியை பக்தியோகத்திற்கு அங்கமாக (அதாவது பக்தியோகம் நிறைவேறாமல் தடை செய்யும் பாபங்களைப் போக்கும் அங்கமாக) வ்யாக்யாநம் செய்து, ப்ரபந்நர்களைக் கருதி க$_3$த்$_3$யம் முதலானவற்றில் கர்மஜ்ஞான பக்திகளை ஸ்வயம்ப்ரயோஜநமாகவும், பகவானுடைய நிரபேக்ஷோபாயத்தையும் அருளிச் செய்தார். 'வாஸுதேவஸ் ஸர்வமிதி ஸ மஹாத்மா' என்றபடி வாஸுதேவனே நிருபாதிக ப்ராப்ய ப்ராபகன் என்று அறிபவனே ஜ்ஞாநீ. 'ஒரு குருவி பிணைத்த பிணையலை ஒருவரால் அவிழ்க்கப் போகிறதில்லை; ஸர்வ*ஶ*க்தி கர்மாநுகுணமாக பிணைத்த பிணையலை அவனையே கால்கட்டி அவிழ்த்துக் கொள்ளுமித்தனை' எனும் பிள்ளை திருநறையூர் அரையர் வார்த்தை இங்கு அநுஸந்தேயம்.

**சதுர்வித$_4$ா ப$_4$ஜந்தே மாம் ஜநாஸ் ஸுக்ருதிநோSர்ஜுந|**
**ஆர்த்தோ ஜிஜ்ஞாஸுர் அர்த்த$_2$ார்த்தீ$_2$ ஜ்ஞாநீ ச ப$_4$ரதர்ஷப$_4$|| (7-16)**

(பு$_4$ரத குலத்துதித்தவர்களில் தலைவனே! செல்வமிழந்து வருந்தும் ஆர்த்தன், புதிதாக செல்வத்தைப் பெறவிரும்பும் அர்த்தார்த்தி, தன் ஆத்மாவையே அநுபவிக்க விரும்பும் ஜிஜ்ஞாஸு, என்னையே அடைய விரும்பும் ஞானி என்ற நாலு வகைப்பட்ட புண்ணியசாலிகள் என்னை உபாஸிக்கிறார்கள்)

முன்சொல்லப்பட்டவர்களைக் காட்டிலும், பின் சொல்லப்பட்டவர்கள் புண்ணிய மிகுதியை உடையவர்கள். அதனாலேயே அவரவர் விரும்பும் ப$_2$லனும் மேன்மேலே சிறப்புற்றதாகிறது. தனக்கு வைஷம்ய நைர்க்$_4$ருண்யம் வாராமைக்காக எவன் எப்பலனை விரும்பி தன்னை உபாஸிக்கிறானோ அவனுக்கு அப்பலனையளிப்பது எனும் நியமத்தை எம்பெருமான் வைத்துக்கொண்டிருக்கிறான். ஒவ்வொருவரும் ஒவ்வொரு பலனை விரும்புவதற்கு காரணம் அவரவருடைய பூர்வ புண்ணியத்தின் ஏற்றத்தாழ்வே. க்ஷுத்ர புருஷார்த்தத்தை யபேக்ஷித்தால், இகழாதே 'நம்மைக் கொண்டு பெறப்பார்க்கிறான்' என்று அதையும் கொடுக்கும். 'நீ வேண்டா, உப்புச்சாறு அமையும்' என்ற தேவர்க்கு கடலைக் கடந்து அம்ருதத்தைக் கொடுத்தானிரே.

முதல் இருவரும் அல்பாஸ்திரமான ஐ*ஶ்*வர்யத்தை விரும்பும் ஐ*ஶ்*வர்யார்த்திகளேயானாலும், செல்வத்தையிழந்த ஆர்த்தனுக்குள்ள வருத்தம் புதிதாக செல்வத்தை விரும்பும் அர்த்தார்த்திக்கு இல்லையாகையால் இவன் ஆர்த்தனிலும் புண்ணியம் மிக்கவன். ஜிஜ்ஞாஸு எனும் கைவல்யார்த்தி இந்த ப்ரக்ருதி மண்டலத்தைவிட்டு நீங்கிய தன் சுத்த ஜீவாத்மாவையே அநுபவிக்க ஆசையுள்ளவன். அஸ்தி$_2$ரமான அசித்தாகிற ஐ*ஶ்*வர்யத்தைக் காட்டிலும் சித் அநுபவமாகிய ஆத்மாநுபவத்தை விரும்புகையால், மிகவும் புண்ணியசாலியான பகவதநுபவ காமனான ஜ்ஞாநிக்கு முன்னால் எடுக்கப்பட்டான். இவன் பெறும் மோக்ஷம் பகவதநுபவமற்ற தாழ்ந்த மோக்ஷம். இக்கைவல்ய ஸ்தானம் விரஜைக்கு அக்கரையில் பரமபதத்திற்கு வெளியே நித்யவிபூதியிலேயே இருப்பது. இதனை ஸாலோக்ய மோக்ஷம் என்றும் சொல்லுவர். ஜ்ஞானியானவன் 'ப$_4$க$_3$வச்சே$_2$ஷதைகரஸ ஆத்ம ஸ்வரூபவித்' (கீ.பாஷ்.) – எம்பெருமானுக்கு அடிமைப்பட்டிருப்பதையே இயல்வாகக் கொண்ட ஆத்மஸ்வரூபத்தையறிந்தவன் – எனும் ஜ்ஞானி லக்ஷணத்தை அறிந்தவனாகையால், ஆத்மதர்*ஶ*நத்தில் இழியாமல் தன் ஸ்வரூபத்துக்குச் சேர பகவானையடைந்து அவனுக்கு தொண்டு செய்வதையே விரும்புபவன். இவன் பெறும் மோக்ஷமே பரமாகதி – உயர்ந்த மோக்ஷம். ஆர்த்தன் – மஹாபலி த்ரைலோக்ய ராஜ்யத்தையும் அபஹரித்தபோது இந்த்ரனின் நிலை. அர்த்தார்த்தி – துருவன். ஞானி – ப்ரஹ்லாதன்.

வெள்ளை நிறத்தையுடைய ஸுத்த ஸ்வபாவனான அர்ஜுநா! நீ புண்ணியசாலிகளில் சிறந்தவனான ஜ்ஞானியாக வேண்டும்' என்று தன் விருப்பத்தைக் காட்டுகிறான்.

திருப்பல்லாண்டில், 'வாழாட்பட்டு' என்கிற பாசுரத்தினால் ஞானிகளை அழைத்தும், 'ஏடு நிலத்தில்' பாசுரத்தினால் கைவல்யார்த்திகளை யழைத்தும், 'அண்டக்குலத்துக்கதிபதி' பாசுரத்தினால் ஐஶ்வர்யாதிகளை அழைத்தும் உபதேஶம் தந்தருளியிருப்பது ஸ்பஷ்டம். திருவாய்மொழியில், 'ஒரு நாயகமாய்' பதிகத்தில் இந்நால்வகை யதிகாரிகள் தெரிவிக்கப்பட்டிருப்பதும் ப்ரஸித்தம்.

**தேஷாம் ஜ்ஞாநீ நித்யயுக்த: ஏகப$_4$க்திர் விஶிஷ்யதே|**
**ப்ரியோ ஹி ஜ்ஞாநிநோSத்யர்த்த$_2$ம் அஹம் ஸ ச மம ப்ரிய:| (7-17)**

(அந்நால்வருள், என்னோடே எப்போதும் சேர்ந்திருப்பவனாய், என் ஒருவனிடமே பக்தி செய்பவனுமான ஜ்ஞாநியே மேலானவன். நான் ஞானிக்கு சொல்லவொண்ணாவளவு இனியவன்; அவனும் எனக்கு இனியவன்.)

முதல் மூவரும் பக்தி செய்யும் போது தாங்கள் பெற விரும்பும் பலன்களையே நினைத்திருப்பர்; பலனைப் பெற்ற பிறகு என்னை மறந்துபோவர். ஆனால் ஜ்ஞானியோ என்னையே ப்ராப்யனாக (பயனாக)க் கொண்டவனாகையால் ஸாதன தஶையோடு ஸாத்ய தஶையோடு வாசியற என்னோடு சேர்ந்திருக்கிறான். ஆகையால் ஜ்ஞாநியே சிறந்தவன்.

ஸ ச மம ப்ரிய: என்று பகவான் ஞானியிடம் தனது ப்ரியத்தைக் குறைத்துக் கூறினானாயினும் உண்மையில் இவனுடைய ப்ரியமே பெரிது. ஆழ்வாரது அவா குளப்படியாம்படியன்றோ அவன் ஆழ்வாரை வாரிப்பருகியது. பிராட்டி 'ஊர்த்வம் மாஸாந் ந ஜீவிஷ்யே' (ஒரு மாதத்துக்கு மேல் உயிர் தரியேன்) என்றாள். 'ந ஜீவேயம் க்ஷணமபி' (ஒரு க்ஷணமும் ஜீவியேன்) என்றிறே பெருமாள் வார்த்தை. பிராட்டி ஜீவகோடியிறே.

**உத$_3$ாராஸ் ஸர்வ ஏவைதே ஜ்ஞாநீ து ஆத்மைவ மே மதம்|**
**ஆஸ்தி$_2$தஸ் ஸஹி யுக்தாத்மா மாமேவ அநுத்தமாம் க$_3$திம்|| (7-18)**

(இந்நால்வருமே உதாரர்கள். ஞானியோவெனில் எனக்கு ஆத்மா என்று என் ஸித்தாந்தம். என்னோடு சேர விரும்புகின்ற அவன் என்னையே ஒப்பற்ற ப்ராப்யமாக எண்ணியிருப்பவன்.)

ஏதோ ஒரு பலனை விரும்பியாவது இவர்கள் என்னிடம் பக்தியைச் செய்வதால் இந்நால்வருமே உதாரர்கள். இவர்கள் என்னிடம் வந்து கேட்பதால்தான் 'எல்லா செல்வங்களையும் உடையவன் நான் ஒருவனே' என்ற உண்மை ப்ரகாசிக்கிறது. 'ஸர்வ பலப்ரதன்', 'வேண்டிற்றெல்லாம் தரும் கோதில்சீர் கண்ணன்' என்கிற புகழைக்கொடுக்கிறார்கள். இப்படி என்னிடம் பயனை வேண்டிப்பெற்று என் மேன்மையை நிலை நாட்டுவதாலே இவர்கள் உதாரர்களே (வண்மை மிக்கவர்களே) என்கிறான்.

இவர்களில் ஞானிக்கும் மற்றவர்க்கும் நெடுவாசியுண்டு. ஜ்ஞாநீ எனக்கு ஆத்மா (து$_4$ாரகன்) என்பது என் ஸித்தாந்தம். ஞானியில்லாவிடில் நான் த$_4$ரிக்க மாட்டேன். ஏனெனில் அவன் என்னோடு கூடியிருப்பதையே விரும்புபவன். ஜ்ஞானியானவன் பகவானுக்கு ஸத்தா ஹேது (உளனாமைக்கு காரணம்); மற்ற உதாரர்கள் புஷ்டி ஹேது (வளர்ச்சிக்கு காரணம்) என்பர் பெரியோர்.

**ப$_3$ஹூநாம் ஜந்மநாமந்தே ஜ்ஞாநவாந் மாம் ப்ரபத்$_3$யதே|**
**வாஸுதே$_3$வஸ் ஸர்வமிதி ஸ மஹாத்மா ஸுது$_3$ர்லப:|| (7-19)**

(பல பிறவிகளின் முடிவில் அறிவு முதிரப்பெற்ற ஜ்ஞானியானவன் 'வாஸுதேவனே எனக்கு பரம ப்ராப்யமாகவும், ப்ராபகனாகவும், த$_4$ாரக போஷக பே$_4$ாக்$_3$ய்யம் என்று எல்லாமாகவும் இருக்கிறான்' என்றெண்ணி என்னை *ஶ*ரணமடைகிறான். அவன் வி*ஶ*ால நெஞ்சினன்; இவ்வுலகில் எனக்கு மிகவும் கிடைத்தற்கரியன்.)

ஜந்மாந்தர ஸஹஸ்ரேஷு தபோ ஜ்ஞான ஸமாதி$_4$பி$_4$:| நராணாம் க்ஷீணபாபாநாம் க்ருஷ்ணே ப$_4$க்தி: ப்ரஜாயதே|| (இதி.ஸமுச் ) – கர்மஜ்ஞான பக்தி யோகங்களை அநேக ஜந்மங்களில் அநுஷ்டித்த பின்புதான் கண்ணனிடம் (மோக்ஷ ஸாதனமான) பக்தி உண்டாகிறது – என்று சொல்லப்பட்டவன் ஜ்ஞாநீ. வாஸுதேவஸ்ஸர்வம் – 'இதம் ஸர்வம் வாஸுதேவ:' என்று பொருளன்று. 'மம ஸர்வம் வாஸுதேவ:' என்றே பொருள். 'உண்ணுஞ்சோறு பருகுநீர் தின்னும் வெற்றிலையுமெல்லாம் கண்ணன்' என்கிற ஆழ்வார் பாசுரப்படி 'த$_4$ாரக போஷக போ$_4$க்$_3$யங்களெல்லாம் தனக்குக் கண்ணன்' என்றிருக்கும் ஞானியை இவ்வுலகில் காண்பது மிகவரிது என்கிறான். 'பெற்றதாய் நீயே பிறப்பித்த தந்தை நீ மற்றையாராவாரும் நீ' 'மாதா பிதா ப்$_4$ராதா நிவாஸ: *ஶ*ரணம் ஸுஹ்ருத் க$_3$திர் நாராயண: (ஸுபால.உப) 'த்வமேவ மாதாச பிதா த்வமேவ, த்வமேவ ப$_3$ந்து$_4$*ஶ்*ச கு$_3$ருஸ் த்வமேவ| த்வமேவ வித்$_3$யா த்$_3$ரவிணம் த்வமேவ, த்வமேவ ஸர்வம் மம தே$_3$வதே$_3$வ||

**யோ யோ யாம் யாம் தநும் ப$_4$க்த: *ஶ்*ரத்$_3$த$_4$யா அர்ச்சிதும் இச்சதி|**
**தஸ்வ தஸ்ய அசலாம் *ஶ்*ரத்தாம் தாம் ஏவ விததாம்யஹம்|| (7-21)**

(எவனெவன் தாம் விரும்பும் விஷயங்களைப் பெற எனக்கு *ஶ*ரீரமான தேவதைகளை வழிபட விரும்புகிறானோ, அவ்வழிபாட்டில் ருசியும் நம்பிக்கையும் *ஶ்*ரத்தையும் அவனுக்கு இருக்கும்படி நானே செய்கிறேன்.)

ஸத்வ குணமுடையோரே பகவானிடம் பக்தி செயவர். ராஜஸதாமஸ குணமுடையோர் பிற தெய்வங்களையே வழிபடுவர். 'அங்காந் அந்யா தேவதா:' என்கிறபடி எல்லா தேவதைகளும் பரமனின் அங்கங்கள். இதையறியாமல் அவர்கள் பிற தேவதைகளைப் பூஜித்தாலும், தேஹத்துக்குச் செய்யும் நன்மையால் ஆத்மா த்ருப்தியடைவது போலே,

பகவான் உகந்து அவர்கள் விரும்பும் பலனையளிக்கிறான். இவர்கள் ஒரு வகையில் ஶாஸ்த்ர ஸம்பந்தம் பெற்றிருப்பவர்கள். அந்த ஶாஸ்த்ர விஶ்வாஸத்தையே பற்றாசாகக் கொண்டு, படிப்படியாக அவர்களை முன்னேற்றி பகவத் பக்தர்களாக ஆக்குவதற்காக அவர்களுக்கு அந்த ஜன்மத்தில் அந்த தேவதாந்தரங்களிடம் பக்தி ஶ்ரத்தையை நிலைநிறுத்துகிறான். இப்படிச் செய்யாவிடில் அவர்கள் ஶாஸ்த்ர விஶ்வாஸத்தையிழந்து நாஸ்திகராய் போகக் கூடுமன்றோ. ஆகையால், அவர்களையும் க்ரமமாக முன்னேற்றுவதற்காக தேவதாந்தரங்களை ஆராதிப்பதற்குறுப்பான பக்தி ஶ்ரத்தையை அவர்களுக்குத் தருகிறான்.

இவ்வத்யாயத்தின் இறுதியில் **'ஜரா மரண மோக்ஷாய'** (7-29) எனும் ஶ்லோகத்தால் கேவலன் தன் ஆத்மயாதாத்ம்ய ஸ்வரூபத்தை அறியவேணுமென்றும், இந்நால்வகையினருமே அறியவேண்டியவை எவை என்றும், அவர்களின் அந்திம ஸ்ம்ருதி பகவத் சிந்தனையாக இருக்கவேணுமென்றும், உயிர் போகும் வரை நித்ய நைமித்திக கர்மங்களை அவர்கள் செய்ய வேணுமென்றும் சொல்லி அடுத்த அத்யாயத்தில் இவைகளை விவரிக்க இருக்கிறான்.

* * * * *

## எட்டாம் அத்யாயம் – அக்ஷர ப்ரஹ்ம யோகம்

ஶ்ரிய: பதியான ஸர்வேஶ்வரனிடம் பக்தியுண்டாக வேண்டுமானால், அவனுடைய மேன்மை எத்தகைத்து என்று நாம் உள்ளபடியறிய வேணும். அதனால், பகவான் தன் பெருமைகளை அதாவது தானே ஜகத்காரணன், சேதநாசேதனங்களை தன் ஸொத்தாக உடையவன், அவைகளை நியமிப்பவனாகையால் தானே அறப்பெரியோன், தன்னிடம் பக்தி செய்யும் நால்வரில் ஞானி எங்ஙனம் சிறந்தவன் என்றெல்லாம் கீழத்யாயத்தில் விளக்கினான். இந்த எட்டாம் அத்யாயத்தில் தன்னிடம் பக்தி செய்யும் நால்வகைப்பட்டவரும் அறியவேண்டியவை எவை, அவர்கள் பக்தி செய்யும் விதம், அவர்களின் அந்திம ஸ்ம்ருதி (இறுதி நினைவு) எவ்வாறிருக்க வேணும் என்பதைக் கூறி ஜீவன் மோக்ஷம் செல்லும் அர்ச்சிராதி மார்க்கத்தையும் விவரித்துக் கூறுகிறான்.

28 ஶ்லோகங்களுடைய இவ்வத்யாயத்தின் தொடக்கத்தில் அர்ஜுநன் சில கேள்விகளைக் கேட்கிறான்: கர்மம் என்றால் என்ன? தன் ஆத்மாவையே அநுபவிக்க விரும்பும் கைவல்யார்த்தி அறிய வேண்டியவை எவை? ஐஶ்வர்யார்த்தி, கைவல்யார்த்தி, ஞானி மூவரும் பொதுவாக அறியவேண்டியவை எவை? மூவரும் மரணத்தறுவாயில் உம்மை எங்ஙனம் அறியவேண்டும்? என்று கேட்கிறான். கீதாசார்யன் ஸ்வத: ஸர்வஜ்ஞன். அவன் பேச்சு ப்ரௌடமாக (அர்த்தம் சிறிது ஶ்ரமப்பட்டு அறியும்படியாக) அமைந்துள்ளது.

ஸ்த்ரீ - புருஷ ஸம்யோகத்தில் விஸர்க்கம் (ரேதஸ்ஸை விடுதல்) **கர்மம்** எனப்படுகிறது. இது அருவருக்கத்தக்கது என்பதையறிந்து கைவல்யார்த்தி இதைக் கைவிட வேணும். ப்ரக்ருதி **அத்யாத்மகம்** எனப்படுகிறது. இது ஆத்மாவிலும் வேறுபட்டது. ஜீவனின் தேஹம் இப்பிரக்ருதியால் ஆனது. இதன் தொடர்பினாலேயே அஜ்ஞானம், கர்மம், வாஸனை, ருசி முதலானவை ஜீவனுக்கு உண்டாகின்றன. கைவல்யார்த்தி இதையறிந்து தேஹ ஸம்பந்தத்தை விட முயலவேண்டும். ப்ரக்ருதியை விட்ட சுத்த ஜீவன் **அக்ஷரம்** எனப்படுகிறான். **அதிபூதம்** என்பது அசித் வஸ்துக்கள் - எப்போதும் மாறுதல் உடையவை - ஐஶ்வர்யார்த்தி இதையறிய வேணும். **அதிதைவம்** என்பது கைவல்யார்த்தி தான் விரும்பும் ஆத்மாநுபவத்தால் ப்ரஹ்மா இந்த்ராதிகளைக் காட்டிலும் மேலான ஸுகத்தைப் பெறப்போவதாக ஸ்மரித்தல். **ஆதியஜ்ஞம்** என்பது ஸர்வேஶ்வரனான நானே. யஜ்ஞம் முதலான கர்மாக்களால் பூஜிக்கப்படுபவன். நித்ய நைமித்திக கர்மங்களைச் செய்யும்போதும், யஜ்ஞ யாகாதிகளைச் செய்யும் போதும் தேவதைகளுக்கு அந்தர்யாமியான நானே ஆராதிக்கப்படுவதாக மூன்றுவித பக்தர்களும் அநுஸந்திக்க வேணும்.

ஐஶ்வர்யார்த்தி மரணகாலத்தில் பகவானை அண்டாதிபதியாக (செல்வந்தனாக) நினைத்தானாகில் அவன் மறுபிறவியில் செல்வத்தை யடைவான். கேவலன் மரணகாலத்தில் ஆத்மாநுபவத்தையே நினைத்திருந்தால் அவன் அதையே பெறுகிறான். ஞானி பகவானையே தனக்கு எல்லாமாக நினைத்து ப்ராணனை விட்டால் அவன் பகவானையே யடைகிறான். ஒருவன் வாழ்நாளில் எதை நினைத்திருக்கிறானோ அதுவே மரணகாலத்தில் நினைவுக்கு வரும். ஆதிபரதன் தான் வளர்த்து வந்த மானை நினைத்துக்கொண்டே உயிர் நீத்ததால் மானாக பிறந்தார் என்று புராணம் சொல்லிற்று. ஆதலால் அர்ஜுநா! எல்லாக் காலத்திலும் என்னை நினைத்துக் கொண்டிரு. இப்படி என்னிடம் வைக்கப்பட்ட மனம், புத்தி இவைகளையுடையவனாய்க் கொண்டு என்னையே அடையப்போகிறாய்; இதில் ஐயமில்லை (8-7).

**அப்யாஸம்** என்பது பயிற்சி. **யோகம்** என்பது குறித்த காலத்தில் பகவானை தைலதாரை போல் இடைவிடாது த்யானம் செய்வது. பகவதாராதனம், ஸந்த்யாவந்தனம் போன்ற கர்மங்களைச் செய்யும்போது **'திவ்யம்'** எனப்படும் அப்ராக்ருதமான பகவானின் திருமேனியை நினைத்துக்கொண்டே செய்தால் அந்த பகவானை இறுதிகால நினைவினால் அடையலாம்.

ஸம்ஸாரிகளின் விஷயமாக ப்ரவ்ருத்தி, 'விஹித விஷய போகம்' 'நிஷித்த விஷய போகம்' என்று இரண்டாகச் சொல்லப்படுகிறது. ஸ்வதார போகம் விஹிதவிஷய போகம். பரதார போகம் நிஷித்த விஷயபோகம். விஹிதவிஷய போகம் க்ருஹஸ்தாஶ்ரம தர்மமாகிலும், அநந்யார்ஹ ஶேஷத்வ அநந்ய ஶரணத்வங்களோடு கூட அநந்ய

போக்யத்வமென்கிற விலக்ஷணமான தன்மையையும் பெற்றிருக்கிற விஶேஷாதிகாரிக்கு, இந்த விஹிதவிஷய போகம் ஜுகுப்ஸநீயமேயாகையால் த்யாஜ்யமேயாகும் (8-14) என்று அர்ஜுநன் கேட்ட கேள்விகளுக்கு விரிவாக பதில் கூறினானாயிற்று.

**மாமுபேத்ய புநர்ஜந்ம து₃:க்க₂ாலயம் அஶாஶ்வதம்| நாப்நுவந்தி மஹாத்மாந: ஸம்ஸித்₃தி₄ம் பரமாம் க₃தா:|| (8-15)** (என்னையடைந்த மஹாத்மாக்கள் என்னையே எல்லாமாகப் பெற்று வாழும் உயர்ந்த பேற்றைப் பெறுகிறார்கள். ஶாஶ்வதமற்ற தேஹ ஸம்பந்தத்தை மீண்டும் அவர்கள் அடைவதில்லை.) ஐஶ்வர்யார்த்தி அடையும் ஐஶ்வர்யம் நிலையானதல்ல. கைவல்யார்த்தி, ஜ்ஞானி இவர்களால் முறையே அடையப்படும் ஆத்மாநுபவம், பகவதநுபவம் நிலையானவை (நித்யமானவை) என்று இவ்வத்யாயத்தின் எஞ்சிய பகுதியினால் உணர்த்துகிறான். 'அஶாஶ்வதம் ஜந்ம' என்றபடி பிறவியால் ஏற்படும் ஶரீர ஸம்பந்தம், துன்பங்கள் அனைத்துக்கும் இருப்பிடமாயும் நிலையற்றதாயுமிருப்பது. 'ஸம்ஸார ஸாக₃ரம் கோ₄ரம் அநந்த க்லேஶ ப₄ாஜநம்' என்று ஜிதந்தே. யார் இத்தகைய து:க்ககரமான பிறப்பை அடைவதில்லையெனில் - மஹாத்மந: - பெருநெஞ்சினர். 'ஸ மஹாத்மா ஸுது₃ர்லப₄:' என்று பேசப்பட்ட ஜ்ஞானிகள் என்னிடம் ப்ரீதிவைத்து என்னையே அடைகிறார்கள். ஸம்ஸாரத்திற்கு அவர்கள் திரும்புவதில்லை. இவர்களும் லீலாவிபூதிக்கு வருவதை விரும்பார்; அரும்பாடுபட்டு என்னால் அடையப்பெற்ற இவர்களை நானும் ஸம்ஸாரத்துக்கு திருப்பியனுப்பமாட்டேன் என்று கருத்து. இந்த ஜ்ஞானியின் ப்ராப்யம் 'பரமா ஸம்ஸித்₃தி₄:' - முற்கூறிய கேவலனது ஆத்மாநுபவத்தைவிட மிகச்சிறந்தது. அவனுடையது ஸித்தி; இவனுடையது ஸம்ஸித்₃தி₄. ஸமீசீனமான (ஸ்வரூபாநுகுணமான) ஸித்தி. ஆக, ஐஶ்வர்யார்த்தியின் பலனுக்கு அழிவுண்டு; கேவலனது பலன் பகவதநுபவமற்றது; ஜ்ஞானியின் பலன் அழிவற்றது, மிகச் சிறந்தது என்று கூறினானாயிற்று.

**ஆப்ரஹ்ம பு₄வநால் லோகா: புநராவர்த்திநோऽர்ஜுந|**
**மாம் உபேத்ய து கௌந்தேய புநர்ஜந்ம ந வித்₃யதே|| (8-16)**

(அர்ஜுநா! ப்ரஹ்மலோகம் வரையிலுள்ள எல்லா உலகங்களும் அழிவையுடையவை. குந்திபுத்ரனே! (என் உலகமான பரமபதத்துக்கு எக்காலும் அழிவேயில்லை) ஆகையால் என்னையடைபவர்களுக்கு மறுபிறப்பு இல்லை.)

கீழேழுலோகம், மேலேழு லோகம் ஓர் அண்டம். அண்டத்திற்கு அதிபதி ப்ரஹ்மா. அவனது லோகம் ஸத்யலோகம் எனப்படுகிறது. அதுவரை அனைத்து லோகங்களும் அழியக்கூடியவை. ஸர்வஜ்ஞனாய், ஸத்யஸங்கல்பனாய், பரமகாருணிகனாய், ஜகத் உத்பத்தி ஸ்திதி லயங்களுக்கு காரணனாய், ஸகலகல்யாண குணங்களை யுடையவனாயுள்ள மாம் - என்னை அடைபவர்கள் மறுபிறவியைப் பற்றி ஶங்கிக்கவும் வேண்டா என்று கருத்து.

கௌந்தேய! என் அத்தை பிள்ளையான நீ என்னையடைவதாகிற அழியாப்பயனைப் பெறவேணும்.

கீழ்ச்சுலோகமும் இச்சுலோகமும் 'முக்தாத்மா பரமபுருஷனோடு ஐக்யமடைந்து விடுவதுதான் முக்தி' என்கிற அத்வைதிகளின் வாதத்தை அடியறுக்குமவை. எங்ஙனேயென்னில் – பரப்ரஹ்மத்தோடு ஐக்யமடைந்துவிட்டால் புநராவ்ருத்தி*ஶ*ங்கா நிஷேதங்களுக்கு ப்ரஸக்தியில்லையன்றோ.

மேல் 20, 21 *ஶ்*லோகங்களில் ஆத்மாநுபவம் செய்கிற கேவலனுக்கும் மறுபிறவியில்லை என்று சொல்கிறான். முமுக்ஷு பதத்தில் *ஶ*ரீர விமோசனம், பகவத்ப்ராப்தி இவையிரண்டும் உண்டாயிருக்க, *ஶ*ரீர விமோசனத்தை மட்டும் இச்சித்தபடியால் கேவல *ஶ*ப்தம். கேவலம் – அற்பம். கேவலன் – தற்பிரியன். பரிசுத்த ஜீவனை யநுபவிக்கப் பெற்றவனுக்கு ஸம்ஸார பயம் மட்டுமேயுள்ளது; ப்ரக்ருதியிலிருந்து விடுபட மட்டும் எண்ணுகிறான். பகவத் ப்ராவண்யமுள்ளது ப்ரபந்நனுக்கே.

அசித் விலக்ஷணனான சித் எனப்படும் ஜீவாத்மா *ஶ*ாஸ்த்ரம் கொண்டே அறியத்தக்கவன். இவன் நித்ய வஸ்து. அழிவற்றவன். இவன் **அவ்யக்தம், அக்ஷரன்** எனப்படுகிறான். இந்த ஜீவாத்ம ஸ்வரூபம் என்னால் (க்ருஷ்ணனால்) நியமிக்கப்படும் எனது மேலான இருப்பிடமாகும். ஜீவவிலக்ஷணனான பரமபுருஷன் ஸர்வ வஸ்துக்களிலும் வ்யாபித்துள்ளான். அவனிடம் ஸர்வ வஸ்துக்களும் அடங்கியுள்ளன. அப்பரமபுருஷன் வேறுபயன் கருதாத (அவனைக்குறித்தே செய்யப்பட்ட) பக்தியினாலேயே அடையத்தக்கவன் என்று தன் பெருமைகளைச் சொல்லி, பின் உபநிஷத்துக்களில் சொல்லப்பட்ட அர்ச்சிராதி கதி அவ*ஶ்*யம் அறியவேண்டியது என்று சொல்லி அதனை விவரிக்கிறான்.

அடுத்து 23, 24 *ஶ்*லோகங்களால் ஜ்ஞாநி அடையும் **அர்ச்சிராதி மார்க்கம்** சொல்லப்படுகிறது. கதி என்றால் மார்க்கம். ஆத்மாக்கள் தங்களுடைய நல்வினை தீவினைப் பயன்களை யநுபவிக்கச் செல்லும் மார்க்கங்கள் நான்காகும். புண்ணிய பலனை யநுபவிக்க ஸ்வர்க்காதி லோகங்களுக்குச் செல்லும் வழி தூமாதி கதி. பாபபலனை யநுபவிக்க யமலோகத்துக்குச் செல்லும் வழி யாம்ய கதி. மீண்டும் பூலோகத்தில் பிறப்பதற்கு தாயின் கர்ப்பத்தையடையும் வழி கர்ப்ப கதி. பக்தியாலோ ப்ரபத்தியாலோ பகவதநுக்ரஹத்துக்கு இலக்காகி புண்யபாபங்கள் கழியப்பெற்று பகவத் கைங்கர்யம் பண்ணப்பெற மீண்டும் திரும்பி வருதலில்லாத பரமபதம் செல்லும் வழி அர்ச்சிராதி கதி. அர்ச்சிஸ் என்பது அக்நி முதலிய ஒளிப்பொருள்களுக்கெல்லாம் அபிமானி தேவதை. பரமபதம் செல்லும் முக்தாத்மாவை இந்த தேவதை முதலில் (ஆதியில்) வரவேற்று கௌரவிக்கையாலே இந்த மார்க்கம் அர்ச்சிராதி மார்க்கம் என்றழைக்கப்படுகிறது.

முக்த ஜீவனை அதிவஹிப்பதற்காக (அழைத்துச் செல்வதற்காக) பகவானாலே நியமிக்கப்பட்டவர்கள் ஆதிவாஹிகர்கள் எனப்படுபவர். அவர்களாவார் - அர்ச்சிஸ் (அக்நி), பகலுக்கு அபிமானி தேவதை, சுக்லபக்ஷ அபிமானி தேவதை, உத்தராயண அபிமானி தேவதை, ஆதித்யன், சந்த்ரன், வருணன், இந்த்ரன், ப்ரஜாபதி. வருணன் முதலானோர் முக்த ஜீவனை தம்தம் எல்லைவரை அழைத்துச் செல்வதாகச் சொல்லுவர். முக்தாத்மாவானவன் ஆதிவாஹிகர்கள் வழிநடத்த இந்த அர்ச்சிராதி மார்க்கத்தில் சென்று மேற்சொன்ன ஸ்தானங்களைக் கடந்து இறுதியில் விரஜா நதியில் நீராடி தன் ஸ்தூல தேஹத்திற்கு காரணமான ஸூக்ஷ்ம தேஹமும், இவையிரண்டுக்கும் ஆதாரமான கர்ம வாஸனா ரேணுக்களையும் கழித்து, அமானவனால் ஸ்பர்*ஶி*க்கப்பட்டு அப்ராக்ருத திவ்ய *ஶ*ரீரத்தைப் பெற்று பரமபதமடைகிறான். (இந்த மார்க்கத்தில் சொல்லப்படும் ஆதிவாஹிகர்கள் அனைவரும் ஜீவர்களே - கர்மவ*ஶ்*யர்களே. முக்தர்களன்று. அமானவன் மட்டும் நித்யஸூரி. இவரை வித்யுத் புருஷன், தடித், மின்னலுக்கபிமானி தேவதை என்றும் சொல்லுவர்.)

இந்த அர்ச்சிராதி மார்க்கம் நமக்குக் கிட்டி மோக்ஷம் பெற, அந்திம ஸ்ம்ருதி (உடலைவிட்டு உயிர் பிரியும் முன் இறுதி நினைவு) வேண்டும். அதாவது பகவானை நினைக்க வேண்டும் என்று சொல்லப்படுகிறது. 'ஆசைவாய்ச் சென்ற சிந்தையராகி' (4-5-1) பாசுர வ்யாக்யானத்தில் ஜீயர் ஸ்ரீஸூக்திகள்: 'சரம காலத்தில் திருநாமம் சொல்வார் பெருமை பேசுவது நம்பரமன்றே; அவன்தான் அறியுமத்தனை. இதர ஸங்கம் குலையப் பெறுவதாம்; சரமகாலத்தில் அவர்களை அழையாதே நம்மை நினைக்கப் பெறுவதாம்; இதென்ன வேற்றம்! இதென்ன வேற்றம்! என்று இதின் ஏற்றமறிந்து ஈடுபடுபவன் அவனிறே'.

(பகவானே அடைவிக்கிறவன், அடைபவனும் அவனே' என்கிற அத்யவஸாயமுள்ள ப்ரபந்நனுக்கு இந்த அந்திம ஸ்ம்ருதி அவ*ஶி*யமில்லை. இருந்தால் தவறில்லை. ஸ்ரீவராஹ சரம *ஶ்*லோகத்தின்படி இப்படிப்பட்ட ப்ரபந்நனுக்கு பகவானே இறுதி நினைவைச் செய்து, ஜீவன் உடலைவிட்டு வெளியேறியதும் ஆதிவாஹிகர் கையிலும் காட்டிக்கொடாதே, தானே சரக்காளாய் வந்து அவனை வழிநடத்திச் செல்கிறான்.) புண்ணிய லோகங்களுக்குச் செல்லும் வழியான தூமாதிகதி புகை சூழ்ந்து இருட்டாக யிருக்கும் என்பது நூற்கொள்கை. அர்ச்சிராதி கதியே ப்ரகா*ஶ*மான வழி. 'அர்ஜுநா! நீ அர்ச்சிராதி மார்க்கத்தையே சிந்தனை செய்து கொண்டிருப்பாயானால், அவ்வழியில் நீ சென்று மோக்ஷமடைவது நி*ஶ்*சயம்' என்றருளிச்செய்தான் (8-27).

இம்மார்க்க சிந்தனமே இன்பமாயிருக்கும். தன் நாயகனுடன் கைகோத்து உலாவுதலை நினைப்பது எப்படி ஒரு உத்தம நாயகிக்கு ஆனந்தமாயிருக்குமோ, அதேபோல் பகவான் அர்ச்சிராதி வழியில் அழைத்துப்போவதை நினைப்பதே ஒரு பக்தனுக்கு போக ரூபமாயிருக்கும். அநுதினமும் இரவு படுக்கச் செல்லும்போது அர்ச்சிராதியை மனதில்

த்யானம் பண்ணுவது பெரியோர் அநுஷ்டானம். ஸ்ரீவைகுண்ட கத்யத்தின் இறுதிச் சூர்ணைகளை அநுஸந்திப்பது மரபு.

மேல் அத்யாயங்களுக்கு ஒரு பலனையும் கண்ணன் கூறவில்லை. அவைகளில் ஜீவாத்ம ஸ்வரூபம், ஜீவன் செய்யவேண்டிய கர்மயோகம் ஞானயோகமே சொல்லப்பட்டது. ஆனால் இந்த 7, 8 அத்யாயங்களில் ஸர்வேஶ்வரனுடைய ஸகல ஞான சக்தி கல்யாண குணங்களையெல்லாம் பரக்க உபதேஶித்திருக்கிறான். மேலும் தன்னிடம் பக்தி செய்யும் ஞானியின் பெருமையையும், அவன் பெறும் மேலான மோக்ஷ பலனைப் பற்றியும் சொல்லி, அதை அடையும் மார்க்கத்தையும் விரிவாகச் சொல்லியுள்ளான். ஆதலால் இவ்விரு அத்யாயங்களையும் நன்கு கற்றறிந்தவர்கள் மேலான மோக்ஷ ப$_2$லத்தை அடைகிறார்கள் என்று கண்ணனே இதற்குப் பலன் அருளிச் செய்துள்ளான்.

* * * * *

## ஒன்பதாவது அத்யாயம் – ராஜவித்யா ராஜகுஹ்ய யோகம்

34 ஶ்லோகங்களுள்ள இவ்வத்யாயம் ராஜவித்யா ராஜ குஹ்ய யோகம் எனப்படுகிறது. இவ்வத்யாயத்தில் தன்னைப்பற்றிய பக்திரூபமான உபாஸனத்தின் ஸ்வரூபத்தை ப்ரதானமாகக் கூறுகிறான். பக்திக்கு விஷயமான பரமபுருஷனின் மேன்மையும், பக்தி யோகத்தின் ஸ்வரூபமும் இதில் வலியுறுத்தப்படுகின்றன. கண்ணனின் ஸ்வமஹாத்ம்யம், மநுஷ்யத்வே பரத்வம், மஹாத்மாவான ஜ்ஞானியின் ஏற்றம், பக்தியோகத்தின் ஸ்வரூபம் எனும் நான்கு விஷயங்கள் பேசப்படுகின்றன. நான்காம் விஷயத்திலேயே முக்கிய நோக்கு. மற்ற மூன்றும் அதற்குறுப்பாகச் சொல்லப்பட்டன என்று அறியத்தக்கது.

அர்ஜுநா! என் விஷயத்தில் பொறாமையற்ற உனக்கு வேதாந்தங்களில் அதிரஹஸ்யமாகச் சொல்லப்பட்ட பக்தியோகத்தையும், அதன் வகைகளையும் கூறுகிறேன். இந்த ஜ்ஞானம் ராஜவித்யை (வித்யைகளில் அரசனாயிருப்பது), ராஜகுஹ்யம் (மறைபொருள்களுள் மேலானது), உத்தமமானது, மிக எளியது என்று இதற்குள்ள சிறப்புகளைச் சொல்லி புகழ்கிறான். கர்ம யோகம் குஹ்யம் (ரஹஸ்யமானது); ஜ்ஞான யோகம் குஹ்யதரம் (மிக ரஹஸ்யமானது); பக்தியோகம் குஹ்யதமம் (மிகமிக ரஹஸ்யமானது). அதாவது அநதிகாரிகளுக்கு உபதேஶித்துவிடக் கூடாது என்று கருத்து. கர்மஜ்ஞான யோகங்கள் பக்தியோக ஆரம்பவிரோதி பாபங்களையே போக்கும். பக்தியோகமோவெனில் என்னையடைவதற்கு தடையாயிருக்கும் எல்லா பாபங்களையும் போக்கும். இத்தர்மத்தில் ஶ்ரத்தையின்றி, என்னையடையாமல் பிறப்பு இறப்பு பிணி மூப்பாகிற ஸம்ஸாரத்திலே உழல்கிறார்களே! இது என்ன ஆஶ்சர்யம் (9-3). ''அஸ்ய த$_4$ர்மஸ்ய' என்றானிறே, தனக்கும்

இனிதாயிருக்கையாலே – செய்த குற்றங்களடையப் பொறுத்துத் தங்களை நல்வழிப்போக்கும் என்னைவிட்டு தந்தாமுடைய விநாஶத்தை ஆழ்ப்பதான ஸம்ஸாரத்தை விரும்பி அவ்வழியே போகா நிற்பர்கள்" என்று நம்பிள்ளை ஈடு (1-7).

பக்தியோகம், அநுஷ்டிக்கும் காலத்தில் பரம போக்யமாயிருக்கும். பக்திக்கு விஷயமான புருஷோத்தமனை ஸ்மரிப்பதில் மேலான இன்பத்தை பக்தன் அடைகிறான். எப்போதும் நாள் திங்கள் ஆண்டு ஊழிஊழிதொறும் அப்போதைக்கப்போது ஆராவமுதம் பகவான். இனிய பழரஸத்தை விட்டுவிட்டு வேப்பிலைச் சாற்றை விரும்புகிறார்களே என்று கண்ணன் வியப்பதாகத் தோற்றுகிறது. பக்திக்கு விஷயமான தன் பெருமைகளை முதலிலே 4, 5 ஶ்லோகங்களில் சொல்லுகிறான். என்னால் இந்த உலகம் யாவும் வ்யாபிக்கப்பட்டிருக்கிறது. உயிர்கள் அனைத்தும் என்னிடமிருக்கின்றன. நானோ அவைகளில் இல்லை. அதாவது நம் ஶரீரம் நம் ஆத்மாவினால் தரிக்கப்பட்டிருக்கிறது. ஜீவன் வெளியேறினால் உடல் அழிகிறது. அதுபோல உலகிலுள்ள அனைத்து சேதநாசேதனங்களிலும் பகவான் அந்தர்யாமியாயிருந்து அவைகளைத் தரிக்கிறான். நான் அவைகளுக்கு ஆதாரமாயிருப்பது போல் அவைகள் எனக்கு ஆதாரமாயிருக்கவில்லை – லோகத்திலுள்ள வஸ்துக்களுடைய ஸத்தை ஸ்திதி அவனைப் பற்றியவை (ஈஶ்வராதீனம்); ஆனால் பகவான் அவைகளின் அதீனமன்று. உயிரற்ற பறவை ஆகாயத்தில் பறக்க முடியாது. அதுபோல் காற்று ஆகாயத்தில் பகவத் ஸங்கல்பமின்றி ஸஞ்சரிக்க முடியாது. அப்படியே ஸகல ப்ராணிகளும் பகவத் ஸங்கல்பத்தாலேயே அவனை ஆதாரமாகப் பற்றியே தரித்திருக்கின்றன. தூண் உத்தரத்தை த₄ரிப்பதுபோலே எம்பெருமான் த₄ரிக்கிறானல்லன். அவனது கேவல ஸங்கல்பத்தாலேயே (நினைவாலேயே) சேதநாசேதனங்களைத் த₄ரிக்கிறான்.

ஆக இவ்விரண்டு ஶ்லோகங்களாலே வஸ்துக்களால் அறியப்படாமலே அவற்றை எம்பெருமான் வ்யாபித்திருக்கிறான் என்றும், எல்லாவற்றையும் த₄ரிப்பவனாய், நியமிப்பவனாய், படைப்பவனாய், அனைத்துக்கும் ஶரீரியாய், ஶேஷியாயிருக்கிறான் என்றும், தன் ஸங்கல்பத்தாலேயே ஸ்ருஷ்டி ஸ்திதி நியமங்களைச் செய்கிறான் என்றும், மற்ற எப்பொருட்கும் இப்பெருமைகள் கிடையா என்றும் சொல்லப்பட்டதாயிற்று. மேலே மநுஷ்யத்வே பரத்வம் உபபாதிக்கப்படுகிறது.

**அவஜாநந்தி மாம் மூட₄ா: மாநுஷீம் தநுமாஶ்ரிதம்|**
**பரம் ப₄ாவம் அஜாநந்தோ மம பூ₄த மஹேஶ்வரம்|| (9-11)**

(அறிவில்லாத மூடர்கள் எனது ஸர்வேஶ்வரத் தன்மையை அறியாமல், என் மனித ஶரீரத்தையே பார்த்து என்னை அவமதிக்கிறார்கள்)

அர்ஜுநா! எல்லா உயிரினங்களும் கல்ப முடிவில் என் மூலப்ரக்ருதியை வந்தடைகின்றன. மறுபடி மூலப்ரக்ருதியிலிருந்தே என் ஸங்கல்பத்தினால் மனிதன், ஊர்வன, தாவரம் போன்ற விசித்ர வஸ்துக்கள் நிறைந்த உலகாக நான் ஸ்ருஷ்டிக்கிறேன். 'பூத' ஶப்தம் 'பூ$_4$-ஸத்தாயாம்' என்ற த$_4$ாதுவின்படி ஸத்தையுடைய எல்லாப் பொருள்களையும் குறிக்கும். பூதங்களுக்கெல்லாம் பெரிய ஈஶ்வரன் பூ$_4$தமஹேஶ்வரனாகிறான். வெறும் மஹேஶ்வர ஶப்தமிருந்தால் சிவனைக் குறிப்பதாக சிலர் மயங்கக் கூடுமாகையால் 'பூ$_4$தமஹேஶ்வரம்' என்கிறான். மனித உருவைப் போன்ற உருவோடு பிறந்திருக்கும் என்னை, தங்களுடைய பாப கர்மங்களாலே அறிவிலிகள் ப்ராக்ருத மனிதர்களோடு ஒத்தவனாக நினைக்கிறார்கள். அபரிமிதமான சீலம், வாத்ஸல்யம், கருணை முதலான கொண்டாடத்தக்க குணங்களுடன் மனிதன்போல் நடந்துகொள்வது பரத்வத்தின் அடையாளம். பரத்வத்தோடு கூடிய எனது இந்த ஸௌலப்யம் எனக்கு சிறப்பையேயளிப்பது என்றறியாமல் பாமரர்கள் என்னை பரிபவப்படுத்த பார்க்கின்றனர். 'பிதா புத்ரேண பித்ருமாந் யோநியோநௌ நாவேத$_3$ விந்மநுதே தம் ப்$_3$ருஹந்தம்' (அனைத்துலகுக்கும் தந்தையாயிருப்பவன் தன் பிள்ளைகளில் ஒருவனைத் தந்தையாகக் கொண்டு ஒவ்வொரு யோனியிலும் பிறக்கிறான். வேதமறியாதவன் அவனே பரமாத்மா என்றறியமாட்டான்) எனும் வேதவாக்யத்தின் பொருள் இந்த ஶ்லோகத்தால் விவரிக்கப்பட்டது.

இப்படி மூடர்கள் நிறைந்த உலகில் நீ ஏன் தோன்றுகிறாய்? என்ன, அர்ஜுநா! அக்ரூரர், விதுரர், மாலாகாரர் போன்ற சில மஹாத்மாக்கள், பல பிறவிகளின் புண்ணிய பலனாக ரஜஸ்தமோ குணமடங்கி ஸத்வம் மேலிட்டு என் ஜகத்காரணத்வம், ரக்ஷகத்வம் முதலானவற்றையறிந்து என்னிடம் பக்தியைச் செய்கிறார்கள். அவர்களுக்காகவே நான் அவதரிக்கிறேன்.

**ஸததம் கீர்த்தயந்தோ மாம் யதந்தபஶ்ச த்$_3$ருட$_3$வ்ரதா:|**
**நமஶ்யந்தஶ்ச மாம் ப$_4$க்த்யா நித்ய யுக்தா உபாஸதே|| (9-14)**

(பக்தியினால் எப்போதும் என் திருநாமங்களைச் சொல்லிக்கொண்டும், உறுதியான மனத்துடன் என்னை உகப்பிக்கும் அர்ச்சனம் முதலிய செயல்களில் ஈடுபட்டும், எனக்கு வழிபாடு வணக்கங்களைச் செய்துகொண்டும், என்னுடன் எப்போதும் சேர்ந்திருப்பதை விரும்புகிறவர்களாய் அவர்கள் திகழ்கிறார்கள்.)

இதில் மஹாத்மாக்களின் பெருமை பேசப்படுகிறது. பக்தியாலே என்னை மிகவும் இனியவனாகக் காண்கையாலே, 'த்ருடி யுக$_3$ாயதே த்வாமபஶ்யதாம்' (பாகவதம் கோபிகா கீதம்) - உன்னைக் காணாவிடில் ஒரு கணம் ஒரு யுகமாகிறது; 'ஒரு பகல் ஆயிரம் ஊழியாலோ' (திருவாய். 10-3-1) என்கிறபடியே சிறிது நேரங்கூட தம் ஸ்வரூபம்

த$_4$ரிக்கப்பெறாதவர்களாய் கீர்த்தனம் முதலானவற்றைச் செய்கிறார்கள். என்னுடைய ஸ்வரூப ரூப குண விபூதி சேஷ்டிதங்களைச் சொல்லும் திருநாமங்களை நினைத்து ஸர்வாவயவங்களிலும் மயிர்க்கூச்செரியப் பெற்றவர்களாய், ஆனந்தத்தாலே தழுதழுத்த குரலை உடையவர்களாய், பரத்வ ஸௌலப்யங்களைச் சொல்லும் திருநாமங்களையும், அத்திருநாமங்களின் *ஶ*ப்$_3$த$_3$மாத்ரமே இனியதாய் அவற்றை திருப்பித்திருப்பி சொல்வதே யாத்ரையா யிருக்கிறார்கள்.

மத்$_3$ப$_4$க்தஜந வாத்ஸல்யம் பூஜாயாஞ் சாநுமோத$_3$நம்| ஸ்வயமப்$_4$யர்ச்ச நஞ்சைவ மத$_3$ர்த்தே$_2$ ட$_3$ம்ப$_4$வர்ஜநம்|| மத்கத$_2$ா *ஶ்*ரவணே ப$_4$க்தி: ஸ்வரநேத்ராங்க$_3$ விக்ரியா| மமாநுஸ்மரணம் நித்யம் யச்சமாம் நோபஜீவதி| ப$_4$க்திரஷ்டவித$_3$ா ஹ்யேஷா யஸ்மிந் ம்லேச்சே஽பிவர்த்ததே| ... தஸ்மை தே$_3$யம் ததோ க்$_3$ராஹ்யம் ஸச பூஜ்யோ யத$_3$ாஹ்யகம்| (காருடம்) (என் பக்தர்களிடம் வாத்ஸல்யம், என்னை ஆராதனம் செய்வதை ஆமோதித்தல், தானே என்னை பூஜித்தல், என் விஷயத்தில் ஆடம்பரமற்றிருத்தல், என் கதைகளைக் கேட்பதில் அன்பு, கேட்கும்போது கண்ணீர் மல்கியும் மயிர்க்கூச்செறிந்து கொண்டுமிருக்கை, எப்போதும் என்னை நினைத்திருக்கை, என்னிடம் வேறு ஒரு ப்ரயோஜனத்தையும் கேளாதிருக்கை எனும் எட்டுவிதமான பக்தி எவனிடம் காணப்படுகிறதோ அவனுக்கு ஞானத்தை உபதே*ஶி*க்கலாம், அவனிடமிருந்து ஞானத்தைப் பெறலாம். அவன் என்னைப்போல் பூஜிக்கத் தக்கவன்). ஆஹ்லாத$_3$ *ஶீ*தநேத்ராம்பு$_3$: புளகீக்ருத க$_3$ாத்ரவாந்| ஸத$_3$ா பரகு$_3$ணாவிஷ்ட: த்$_3$ரஷ்டவ்ய: ஸர்வதேஹிபி:|| (வி.தத்.) (ஆனந்தக் கண்ணீருடன் மயிர்க்கூச்செறியப் பெற்றவனாய் எம்பெருமானுடைய குணங்களால் ஆட்கொள்ளப்பட்ட பக்தன் எல்லோராலும் காணத்தக்கவன்) 'உள்ளஞ்சோர உகந்தெதிர்விம்மி உரோம கூபங்களாய், கண்ணநீர்கள் துள்ளம்சோரத் துயிலணை கொள்ளேன்' 'காலுமெழா கண்ண நீரும் நில்லா உடல் சோர்ந்து நடுங்கி குரல் மேலுமெழா மயிர்க்கூச்சுமறா என தோள்களும் வீழ்வொழியா மாலுகளா நிற்கும் என் மனனே' 'உள்ளெலா முருகிக் குரல் தழுத்தொழிந்தேன் உடம்பெலாம் கண்ணநீர் சோர நள்ளிருளளவும் பகலும் நானழைப்பன் நாராயண வென்னும் நாமம்' 'எம்மானைச் சொல்லிப்பாடி எழுந்தும் பரந்தும் துள்ளாதார் தம்மாற்கருமமென்' 'உள்ளம் குழைந்து எழுந்தாடிப் பெருமையும் நாணும் தவிர்ந்து பிதற்றுமின் பேதமை தீர்ந்தே' முதலான ஆழ்வார் அருளிச்செயல்களும் இங்கு அநுஸந்திக்கத் தக்கன.

த்$_3$ருட வ்ரதா: மோக்ஷத்தையடைவதே இவர்கள் குறிக்கோளாகையாலே ஸாதனாநுஷ்டானத்தில் எக்காலத்தும் தளராதவர்கள். ப$_4$க்த்யா ஸததம் மாம் உபாஸதே – 'தாஸபூதா: ஸ்வத: ஸர்வே ஹ்யாத்மந: பரமாத்மந:' (எல்லா ஆத்மாக்களும் பரமாத்மாவிற்கு இயற்கையிலேயே அடிமைப்பட்டவர்கள்) என்கிறபடி யாவதாத்மபாவி பரம புருஷார்த்தமான

தாஸ்யத்தில் விருப்பமுடையவர்களாய் அதைப் பெறுதற்கு ஸாதனமாக பக்தியோகத்தைச் செய்கிறார்கள். இப்படியாக மஹாத்மாக்களின் பெருமை பேசப்பட்டது.

மஹாத்மாக்களின் பெருமையை மேலும் தொடர்கிறான்.

**அநந்யாஶ் சிந்தயந்தோ மாம் யே ஜநா: பர்யுபாஸதே|**
**தேஷாம் நித்யாபி$_4$யுக்தாநாம் யோக$_3$ க்ஷேமம் வஹாம்யஹம்| (9-22)**

(என்னை நினைப்பது தவிர வேறுபயன் இல்லாதவர்களாய், என்னை நினைப்பவர்களாய், எந்த மஹாத்மாக்கள் (எல்லாக் கல்யாண குணங்களோடும் எல்லா விபூதிகளோடும்) முழுமையாக உபாஸிக்கிறார்களோ, என்னோடு எப்போதும் சேர்ந்திருக்கையை விரும்புமவர்களுக்கு நான் (என்னை அடைவதாகிற) யோகத்தையும், (மீண்டும் ஸம்ஸாரத்துக்கு திரும்பி வராமையாகிற) க்ஷேமத்தையும் அளிக்கிறேன்.)

அவர்கள் என்னை நினைப்பதாகிற பக்தியை பரம ப்ரயோஜநமாகக் கொண்டவர்கள்; மற்ற ப்ரயோஜநமெதையும் நினையாதவர்கள். அதாவது தங்கள் பக்தியையும் மோக்ஷத்திற்கு ஸாத$_4$மாக நினையாமல், அதையே ஸ்வயம் ப்ரயோஜநமாக நினைக்கும் ஸித்தோபாய நிஷ்டர்கள். அநந்ய *ஶ*ப்தத்தால் வி*ஶே*ஷிக்கப்பட்டிருக்கையால், சிந்தனமாகிற பக்தி, அவனைத் தவிர வேறொன்றை பயனாகக் கொள்ளமுடியாதபடி ஒப்பற்ற ஸுகரூபமானது என்று தேறுகிறது.

இதனால் இவர்கள் பெரும் பயனோ எல்லையற்ற ஆனந்த ஸ்வரூபனான என்னையனுபவித்தல். இவ்வநுபவமே நித்யவிபூதியிலும் கிடைப்பதொன்றாகையாலே, உபாய த*ஶை*யோடு ப$_2$லத*ஶை*யோடு வாசியற என்னையே அநுபவிக்கும் பெருமை பெற்ற மஹாத்மாக்கள். யே ஜநா: - ஜந *ஶ*ப்தம் ஜனனமடையும் அனைவரையும் சொல்லாமல், ஜன்ம ஸாப$_2$ல்யமாகிற பிறவிப்பயன் பெற்றவர்களையே சொல்லும். 'அன்று நான் பிறந்திலேன் பிறந்தபின் மறந்திலேன்' என்பவர்கள்.

யே மாம் பர்யுபாஸதே - பரித: உபாஸதே, பர்யுபாஸதே - பரிபூர்ணமாக உபாஸிக்கிறார்களோ. அதாவது எல்லா கல்யாணகுணங்களோடு கூடியவனாகவும், எல்லா செல்வங்களும் நிறைந்த உபயவிபூதிநாதனாகவும் என்னை உபாஸிக்கிறார்களோ.

நித்யாபி$_4$ யுக்தாநாம் தேஷாம் - என்னோடு எப்போதும் சேர்ந்திருக்கையை விரும்பும் அவர்களுக்கு, அஹம் - ஔதார்ய ஸௌ*ஶீ*ல்ய ஸௌலப்ய வாத்ஸல்ய ஸ்வாமித்வ ஜ்ஞான *ஶ*க்தி முதலான குணங்களையுடைய நான். யோக க்ஷேமம் வஹாமி - என்னை அடைவதாகிற யோகத்தையும், மறுபடியும் என்னைப் பிரிந்து ஸம்ஸாரத்துக்கு திரும்பி வராமையாகிற க்ஷேமத்தையும், வஹாமி அளிக்கிறேன். இங்கு யோக க்ஷேமம் என்பதற்கு

ஸ்வாமியின் பாஷ்யம்: யோக: – மத்ப்ராப்தி லக்ஷண யோகம்; க்ஷேமம் – அபுநராவ்ருத்தி ரூபம் க்ஷேமஞ்ச வஹாமி. கிடையாதது கிடைப்பது யோகம். கிடைத்தது நிலைநிற்பது க்ஷேமம். எம்பெருமானையே பயனாகக்கொண்ட மஹாத்மாக்களைப் பற்றிப் பேசும் ப்ரகரணமாகையாலே எம்பெருமானையடைவது அவர்களுக்கு யோகமாகிறது. ஸம்ஸாரத்துக்கு திரும்பி வந்துவிட்டால் அந்த யோகம் அஸ்திரமாகி விடுமாகையாலே, அப்படி திரும்பி வராமலிருக்கச்செய்வது க்ஷேமமாகிறது. ஆகையால் யோக க்ஷேமம் என்பதற்கு இவ்வுலகப் பலன்கள் கிடைப்பதையும் அவற்றை நிலைப்பெறச்செய்வதையும் பொருளாகக் கொள்வது பொருந்தாது. ஆநுஷங்கிமாக, இவ்வுலகப் பலன்களை எம்பெருமான் அளித்தானாகிலும் இவர்கள் அவற்றை ப்ராப்யமாகக் கருதாரன்றோ. அஹம் வஹாமி – தானே தன் பேறாகத் தன்னை அடைவித்து நித்யமான ப்ரஹ்மானந்தத்தை யளிக்கிறான் என்றதாயிற்று.

இத்தகைய மஹாத்மாக்களின் திருவுள்ளத்தையன்றோ ஸர்வேஶ்வரன் தனக்கு அஸாதாரண கோயிலாக அங்கீகரிப்பது. தடவரைவாய் இத்யாதி – 'அதனில் பெரிய என் அவா' என்று ஆழ்வாருக்கு பகவத்விஷயத்தில் பிறந்த அபிநிவேஶமெல்லாம், இப்பெரியாழ்வார் பக்கலிலே ஈஶ்வரனுக்குப் பிறந்தபடி இத்திருமொழி. ஈஶ்வரனுடைய 'முனியே நான்முகன்'. விட்டு சித்தன் மனத்தே கோயில் கொண்ட கோவலன் – திருப்பல்லாண்டு தொடங்கி இவ்வளவும் இவர் திருவுள்ளத்திலேயிருக்கிற க்ருஷ்ணன், தான் பிறந்தபடியையும் வளர்ந்தபடியையும் இவரைக் கொண்டு கேட்டபடி. க்ருஷ்ணன் கோயில் பெரியாழ்வார் திருவுள்ளமாய்த்து. ஆகையிறே 'மெய்ம்மைப் பெருவார்த்தை விட்டுசித்தர் கேட்டிருப்பர்' என்றது. உள்ளிருப்போர் சொல்லும் வார்த்தை உடனிருப்பார்க்குத் தெரியுமிறே.

(இங்கு 'அநந்யாஶ் சிந்தயந்தோ மாம்' என்றவிடத்து சங்கர ப$_4$ாஷ்யம் – 'பரம் தேவம் நாராயணம் யே பர்யுபாஸதே, தேஷாம் பரமார்த்த தர்ஶிநாம்' – என்று பரதேவதையான நாராயணனை உபாஸிப்பவர்களே பரமார்த்தம் கண்டவர்கள் என்றுள்ளது.)

**அஹம்ஹி ஸர்வ யஜ்ஞாநாம் பே$_4$ாக்தா ச ப்ரபு$_4$ரேவச|**
**ந து மாம் அபி$_4$ஜாநந்தி தத்த்வேந அதஶ் ச்யவந்தி தே|| (9-24)**

(நானேயன்றோ எல்லா யாகங்களையும் அநுபவிக்கிறவன். அவைகளுக்கு பலனை அளிப்பவனும் நானே. ஆனால் அவர்கள் என்னை அறிகிறார்களில்லை; ஆகையால் அவர்கள் என்னை அடைகிறார்களில்லை.)

கேவல பூர்வப$_3$ாக$_3$ நிஷ்டர்கள், 'நாம் செய்யும் கர்மங்கள் இந்த்$_3$ராதி$_3$ தே$_3$வதைகளுக்கு அந்தர்யாமியான பரமபுருஷனுக்கு ஆராதனமாயிருப்பவை; இவற்றால் ஆராதிக்கப்படுபவனும் அப்பரம புருஷனே' என்றறியாமல் கர்மங்களை (யாகங்களை)ச்

செய்து அல்பாஸ்தி$_2$ர பலன்களையடைகிறார்கள். ஆகையால் அநந்த ஸ்$_2$திர பலனான மோக்ஷத்தினின்று நழுவுகின்றனர். நானேயன்றோ இந்த்ரன் முதலானாரைக் குறித்து பூர்வ பாகங்களில் விதிக்கப்படும் எல்லா யாகங்களையும் அநுபவிப்பவன். போக்தா – அந்த யாகங்களால் உண்மையில் ஆராதிக்கப்படுபவன் இந்த்ராதிகளுக்கு அந்தர்யாமியான நானே யாகையால், நானே அவற்றை அநுபவிப்பவன். அஹமேவஹி ப்ரபு: ச – நானேயன்றோ அந்த எல்லா யாகங்களுக்கும் பலனளிப்பவனாயிருப்பதன் மூலம் ப்ரபுவாயுமிருப்பவன். எத்தவம் செய்தார்க்கும் அருள் முடிவது ஆழியான் பால் – ப$_2$லப்ரதன் அவனே. ஆக, தேவதாந்தரங்களைக் குறித்த யாகங்கள் உண்மையில் பரமபுருஷனுக்கு ஆராதனமாயிருக்கின்றன என்றறிந்தவர்களுக்கு மோக்ஷ பலனும், அப்படி யறியாதவர்களுக்கு அல்பாஸ்தி$_2$ர பலன்களும் கிடைக்கும் என்றதாயிற்று. அநந்ய ப்ரயோஜனர்க்கு நேர்த்தி அல்பமாய் ப$_2$லம் அதிகமாயிருக்கும். ப்ரயோஜநாந்தரபரர்க்கு நேர்த்தி அதிகமாய் ப$_2$லம் அல்பமாயிருக்கும்.

கீழே ஸங்கல்பத்தின் வேறுபாட்டாலே பலன்கள் வேறுபட்டிருப்பதைக் காட்டினான். அடுத்து 'என்னை ஆராதிப்பதற்கு யஜ்ஞம் முதலான பெரிய முயற்சிகளைச் செய்யவேண்டா – நான் ஆராதனைக்கு மிக எளியன்' என்று காட்டுகிறான்.

**பத்ரம் புஷ்பம் ப$_2$லம் தோயம் யோ மே ப$_4$க்த்யா ப்ரயச்ச$_2$தி|**
**தத$_3$ஹம் ப$_4$க்த்யுபஹ்ருதம் அச்நாமி ப்ரயதாத்மந:|| (9-26)**

(எவனொருவன் பக்தியுடன் எனக்கு ஒரு துளசி இலையோ, ஏதோ ஒருமலரையோ, கையில் கிடைக்கும் கனியையோ, அல்லது எளிதில் கிடைக்கும் நீரையோ ஸமர்ப்பிக்கிறானோ, பக்தியுடன் அவன் தரும் அப்பொருளை நான் மிகுந்த உகப்போடு ஏற்றுக்கொள்கிறேன்.)

பகவான் அவாப்த ஸமஸ்த காமன். அன்னவன் குறையுற்றிருந்து நாமிட்டது கொண்டு பூர்த்தியடைகிறானென்பது அஸம்பாவிதம். கடலிலே மேகம் வர்ஷிப்பது கடல் நிரம்புவதற்காக வன்றே. மேகம் தான் ஸத்தை பெறுவதற்கே கடலிலும் வர்ஷிக்கிறது. அதுபோலே ஸ்வத: பரிபூர்ணனான அவன் திறத்தில் நாம் சில பொருள்களை ஸமர்ப்பிப்பது நமது ஸ்வரூபம் நிறம் பெறுவதற்கேயன்றி அவனை நிரப்புவதற்கன்று. 'கள்ளார் துழாயும் கணவலரும் கூவிளையும் முள்ளார் முளரியும் ஆம்பலும் கண்டக்கால், புள்ளாயோர் ஏனமாய் புக்கிடந்தான் பொன்னடிக்கென்று, உள்ளாதார் உள்ளத்தை உள்ளமாக் கொள்ளோமே.' 'செண்பக மல்லிகையோடு செங்கழுநீர் இருவாட்சி' என்று சிறந்த புஷ்பங்களாகவே யிருக்கவேணுமெனும் நியதியில்லை. ஏதேனுமொரு புஷ்பமாயிருக்கலாம். பக்திப் பொருங்காதலே முக்யம்.

பத்ரம் புஷ்பம் பலம் தோயம் – ஏதேனும் ஒன்று போதும் என்றுணர்த்துகிறான். ஆபிமுக்யம் பண்ணி உஜ்ஜீவிப்பதொழிய அவனுக்கு நாம் செய்யவேண்டுவதொன்றில்லை. ஆபிமுக்ய ஸந்துஷ்டனிறே. பாண்டவ பக்ஷபாதியான க்ருஷ்ணன் வருகிறான்; அவனுக்கு பொன்னும் பொருளும் கொடுத்து நம் வசமாக்கிக் கொள்வோம் என்றான் த்ருதராஷ்ட்ரன். 'அவனது படையை நாம் கொள்வோம்' என்று நெஞ்சால் நினைப்பதொன்றாய், வாயால் பேசுவதொன்றாய் வார்த்தை சொன்னான். இதையறிந்த ஸஞ்ஜயன் சொல்கிறான்: அந்யத் பூர்ணாத்$_3$ அபாம் கும்ப$_4$ாத் அந்யத் பாத$_3$ாவநே ஜநாத்| அந்யத் குஶலஸம் ப்ரஶ்நாத் நசேச்ச$_2$தி ஜநார்த்தந:|| வருபவன் அப்படிப்பட்டவனல்லன் காண். அவனுக்கு வேண்டுவது இவ்வளவே. அதிதி ஒருவன் க்ருஹத்துக்கு வந்தால் கால் அலம்பவேணுமிறே. அவனுக்கு என்ற நினைவின்றிக்கே, உமக்காக கால் அலம்பவைத்த குடநீரில் ஒருதுளி அவன் காலில் தெளித்து நாட்டார் வினவுமா போலே 'நன்றாயிருக்கிறீரோ' என்று வாய்கேட்ட மாத்ரத்திலே வயிறு நிறைபவன். அதுக்கு மேற்பட அவனான வாசிக்கு விஶேஷித்துச் செய்யவேண்டுவ தொன்றில்லை. நசேச்ச$_2$தி – உண்டவனுக்கு உண்ணப்போகாதிறே. உம் உத்யோகத்திலே வயிறு நிறையும்; பின்பு செய்யுமவை யாவும் மிகை (ஈடு 9-1-5).

இன்ன இலை, இன்ன பூ, இன்ன பழம் என்று விஶேஷியாமையாலே இவனுக்கு ஆகாதது இல்லை; கிடைப்பதை இடலாம். 'புரிவதும் புகை பூவே' (திருவாய் 1.6.1) – 'கூளத்தையிட்டுப் புகைத்தாலும் போதும்; கண்டங்கத்திரிப் பூவை இட்டாலும் போதும்' என்று பட்டர் அருளிச்செய்ய, 'ந கண்டகாலிகா புஷ்பம் தேவாய விநிவேதயேத்' (கண்டங்கத்திப் பூவை எம்பெருமானுக்கு ஸமர்ப்பிக்காதே) என்று ஶாஸ்த்ரம் நிஷேதித்திருக்கிறதே' என்று நஞ்ஜீயர் கேட்க, 'எம்பெருமானுக்கு ஆகாது என்னும் நினைவினால் தள்ளிற்றல்ல; பறிக்கிற அடியவர் கையில் முள் குத்தும் எனும் காரணத்தால் ஶாஸ்த்ரம் தவிர்த்தது' என்றருளிச்செய்தார்.

இன்னான் என்று கூறாமல் ய: எவனொருவன் என்று பொதுப்படையாகக் கூறியுள்ளதால் குற்றமுள்ளவன் குற்றமற்றவன், அறிவிலி அறிவாளி என்று வாசி பார்ப்பதில்லை; யாரேனும் ஸமர்ப்பித்து ஆஶ்ரயிக்கலாம். து$_3$ர்வாஸர் ஶிஷ்யர்களோடு வந்த ஸமயத்தில் த்ரௌபதி இவனுக்கு ஒரு கீரை இலையை இட்டாள். கோதை சூடிக்களைந்த மாலையைத் தந்தாள். மாலாகாரர் மாலையைத் தந்தார். கஜேந்த்ரன் பூவையிட்டான். குயவன் குறும்பறுத்த நம்பி மண்பூவையிட்டான். வேடுவிச்சி சபரி கனியைத் தந்தாள். விதுரர் ஸம்யக்$_3$ பே$_4$ாஜனம் செய்தார். பரத்வாஜர் விருந்திட்டார். த$_3$ரித்$_3$ரனான குசேலன் அவலைத் தந்தான். அப்ராக்ருத த்ரவ்யம் வேணும் என்று இருந்தானாகில் ஶ்ரீவைகுண்டத்தில் இரானோ!

யோ மே ப$_4$க்த்யா ப்ரயச்சதி – எவனொருவன் எனக்கு அன்புடன் அளிக்கிறானோ. இடும் த்ரவ்யத்தைப் பார்ப்பதில்லை; இடுபவன் என்ன ஜன்மம், ஜாதியென்று பார்ப்பதில்லை.

இடுபவன் நெஞ்சில் ஈரத்தையே பார்க்கிறேன். ஸ்நேஹம் ப்ராதாந்யம். ஸ்நேஹமில்லாவிடில் திருத்துழாயும் ஆகாது. ஸ்நேஹத்தோடே இடில் அலரியும் தகும். 'அண்வப்யுபஹ்ருதம் ப$_4$க்தை: ப்ரேம்ணா பூ$_4$ர்யேவ மே ப$_4$வேத்| பூ$_4$ர்யப்ய ப$_4$க்தோபஹ்ருதம் ந மே தோஷாய ஜாயதே|| (பாகவதம்) – என் பக்தர்கள் ஸமர்ப்பிப்பது அணுவானாலும் அவர்கள் அன்பைக் காணும்போது அது எனக்கு மிகப்பெரிதாய் படுகிறது. பக்தியற்றோர் பெரியதையிட்டாலும் எனக்கு அது த்ருப்தியளிப்பதில்லை.

ஆக, இச்சுலோகத்தால், பகவத் ஆ*ஶ்*ரயணம் ஸுகரம்; தேவதாந்தர ஆ*ஶ்*ரயணம் துஷ்கரம். 'ஆடு கொடு, கோழி கொடு' என்று தம் அடியார்களிடம் தகாத செயல்களைக் கண்டுகக்கும் தேவதாந்ரங்களைப் போலல்லாமல், எம்பெருமானுடைய **ஸ்வாராதத்வம்** (ஆராதனைக்கு எளியனாயிருக்கும் தன்மை) விளக்கப்பட்டது.

ப$_2$லம் தரும்போதும் பி*ஶா*சத்துக்கு மோக்ஷம், பக்ஷிக்கு மோக்ஷம், கஜேந்திரனுக்கு மோக்ஷம் என்றிருப்பது எம்பிரான் பக்கலிலே. 'நீ தந்த நித்யத்வம் (என்றும் பதினாறாக நெடுங்காலம் வாழவைத்தது) எனக்குக் கழுத்துக் கட்டியாயிற்று' என்று மார்க்கண்டேயன் சிவனை வளைக்க, மோக்ஷப்ரதன் கையிலே காட்டிக்கொடுத்து நழுவினானிறே. ருத்ரனை ஆ*ஶ்*ரயித்து வாணன் பட்டபாடு அத்தேவர்களே அறியுமத்தனை. தன்னை ஆ*ஶ்*ரயித்தவனை ஒருவன் இப்படி கைவிட்டுப் போவதே என்று லஜ்ஜித்து க்ருபையுடன் வாணனை உயிரோடு இரண்டு கைகளோடு போகவிட்டான். இத்தால் தேவதாந்தரங்கள் ரக்ஷகரனாலும் ஆபத்துக்கு உதவார்கள்; ஈ*ஶ்*வரன் முனிந்த த*லை*யிலும் ஆபத்ஸகன் – 'க்ருபயா பர்ய பாலயத்' திக்கற்ற காகத்தையும் ரக்ஷித்தவனிறே.

சைவ ஆகமங்களிலும், தாமஸ புராணங்களிலும் சிவனுக்கு பரத்வம் பேசப்படுகிறதேயென்னில் – நிர்த்தோஷ ப்ரமாணமான *ஶ்*ருதியில் அவனை க்ஷேத்ரஜ்ஞனாக (ஜீவனாக)ச் சொல்லுகையாலே, வடயக்ஷ ப்ரஸித்திபோல் (ஆலமரத்தில் பிசாசு என்று ஜனங்களிடையே ப்ரஸித்திபெற்ற வழக்கு போல்) அயத$_2$ார்த்தம் (பொய்யானது); வஞ்சிக்கச் சொல்லும் வார்த்தை.

நாம் எதைச் செய்தாலும் க்ருஷ்ணார்ப்பணம் என்று சொல்லிச் செய்யவேணுமென்கிறான்.

**யத் கரோஷி யத$_3$*ஶ்*நாஸி யஜ்ஜுஹோஷி த$_3$த$_3$ாஸியத்|**
**யத் தபஸ்யஸி கௌந்தேய தத் குருஷ்வ மத$_3$ர்ப்பணம்|| (9-27)**

(குந்தீபுத்ரனே! நீ எதைச் செய்தாலும், எதை உண்டாலும், மற்று ஹோமம் தானம் தபஸ் தர்மம் எவையாயினும் அவை எல்லாவற்றையும் எனக்கு அர்ப்பணம் செய்துவிடு.)

நீ செய்யும் லௌகிக செயல்களையும், ஸந்தி ஜபம் தவம் தானம் நித்யநைமித்திக கர்மங்கள் எனும் வைதிக கார்யங்களையும், அதன் பயன்களையும் 'ஸர்வம் ஸ்ரீக்ருஷ்ணார்ப்பணம்' என்று சொல்லி எனக்கு ஸமர்ப்பித்து விடு.

நாம் செய்பவை யாவும் பகவானால் நமக்களிக்கப்பட்ட ஜ்ஞானம், *ஶ*க்தியைக் கொண்டு பொறிபுலன்களால் செய்கிறோம். நாம் முன் காலை எடுத்து வைத்து, பின் காலை எடுத்து நடப்பதும் அவன் ஸங்கல்பத்தினாலேயே; நாமாக எதையும் செய்கிறோமென்பதில்லை. ஸ்ருஷ்டிக்கும்போது நல்வழிபோக உபகரணங்களை கொடுக்கையால், இவன்தலையால் பிறந்த நன்மைக்கும் அடி அவனாயிருக்கும். பசுவுக்கு புல்லிட்டால் முகம்பார்த்து தின்னும். குரங்குக்கு பழம் நாமே கொடுத்தாலும் தன் ஸாமர்த்யத்தாலே அபஹரித்ததாய் உறுமிக்கொண்டு பறிக்கும். அங்ஙனே ஈ*ஶ்*வரன் க்ருபையாலே கொடுத்ததை தன்னாலே வந்ததாக எண்ணுவது தண்ணிது. ஆதலால் நம் எல்லாச் செயல்களுக்கும் காரணம் அவனே, அச்செயல்களின் பலனும் அவனைச் சேர்ந்ததே யென்றறிந்து அவைகளை அவனுக்கே ஒப்படைத்தல் தகும். காயேந வாசா மநஸேந்த்$_3$ரியைர்வா பு$_3$த்$_3$த்$_4$யாSSத்மநா வா ப்ரக்ருதே: ஸ்வப$_4$ாவாத்| கரோமி யத்$_3$யத் ஸகலம் பரஸ்மை நாராயணாயேதி ஸமர்ப்பயாமி|| என்று அனைவரும் அநுஸந்திக்கும் *ஶ்*லோகமே இங்கு கருதப்படுகிறதென்னலாம். ஆனால் அநுபவத்தில் நாம் பார்ப்பது – வரவேண்டிய பொருள் வராமற்போனால் 'க்ருஷ்ணார்ப்பணம்' என்கிறோம்.

**ஸமோஹம் ஸர்பூ$_4$தேஷு ந மே த்$_3$வேஷ்யோSஸ்தி ந ப்ரிய:|**
**யே ப$_4$ஜந்தி து மாம் ப$_4$க்த்யா மயி தே தேஷு சாப்யஹம்|| (9-29)**

(நான் எல்லா ஜீவராஶிகளிடத்தும் (என்னை ஆ*ஶ்*ரயிக்கும் விஷயத்தில்) ஸமமாயிருப்பவன். தாழ்ந்தவன் என்பதால் ஆ*ஶ்*ரயிக்கத் தகாதவன், உயர்ந்தவன் என்பதால் ஆ*ஶ்*ரயிக்கத் தக்கவன் என்று எவனுமில்லை. எவர்கள் என்னிடம் பக்தியையே பயனாகக் கொண்டு அன்பு செய்கிறார்களோ அவர்கள் என்னிடத்தில் இருக்கிறார்கள். நானும் அவர்களிடத்தில் இருக்கிறேன்.)

**'ஆ*ஶ்*ரயணீயத்வே ஸமன்'** என்று ஸ்வாமியின் பாஷ்யம். எனக்கு எல்லோரும் ஸமம். ஒருவன் எனக்கு நண்பன், மற்றவன் பகைவன் என்பதில்லை. ஒருவரிடம் விருப்பமோ மற்றொருவரிடம் வெறுப்போ எனக்குக் கிடையாது. தேவனோ, மனிதனோ, விலங்கோ, பறவையோ ஏதாயினும் பிறப்பாலும் உருவத்தினாலும் அறிவினாலும் அவர்களின் ஏற்றத்தாழ்வை நான் பார்ப்பதில்லை. ஒரு பயனையும் விரும்பாது என்னிடம் பக்தியைச் செய்பவர்களிடம் என் உயர்த்தி பாராமல் அவர்களோடு இணைந்து கலக்கிறேன்.

வேடனான குகனை சக்ரவர்த்தி திருமகன் 'என் தம்பி' என்று தழுவிக் கொண்டான். கஜேந்த்ரன் எனும் யானை, கோகுலத்தில் பசுக்கள், கிஷ்கிந்தையில் வானரம் இப்படி பல விலங்குகளிடம் ஒரு நீராகக் கலந்தான். அக்ரூரர், விதுரர், மாலாகாரர் என்று பலரிடமும் அவர்களின் பிறப்பு, ஜாதி, ஞானபக்திகளைப் பாராமல் தன்னை அன்புடன் பற்றியதே பற்றாசாக, தன் மேன்மை தோற்றாமல் பரிமாறினான்.

'தே$_3$வாநாம் த$_3$ாநவாநாம்ச ஸாமாந்ய மதி$_4$தைவதம்| ஸர்வத$_3$ா சரணத்$_3$வந்த்$_3$வம்' (தேவர்களுக்கும் அசுரர்களுக்கும் பொதுவாயிருக்கும் திருவடிகள்) என்று ஜிதந்தே. 'பொதுநின்ற பொன்னங்கழல்' என்று பேயாழ்வார் பாசுரம் (88). 'ஈடும் எடுப்புமில் ஈசன்' என்று ஆழ்வார் திருவாய்மொழி. 'ஈடு – இட்டுவைக்கை, எடுப்பு ஸ்வீகாரம். ஸம்பந்தம் ஸர்வ ஸாதாரணமாயிருக்கையாலே, சிலரை உபக்ஷேித்தல், சிலரை ஸ்வீகரித்தல் செய்யாத ஸர்வேச்வரன்' – என்று ஈடு (1-6-3). ஸம்பந்தம் ஒத்திருக்க, ஆஸுர ப்ரக்ருதிகட்கு இவனது கடாக்ஷம் அநர்த்தஹேதுவாகிறது அவர்களுடைய ப்ரக்ருதி தோஷத்தாலே. ஸர்வர்க்கும் அநுகூலமான தென்றல் தாமரையை உலர்த்துகிறதன்றோ.

உயர்ந்த ஜாதி கிடைப்பது புண்யத்தின் பலனன்றோ. அந்த சிறப்பினால் உனக்கு அவர்களிடம் ப்ரீதி ஏற்படுவதில்லையென்றால், உனக்கு ப்ரீதி எதனால் ஏற்படும்? 'ஸ ச மம ப்ரிய:' (7-7) என்று ஜ்ஞானியை உனக்கு மிகவும் ப்ரியனாகச் சொன்னாயே யெனில் – யேது மாம் ப$_4$க்த்யா ப$_4$ஜந்தி – தன்னிடம் பக்தியையே பயனாகக் கொண்ட மஹாத்மாக்களையே கண்ணன் திருவுள்ளத்தில் கொண்டிருக்கிறான் என்று தெரிகிறது. அவர்கள் என்னிடம் பிதா-புத்ர ஸம்பந்தம், ப$_4$ர்த்ரு-ப$_4$ார்யா ஸம்பந்தம் இவற்றை யறிந்தவர்களாகையாலே ஒருவரோடொருவர் கலந்து பரிமாறக் குறையில்லை என்பது கண்ணன் கருத்து.

அஹம் அபி – என்னிலும் உயர்ந்தவர்களிடத்திற் போலே பரிமாறுகிறேன். பட்டர் 'த்வயி கில ததமே த்வம் தேஷு ரங்கேந்த்ர! கிம் தத்?' (பக்தர்களிடம் கலந்து பரிமாறுவது யுக்தமே. ஆனால் உம்மைக் காட்டிலும் உயர்ந்தவர்களிடத்திற்போலே பரிமாறுவதாக (கீதையில்) அருளிச் செய்தீரே, அது எங்ஙனம்?) (ஸ்ரீர.ஸ்.உ.*ஶ*.86) என்று கேள்விகேட்டு நிறுத்தியுள்ளார். இதற்கு *ஸ்ரீரங்கநாதனே* விடை கூறவேணும். அவனது நீர்மை ஒருவர்க்கு நிலமல்ல என்று கொள்ளலாம்.

**அபிசேத் ஸுது$_3$ராசாரோ ப$_4$ஜதே மாம் அநந்ய$_4$பாக்|**
**ஸாது$_4$ரேவ ஸ மந்தவ்யஸ் ஸம்யக் வ்யவஸிதோ ஹி ஸ:|| (9-30)**

(ஆசாரத்தில் எத்தனை தாழ்ந்தவனாயினும் வேறு பயன் கருதாமல் என்னிடம் உறுதியோடு அன்பு செலுத்துகிறவன் என்னால் நன்கு மதிக்கப்பட்டவனாகிறான்.)

ஜாதி, ஸ்வபாவம், ஜ்ஞானம் ஆகியவற்றால் எத்தனை தாழ்ந்தவனாயினும், தன்னிடம் ஸ்வயம்ப்ரயோஜன பக்தியைச் செய்தானாகில், அவர்களிடம் தன்னைக் காட்டிலும் உயர்ந்தவர்களிடத்திற் போலே தான் பரிமாறுவதைக் காட்டினான் சென்ற ஶ்லோகத்தில். இந்த ஶ்லோகத்தில் ஒழுக்கத்தால் எத்தனை தாழ்ந்தவனாயினும் தன்னிடம் பக்தியையே பயனாகக் கொண்டவனாகில், அவன் தலைசிறந்த ஞானிகளோடு எண்ணத்தக்கவன் என்கிறான். கீழ்ச் சுலோகத்தில் புரையறக்கலக்கும் தன் ஸௌசீல்யத்தை வெளியிட்டான். இதில் தன் வாத்ஸல்யத்தை வெளியிடுகிறான். 'கொன்றேன் பல்லுயிரைக் குறிக்கோ ளொன்றிலாமையினால் என்றேனுமிரந்தார்க்கு இனிதாக வுரைத்தறியேன், குன்றேய்மேகமதிர் குளிர்மாமலை வேங்கடவா, அன்றே வந்தடைந்தேன் அடியேனையாட் கொண்டருளே' என்று கலியன் பாசுரம் (பெரிய. திரு. 1-9-3).

அநந்யப$_4$ாக் - பக்தியையே பயனாகக் கொண்டு மோக்ஷமுள்ளிட்ட வேறு எப்பயனையும் கருதாமல் பக்தி செய்யும் மஹாத்மாவான ஞானியைக் குறிக்கிறது. ஸாது$_4$ரேவ ஸ: - வைஷ்ணவ கோஷ்டியில் ஒருவனாக எண்ணத்தக்கவன். 'உபமாநம் அஶேஷாணாம் ஸாது$_4$நாம்' (வி.பு.) என்று ப்ரஹ்லாதாழ்வானை ஸாதுக்களுக்கு உபமாநமாகச் சொல்லிற்றிறே. கர்மஜ்ஞான பக்தி யோகங்களை யநுஷ்டித்து அதனால் பாபம் நீங்கப் பெற்றோர்க்கு பக்தியுண்டாவது ஒரு வகை. அந்த கர்மஜ்ஞான பக்தியோகங்களின் ஸ்தானத்திலே எம்பெருமானுடைய க்ருபையிருந்து பக்தியுண்டாவது இரண்டாவது வகை. இங்கு சொல்லப்படுபவன் இரண்டாவது வகையைச் சேர்ந்தவன் என்னவேணும்.

இங்கு மந்தவ்ய: என்பதற்கு பஹுமந்தவ்ய: (கொண்டாடத்தக்கவன்) என்று ஸ்வாமியின் பாஷ்யம். கண்ணபிரானின் திருவுள்ளமும் அதுவே.

துராசாரமுடையவனும் நற்பயனையடைய முடியுமோவெனில் - ஸம்யக் வ்யவஸிதோ ஹி ஸ: - இவனுடைய அத்யவஸாயம் (உறுதிப்பாடு) சிறந்ததன்றோ! என்னையே ப்ராப்யமாகவும் ப்ராபகமாகவும் அறிந்திருக்கும் இந்த உறுதிப்பாடு கிடைக்கவரிது. இப்படி வேறுபயன் கருதாது என்னிடம் பக்தி செய்கிற இவன் கொண்டாடத்தக்கவனே. 'ப்ரஹ்மப்ராப்திக்கு கண்ணழிவற்ற ஸாத$_4$நம் வ்யவஸாயங்காண்' என்றார் ஜநகர் (தன் ஆசார்யரான வேதவ்யாஸரிற் காட்டில் தெளிவுடையவர்.)

**க்ஷிப்ரம் ப$_4$வதி த$_4$ர்மாத்மா ஶஶ்வச் ச$_2$ாந்திம் நிக$_3$ச்ச$_2$தி|**
**கௌந்தேய! ப்ரதிஜாநீஹி ந மே ப$_4$க்த: ப்ரணஶ்யதி|| (9-31)**

(என் விஷயத்தில் ஸ்வயம்ப்ரயோஜன பக்தியைச் செய்பவன் விரைவில் தர்மாத்மாவாகிறான். நிலையான துராசார நிவ்ருத்தியை யடைகிறான். அர்ஜுநா! 'என்னுடைய பக்தன் அழியமாட்டான்' எனும் அர்த்தத்தை நீ ப்ரதிஜ்ஞை செய்.)

ஒருவன் பகவானைப் பற்றினால், பக்திக்குத் தடையான பாபங்கள் விலகி பகவத்பக்தியுண்டாகும். பக்தியின் ப்ரபாவத்தாலே ராஜஸதாமஸ குணங்கள் விலகி *ஶ*ாஸ்த்ரத்திற்கு விரோதமான செயல்கள் அவனை விட்டு நீங்கும். இங்கு த$_4$ர்ம *ஶ*ப்தம் பக்தியையே குறிப்பது; ஆத்ம *ஶ*ப்தம் நெஞ்சைக் குறிக்கும்.

ந மே ப$_4$க்த: ப்ரண*ஶ்*யதி - நம்மைப் பற்றினார்க்கு ஒருகாலும் அநர்த்தம் வராதுகாண். அவனைப் பற்றிவைத்தும் பாபபலன் அநுபவித்தான் என்பது 'அக்$_3$நிநா ஸிஞ்சேத்' (நெருப்பால் நனைப்பது) என்பது போல் அஸங்கதம். பாபங்களை ஸவாஸநமாகக் கழியப்பண்ணும். அன்றிக்கே உகவாதார் மேல் ஏறிடும்; அன்றியே 'உரஸா த$_4$ாரயாமாஸ' என்று தன்மேல் ஏறிட்டுக் கொள்ளும். எவ்வளவு தண்மையிருப்பினும் அதைப்பார்க்க கண் இல்லாதவன். தோஷ தர்*ஶ*னத்தில் அவிஜ்ஞாதாவாய் குண தர்*ஶ*த்தில் ஸஹஸ்ராம்*ஶு*வாயிருப்பவனிறே.

'ஸர்வஜ்ஞனுக்கு ஒரு அஜ்ஞானமும் விஸ்ம்ருதியும், ஸர்வ*ஶ*க்திக்கு ஒரு அ*ஶ*க்தியுமுண்டு. ஒருவன் தன்னை ஆ*ஶ்*ரயித்தால் அவன் முன்பு புத்திபூர்வமாகச் செய்த குற்றத்தை மறப்பன்; பின் ப்ரமித்துச் செய்யும் குற்றங்களை கண்டுங்காணாதிருப்பன்; அவ்வா*ஶ்*ரிதனைக் கைவிடுவதில் அ*ஶ*க்தனாயிருப்பன். இப்படியிருக்கைக்கடி ஸ்வாபாவிகமான குடல்தொடக்கு (நாராயண ப்ரயுக்தமான ஸம்பந்தம் உண்டாகையாலே)' - என்று எம்பார் - ஈடு (5-1-1).

**ந மே ப$_4$க்த: ப்ரண*ஶ்*யதி - என் பக்தன் அழியமாட்டான்.** இவ்விஷயத்தை அர்ஜுநா! நீ மற்றவர்க்குச் சொல்லு. ஆயுதமெடேன் என்ற நான் ஆயுதமெடுக்கப் போவதால் என் வாக்கு பொய்யாகுமோவென்று சிலர் ஐயமுறலாம். அதனால் என் பக்தனான நீ ப்ரதிஜ்ஞை செய்வாய். 'க்ஷிபாமி' என்பது ஸோபாதி$_4$கம். அநுக்ரஹமே அவனுக்கு ஸ்வரூபம். நரமாம்ஸம் புஜித்த க்ஷத்ரப$_3$ந்து$_3$, நீச ஸம்பர்க்கம் செய்த அஜாமிளன், ப்ரஹ்மஹத்தி செய்த கண்டாகர்ணன் இவர்களது பாபங்களைப் போக்கி தன் திருவடிகளைக் கொடுத்தானிறே. பகவத்விஷயத்தில் ஓரடி புகுரநின்றாலும் ப$_2$லவ்யாப்தியுண்டு; ஜன்மம் முழுதும் ஆ*ஶ்*ரயித்தாலும் ப$_2$லமில்லை பகவத்வ்யதிரிக்தர் பக்கல்.

ஈ*ஶ்*வர ஹ்ருதயம் என்றொன்று உண்டு - ஜகத்தடைய ஆ*ஶ்*ரிதார்த்தம் என்றாய்த்திருப்பது. வாலி 'நீர் என்னை கொன்றதென் என்ன, 'ப்$_4$ராத்ரு ப$_4$ார்யாபஹாரம் பண்ணினாய்' என்று அவனுக்குக் குற்றமாகச் சொன்னவர்தாமே, அக்குற்றம் மஹாராஜர் பக்கலும் உண்டாயிருக்க, 'அதைச் சொன்னார் தலையை வெட்டி கழுகுக்கு இறையாக்குவேன்' என்றாரிறே. 'உபமாந ம*ஶே*ஷாணாம் ஸாது$_4$நாம்' என்ற ப்ரஹ்லாதனையும் எதிரம்பு கோக்கக் பண்ணுவன்; ப்ராதிகூல்யத்தில் நின்ற *ஶிஶு*பாலனுக்கு ஸாயுஜ்யமும் கொடுப்பன். என்னே

அவன் ஸ்வாதந்த்ர்யம்! (சரம தசையில் தன் அழகைக் காட்டி தன்பக்கல் சிசுபாலனின் த்வேஷத்தை நீக்கி ரக்ஷித்தான் - 'அலவலைமை (த்வேஷம்) தவிர்த்த அழகன்'. தர்மியான ஈஶ்வரனை ரக்ஷகனாக க்ரஹிப்பிக்கிற ப்ரமாணம் தர்மிக்ராஹ ப்ரமாணம் - க்ருஷ்ண க்ருஷ்ணேதி க்ருஷ்ணேதி யோ மாம் ஸ்மரதி நித்யஶ:| ஜலம் பி$_4$த்வா யத$_2$ா பத்$_3$மம் நரகாது$_3$த்$_3$த$_4$ராம்யஹம்|| (க்ருஷ்ணா! க்ருஷ்ணா! என்று எவனொருவன் என்னை எப்போதும் நினைக்கிறானோ அவனை, ஜலத்தைப் பிளந்து கொண்டு தாமரையை எடுப்பது போல நான் நரகத்திலிருந்து தூக்கிவிடுகிறேன்).

**மந்மநா ப$_4$வ மத்$_3$ ப$_4$க்தோ மத்$_3$யாஜீ மாம் நமஸ்குரு|**
**மாமேவைஷ்யஸி யுக்த்வைவம் ஆத்மாநம் மத் பராயண:|| (9-34)**

(என்னிடம் உன் மனத்தை வை. என்னிடம் பக்தியைச் செய். என்னை ஆராதிப்பாய். என்னை வணங்கு. என்னையே முக்கியப் பயனாகக் கொண்டு உன் மனதை என்னிடமே வைத்து பழகுவாயானால் என்னையே அடைவாய்)

இதில் ஸாத$_4$ன ப$_4$க்தியின் தனித்தன்மைகளை விவரிக்கிறான். ஸாதனவேளை தொடங்கி ரஸிக்கும் விஷயம் பகவத்விஷயமிறே. இச்சுலோகத்தில் ஆறு இடங்களில் 'மாம், மத்' பதங்களின் மூலம் தன்னைக் குறிக்கிறான். தன் ஸ்வரூபரூபகுண விபூதி பெருமையனைத்தையும் இந்த ஆறு அஸ்மச் ச$_2$ப்தங்களால் உணர்த்துகிறான். 'காரணந்து த்$_4$யேய: என்கிறபடி ஜகத்காரணனான என்னை; 'தமீஶ்வராணாம் பரமம் மஹேஶ்வம்' (ஶ்வே.) என்றபடி ஈஶ்வரர்களுக்கெல்லாம் மேலான மஹேஶ்வரனான என்னை; எல்லா தாழ்வுகளுக்கும் எதிர்த்தட்டாயிருக்கும் ஹேயப்ரதிபடனான என்னை; ஸ்வாபாவிக அநவதிகாதிஶய ஸௌசீல்ய வாத்ஸல்ய மார்தவ ஆர்ஜவ ஸௌஹார்த்த ஸாம்ய காருண்ய மாதுர்ய காம்பீர்யௌதார்ய சாதுர்ய ஸ்தைர்ய தைர்ய சௌர்ய பராக்ரம ஸத்யகாம ஸத்யஸங்கல்ப, ஜ்ஞான பலைஶ்வர்ய வீர்ய ஶக்தி தேஜஸ் என்கிறபடி கல்யாணகுண ஸாகரனான என்னை; புருஷோத்தமனான என்னை; 'நீலதோயத$_3$ மத்$_4$யஸ்த$_2$ா வித்யுல்லேகே$_2$வ ப$_4$ாஸ்வரா' (தை.நா.) என்று திவ்யமங்கள திருமேனியையுடைய என்னை; தர்மார்த்த காம மோக்ஷமாகிற சதுர்வித புருஷார்த்தங்களைத் தருவதற்கு சதுர்புஜனான என்னை; த்யேயஸ்: ஸதா ஸவித்ரு மண்டல மத்யவர்த்தீ நாராயணஸ் ஸரஸி ஜாஸந ஸந்நிவிஷ்ட:| கேயூரவாந் மகரகுண்டலவாந் கிரீடீ ஹாரீ ஹிரண்மயவபு: த்$_4$ருத ஶங்க$_2$ சக்ர:|| (நாரஸிம்.பு.) என்றபடி திவ்ய திருவாபரணங்களையுடைய என்னை; ஸர்வலோக ஶரண்யனான என்னை. இப்படியென்னை நினைத்திருந்தாயாகில், நீ என்னையே அடைவாய். இவ்வண்ணமாக **பக்தி ஸ்வரூபம்** இவ்வத்யாயத்தில் விவரிக்கப்பட்டது. நஞ்ஜீயர் 'உபாஸகருக்குச் சொன்ன க்ரமமடைய ப்ரபந்நனுக்கு தே$_3$ஹயாத்ராஶேஷமாக

ரஹஸ்யத்திலே உண்டு' என்றருளிச் செய்வர். 'திருமந்த்ரத்தை இடக்கைப் பத்துக்கொண்டெண்ணுகை கர்மயோக$_3$ம்; அதினுடைய அர்த்த$_2$ாநுஸந்தானம் பண்ணுகை ஜ்ஞானயோக$_3$ம்; அவ்வர்த்தமிருக்கை ப$_4$க்தியோகம்; பக்திபரவஶராய் எம்பெருமானை நிர்வாஹகனென்று துணிகை ப்ரபத்தி'.

* * * * *

## பத்தாவது அத்யாயம் – விபூதி யோகம்

கீழத்யாயத்தில் கர்மயோகம் ஞானயோகம் இவைகளைக் காட்டிலும் பக்தியோகமே சிறந்தது என்று சொல்லி, அந்த பக்தியோகத்தை அதன் அங்கங்களுடன் விரிவாகக் கூறினான். இனி இந்த பத்தாம் அத்யாயத்தில் பக்தி உண்டாகி அது வளர்வதற்கான வழியையும், சேதநாசேதனங்கள் யாவற்றையும் தானே படைத்து தரித்து நியமிப்பவன் என்பதையும், உலகிலுள்ள ஸர்வ வஸ்துக்களும் தனக்குச் ஶரீரம், அவைகளுக்கு தான் ஒருவனே ஆத்மா என்பதையும், மற்றும் தன் ஜ்ஞான ஶக்தி கல்யாண குணங்களையும் விரிவாக உபதேஶிக்கிறான்.

**அஹம் ஸர்வஸ்ய ப்ரபவோ மத்தஸ் ஸர்வம் ப்ரவர்த்ததே|**
**இதி மத்வா பஜந்தே மாம் பு$_3$த$_4$ா பாவ ஸமந்விதா|| (10-8)**

(நான் எல்லா உலகிற்கும் உத்பத்தி காரணமாகிறேன். என்னாலேயே பொருள்கள் அனைத்தும் செயல்படுகிறது. இதையறிந்த ஜ்ஞானிகள் பேரன்புடன் என்னை உபாஸிக்கிறார்கள்.)

இப்படி சில ஶ்லோகங்களில் பகவத் பக்தியுண்டாகும் வழியைச் சொன்ன பகவான், பக்தர்கள் போதுபோக்கு எவ்விதமென்பதை மேலே சொல்கிறான்.

**மச்சித்தா மத்$_3$க$_3$தப்ராணா பே$_3$ாத$_4$யந்த பரஸ்பரம்|**
**கத$_2$யந்தஶ்ச மாம் நித்யம் துஷ்யந்தி ச ரமந்தி ச|| (10-9)**

(என் பக்தர்கள் தங்கள் நெஞ்சை என்னிடமே வைத்திருப்பர். என்னிடமே தங்கள் ப்ராணனை வைத்திருப்பர். பிறரோடு கலந்துரையாடும்போது என் குணசேஷ்டிதங்களைக் கூறி ஆனந்திப்பர்; கேட்டும் மகிழ்ந்திருப்பர்.)

திருநெடுந்தாண்டகம் முப்பது பாசுரங்களும் இந்த ஶ்லோகத்திற்கு விளக்கம்போலே அமைந்திருக்கின்றன என்று பட்டர் நிர்வஹிப்பர். ஆழ்வார் தாமான பாசுரமான முதல் பத்து பாசுரங்கள் மச்சித்தா: என்றதையும், திருத்தாயார் பாசுரமான இரண்டாவது பத்துப்பாசுரங்கள் ம$_3$த்க$_3$தப்ராணா: என்றதையும், நாயகி பாசுரமான மூன்றாவது பத்துப் பாசுரங்கள்

போதயந்த: பரஸ்பரம் என்றதையும் விளக்குகின்றன என்று வ்யாக்யானங்களில் காண்கிறோம்.

மச்சித்தா: – மற்றைய தெய்வங்கள், விஷயங்கள் என்று எதையும் கலக்காமல் என்னை ஒருவனையே நெஞ்சில் கொண்டவர்கள். 'ஒருருவம் பொன்னுருவம் ஒன்று செந்தீ, ஒன்று மாகடலுருவம் ஒத்துநின்ற, மூவுருவும் கண்டபோதொன்றாம் சோதி, முகிலுருவம் எம்அடிகள் உருவந்தானே' 'அந்தணனை அந்தணர் மாட்டந்தி வைத்த மந்திரத்தை மந்திரத்தால் மறவாதென்றும் வாழுதியேல் வாழலாம் மட நெஞ்சமே' 'மண்முழுதும் அகப்படுத்துநின்ற எந்தை, மலர்புரையும் திருவடியே வணங்கினேனே' 'பொன்னானாய்... என்னானாய் என்னானாய் என்னலல்லால், என்னறிவன் ஏழையேன்'. ஸ்நேஹோ மே பரமோ ராஜாந் த்வயி நித்யம் ப்ரதிஷ்டி$_2$த:| ப$_4$க்திஶ்ச நியதா வீர ப$_4$ாவோ நாந்யத்ர க$_3$ச்ச$_2$தி| (அரசே! எனது அன்பு தேவரீரிடத்தில் நிலைநிற்கிறது. என் நினைவு வேறொரிடத்தில் செல்கின்றதில்லை) எனும் திருவடியின் நிலை இது.

மத்$_3$க$_3$தப்ராணா: – என்னைப் பிரிந்தால் த$_4$ரிக்க மாட்டார்கள். நாயகி பிரிவாலே மயங்கி திருத்தாயார் பாசுரமாக பாடுபவை. 'பட்டுடுக்கும் அயர்த்திரங்கும் பாவை பேணாள்' 'நெஞ்சுருகி கண்பனிப்ப நிற்கும் சோரும்' 'இதுவன்றோ நிறைவழிந்தார் நிற்குமாறே'. பரித்யக்தா மயா லங்கா மித்ராணிச த$_4$நாநிச| ப$_4$வத்$_3$ க$_3$தம் மே ராஜ்யஞ்ச ஜீவிதஞ்ச ஸுக$_2$ாநிவை|| (என்னாலே இலங்கையரசு கைவிடப்பட்டது. நண்பர்களும் செல்வங்களும் கைவிடப்பட்டன. என்னுடைய அரசும் உயிரும் ஸுகங்களும் தேவரீரிடம் அடங்கியுள்ளன) எனும் விபீ$_4$ஷணனின் நிலை இது.

போதயந்த பரஸ்பரம் – உயிர் தரிக்க சிலர் சொல்ல சிலர் கேட்டு போதுபோக்குவர்கள். 'அவ்வண்ணத்தவர் நிலைமை கண்டும் தோழீ' 'வரையுருவில் மாகளிற்றைத் தோழீ! என்தன் பொன்னிலங்கு முலைக்குவட்டில் பூட்டிக்கொண்டு'. மற்றைய ஆழ்வார் பாசுரங்கள் – 'தெரித்தெழுதி வாசித்தும் கேட்டும் வணங்கி வழிபட்டும் பூசித்தும் போக்கினேன் போது' (நான்.திரு.63), 'புல்லாணியெம்பெருமான் பொய் கேட்டிருந்தேனே' (பெரிய.திரு.9-4-5), 'கோவிந்தன் குணம்பாடி ஆவிகாத்திருப்பனே' (நாச்.திரு.8-3) எம்பெருமானுடைய சேஷ்டிதங்கள் 'கர்ம ச மே திவ்யம்' (கீ.4-9) என்று கண்ணனே அருளிச் செய்தானிறே. **துஷ்யந்தி ச ரமந்தி ச** – க்ரியா பதங்கள் இரண்டுக்கும் 'ஸந்தோஷிக்கிறார்கள்' என்றே பொருள். இந்த புநருக்தி எதற்காக என்று ஆராய்ந்தால், பகவத் கதைகளைச் சொல்லி மகிழ்வர் சிலர்; அவற்றைக் காதாரக் கேட்டு மகிழ்வர் சிலர். வக்தாக்களும் ஶ்ரோதாக்களுமாக இரண்டு வகுப்பினர் தேறுவரன்றோ. சொல்லுங்காலுண்டாகும் ஆனந்தம் 'துஷ்யந்தி', கேட்குங்காலுண்டாகும் பரமானந்தம் 'ரமந்தி'. ஆக, இவ்வளவால் பகவானுடைய குண விபூதி சேஷ்டித ஜ்ஞானங்களால் பக்தியுண்டாகி வளரும் வகை விவரிக்கப்பட்டதாயிற்று.

பகவான் முதலிலே பக்தியுண்டாக உபாயத்தைச் சொன்னான். பிறகு உண்டான பக்தி பரபக்தியாக வளரும் வழியைச் சொன்னான். பிறகு அவர்கள் எப்படித் தன்னை எப்போதும் நினைத்து தரித்திருப்பர் என்பதையும் சொன்னான். இச் சுலோகத்தில் அவர்களின் பக்தியை தானே மேலும் வளரச் செய்வதாகக் கூறுகிறான்:

**தேஷாம் ஸதத யுக்தாநாம் ப$_4$ஜதாம் ப்ரீதி பூர்வகம்|**
**த$_3$தா$_3$மி பு$_3$த்$_3$தி$_4$யோக$_3$ம் தம் யேந மாம் உபயாந்தி தே|| (10-10)**

(எப்போதும் என்னுடன் கூடியிருப்பதையே பயனாக விரும்பி என்னிடம் பக்தி செய்பவர்களுக்கு, என்னை அடையும்முன் ஏற்படும் என் விஷயமான மிகத் தெளிவான ஸாக்ஷாத்காரத்தை (பரஜ்ஞான நிலை) நானே உகந்து அளிக்கிறேன்).

த$_3$தா$_3$மி - நான் மோக்ஷத்திற்குறுப்பான பரஜ்ஞானத்தை அவனுக்கு உகந்து அளிக்கிறேன். யேந தே மாம் உபயாந்தி - இப்பரஜ்ஞானத்தைப் பெற்றவுடன் அது என்னை ஒரு கணம்பிரியிலும் த$_4$ரியாமையாகிற பரமபக்தியை விளைத்துவிடுமாகையாலே, இந்த பரஜ்ஞானமே அவர்களுக்கு என்னை அடைவித்து விடும்.

ஆக, உபாஸகன் ஸ்வயம்ப்ரயோஜன ப$_4$க்திநிஷ்டனாகிவிட்டால், அவனுக்கு ப்ராப்த கர்மம் முடியும்வரை மேன்மேல் பிறவிகளைத் தராமல், அந்த ஜன்மத்திலேயே பரஜ்ஞானத்தை யளித்து தன்னையடைச் செய்து விடுவன். ஆனால் அந்த உபாஸகன் ஸ்வயம் ப்ரயோஜன பக்திநிஷ்டனாக ஆகாவிடில், அவனும் அப்படியாவதற்கு ப்ராரப்த கர்மம் முடியும் ஜன்மம் வரை அவனது பக்தியை வளரச்செய்து, அந்திமஸ்ம்ருதியில் பரஜ்ஞானத்தையளித்து, அவன் விரும்பும் (ஸ்வார்த்த) மோக்ஷத்தை தந்தருள்வன். இவன் விஷயத்தில் பரபக்தி வரை சேதநனின் முயற்சியுண்டு. அதனால் உகந்த எம்பெருமான், பரஜ்ஞானத்தை விளைவித்து, ஸ்வப்ராப்தியையும் அளிக்கிறான் என்று கண்டுகொள்வது.

க்ருஷ்ணா! உன்னுடைய கல்யாணகுண யோகத்தையும், நியமனத்தையும் விரிவாகச் சொல்லுவாய் என்று அர்ஜுநன் கேட்க, எல்லா ஜீவரா*ஶி*களையும் நடத்துகையாகிற நியமனம், தான் ஆத்மாவாய் (அந்தர்யாமியாய்) இருந்துசெய்வதே எனும் விஷயத்தையும், யோகமாகிறது அனைத்தையும் படைக்கை, ரக்ஷிக்கை, அழிக்கை முதலான பெருமைகளே எனும் விஷயத்தையும் கூறுகிறான்:

**அஹமாத்மா கு$_3$டா$_3$கே*ஶ* ஸர்வபூ$_4$தா*ஶ*ய ஸ்தித$_2$:|**
**அஹமாதி$_3$*ஶ்*ச மத்$_4$யம் *ச* பூ$_4$தாநாம் அந்த ஏவ *ச*|| (10-20)**

(தூக்கத்தை வென்ற அர்ஜுநா! நான் எல்லா ஜீவரா*ஶி*களின் ஹ்ருதயத்தில் அந்தர்யாமியாயிருக்கிறேன். அவர்களின் படைப்புக்கும், ரக்ஷணத்திற்கும், ஸம்ஹாரத்துக்கும்

காரணமாயிருக்கிறேன்.) உயிர்களுக்கெல்லாம் அவன் ஆத்மா என்பதால், எல்லா உயிர்களும் அவனுக்கு ஶரீரம் என்பது தன்னடையே தேறும். அதேபோல், உலகுக்கெல்லாம் அவன் காரணன் என்பதால், இவ்வுலகெல்லாம் காரியப்பொருள் என்று தேறும். அதாவது இவையனைத்தும் அவன் விபூதி (ஸொத்து) ஆகிறது. பகவான் இதை இங்கே சொல்வதற்கு காரணம் – மேலே 39வது ஶ்லோகமளவு தன் விபூதிகளை சொல்லப்போகிறான். அவைகளில் 'ஆதித்யானாம் அஹம் விஷ்ணு:' 'ஆயுதானாம் அஹம் வஜ்ரம்' என்று பல சேதநாசேதனங்களை ஒக்கஎடுத்து 'அவைகள் நான்' என்கிறான். அதாவது 'அவைகளுக்கெல்லாம் ஆத்மா நான், அவைகள் எனக்குச் ஶரீரம்' என்பதையே கூறுகிறான். அக்கருத்தை தெளிவுபடுத்தவே, முந்துறமுன்னம் இச்சுலோகத்தில் 'அஹமாத்மா ஸர்வபூ$_{4}$தாஶய ஸ்தித$_{2}$:' (அந்தர்யாமியாயிருக்கிறேன்) என்கிறான்.

பகவானுக்கும் இவ்வுலக்குமுள்ள இந்த ஶரீராத்மா ஸம்பந்தம் 'உன்றன்னோடுறவேல் நமக்கிங்கொழிக்க ஒழியாது' என்கிறபடி நித்யமானது, அநாதி – எக்காலத்திலுமுள்ளது. மனிதனுக்குள்ள மனுஷ்யத்வம், மாட்டிற்குள்ள கோத்வம் என்கிற ஜாதியை எப்படி பிரிக்கயியலாதோ, எப்படி மலரையும் மணத்தையும் பிரிக்கவியலாதோ, எப்படி ரத்னத்யையும் அதன் ஒளியையும் பிரிக்கயியலாதோ, அதேபோல் பகவானுக்கும் சேதநாசேதனங்களுக்குமுள்ள ஸம்பந்தம் பிரிக்க வொண்ணாதது. எந்தப் பொருள் உண்டாவதற்கும் மூன்றுவித காரணங்களை நாம் பார்க்கலாம். ஒரு குடம் உண்டாக குயவன் நிமித்த காரணம்; மண் உபாதான காரணம், தண்டம் சக்கரம் ஸஹகாரி (உதவும் கருவி) காரணம். இந்த உலகம் உண்டாக இந்த மூன்றுவித காரணமாயிருப்பவன் பகவான் ஒருவனே. அவனுடைய சரீரமாகிய மூலப்ரக்ருதியிலிருந்தே 'ஸோSகாமயத பஹுஸ்யாம்' (நானே பலவாகக் கடவேன்) என்று அவன் ஸங்கல்பித்து இவ்வுலகம் தோன்றுவதால் அவனே நிமித்த உபாதான காரணமாகவும், அவன் தனது ஜ்ஞாந ஶக்திகளைக் கொண்டே இதனைப் படைப்பதால் அவனது அறிவாற்றலே ஸஹகாரி காரணமாகவுமாகிறது. ஸ்ருஷ்டிக்குமுன் ஸூக்ஷ்ம சேதநாசேதனங்களை சரீரமாகக் கொண்டிருப்பவன், ஸ்ருஷ்டிக்கு பின் ஸ்தூல சேதநாசேதனங்களை சரீரமாகக் கொண்டிருக்கிறான். இரு நிலைகளிலும் அவைகளுக்கு ஆத்மாயிருப்பவன் பகவானே. இந்த சரீராத்ம ஸம்பந்தத்தையிட்டே மேலே பல ஶ்லோகங்களில் பலவற்றைச் சொல்லி 'அவைகள் நான்', அதாவது அவைகள் எனக்கு சரீரம், என் விபூதி, நான் அவைகளுக்கு ஆத்மா, அவைகளுக்கு ஸ்வாமியாய் (ஸொத்துடையவனாய்) இருக்கிறேன் என்கிறான்.

மேலே 21வது ஶ்லோகம் முதல் 39வது ஶ்லோகமளவு பற்பல வஸ்துக்களோடு தன்னை ஒரே வேற்றுமையில் படிக்கிறான் கண்ணன். (இதற்கு காரணம் அவன் அவனது செல்வங்களான எல்லா வஸ்துக்களிலும் ஆத்மாவாய் நிற்பதே என்று சென்ற ஶ்லோகத்தில்

காட்டப்பட்டது). அர்ஜுநா! என்னுடைய அழகிய விபூதிகளை உனக்குச் சொல்கிறேன். எல்லாவற்றையும் சொல்லி முடிக்க முடியாது. ஆகவே முக்கியமான சிலவற்றைச் சொல்கிறேன் – ஆதித்யானாம் அஹம் விஷ்ணு, ஜ்யோதிஷாம் அம்ஶுமாந் ரவி, வேதாநாம் ஸாம வேதோஸ்மி, இந்த்ரியாணாம் மனஶ்சாஸ்மி, ருத்ராணாம் ஶங்கராஸ்மி, ஶிகரிணாம் மேரு அஹம், மஹர்ஷீணாம் ப்ருகுரஹம், ஸ்தாவராணாம் ஹிமாலய:, வ்ருக்ஷாணாம் அஸ்வத்த;, கஜேந்ராணாம் ஐராவதம், அக்ஷராணாம் அகாரோஸ்மி, சந்தஸாம் காயத்ரீSஹம், மாஸாநாம் மார்கஶீர்ஷோSஹம் – என்று பலவிதப்பட்ட ஜீவராஶிகள், வஸ்துக்கள், காலம் எல்லாவற்றையும் சொல்லி, அவற்றில் குறிப்பாக ஒன்றைக்காட்டி 'அது நான்' என்பதால், அவை யாவும் அவன் அதீனம் என்று சொன்னதாகவே தேறும். எல்லாவற்றிலும் தான் ஆத்மாவாக இருந்து தரிப்பதால் எல்லாம் நானே என்கிறான். (சிலவற்றையே சொல்லியிருந்தாலும் மற்றவற்றிற்கு அவை உபலக்ஷணம் என்று கொள்க.) இவற்றில் பகவான் அந்த வஸ்துவாகவே இருக்கிறான் என்று ஐக்யம் (அத்வைதம்) சொல்ல முடியாது. 'ராம ஸுக்ரீவயோரைக்யம்' என்றால் ஸ்நேஹத்தில் ஒன்றிவிட்டதைச் சொன்னதாகுமேயொழிய, இருவரும் ஒரு வ்யக்தியாய் விட்டதாக ஆகாதன்றோ. 'நான் வ்யாஸ மஹர்ஷி' என்றெல்லாம் பகவான் சொல்லுகையில் அங்கெல்லாம் அவன் நியாமகனாய், ஸ்வாமியாய் உள்ளமையே சொல்லிற்றாகும். எல்லாமே அவன் விபூதி – அவனால் நியமிக்கப்படும் ஸொத்து என்றே தேறும். இது சரீராத்ம பாவத்தால் வரும் உறவு.

அர்ஜுநா! என்னுடைய மங்களமான செல்வங்களுக்கு எல்லையில்லாமையால் ஓரளவு சுருக்கமாகச் சொல்லப்பட்டது. எந்தெந்த ஜீவன் என் விபூதியில் சிலவற்றை (செல்வம், ஜ்ஞானம்) தனக்குச் சிறப்பாக கொண்டுள்ளதோ, அவை யாவும் என் நியமன சக்தியின் ஒரு சிறு பகுதியினால் உண்டானது என்றறிவாய். **'விஷ்டப்$_4$யாஹமிதம் க்ருத்ஸ்நம் ஏகாம்ஶேந ஸ்தி$_2$தோ ஜகத்'** (10-42) நான் இவ்வுலகு முழுவதையும் என் நியமன ஶக்தியாகிற பெருமையின் ஒரு திவலையாலே த$_4$ரித்து நிற்கிறேன் என்று சொல்லி இவ்வத்யாயத்தை முடிக்கிறான்.

* * * * *

## பதினோராவது அத்யாயம் – விஶ்வரூப தர்ஶந யோகம்

கீழத்யாயத்தில் கண்ணபிரான் தன் விபூதிகளை ப்ரதானமாக உபதேஶித்தான். இப்படி சொல்லப்பட்ட ஈஶ்வரனின் விபூதிகளை கண்களால் காணவாசைப்பட்ட அர்ஜுநன் அவற்றை தனக்குக் காட்டியருள வேணும் என்று ப்ரார்த்திக்கிறான். கண்ணனும் அர்ஜுநன் அவற்றை தன் ஊனக்கண்களால் காணவியலாதென்று தி$_3$வ்ய சக்ஷுஸ்ஸை அவனுக்குக் கொடுத்து தனது **ஐஶ்வரமான யோகத்தை** (ஸர்வ நியந்த்ருத்வம் முதலான பெருமைகளையுடைய

தனது ரூபத்தை) காணச் செய்கிறான். இறுதியில், அளவற்ற மஹிமையை யுடையவனானாலும் தான் பக்தனுக்கு எளியவன் என்று சொல்லி, தன்னிடம் பக்தி செய்கையே தன்னையடைய உபாயம் என்று சொல்லி நிகமிக்கிறான் இவ்வத்யாயத்தை.

'புருஷோத்தமா! முதலில் ஜீவனைப் பற்றி உபதேஶித்தருளினாய். இதனால் தேஹாத்மாபிமானம் தொலையப் பெற்று உண்மையை யுணர்ந்தேன். நீயே ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரங்களைச் செய்பவன் என்பதையும், உனது கல்யாண குணங்களின் பெருமைகளையும் விரிவாகக் கேட்டேன். **'த்$_3$ரஷ்டுமிச்சா$_3$மி தே ரூபமைஶ்வரம் புருஷோத்தம'** (11-3) உனது ஈஶ்வர ரூபத்தை, அதாவது உலகையாளும் பகவத் ரூபத்தை ஸாக்ஷாத்கரிக்க விரும்புகிறேன். உனது ஈஸ்வரரூபம் என்னால் பார்க்கயியலும் என்று நீ எண்ணுவாயானால், உன் அஸாதாரண ரூபத்தை முழுமையாகக் காட்டுவாய்' என வேண்டுகிறான். முதலிலே 'ஸேனயோ ருப$_4$யோர் ம$_4$த்யே ரத$_2$ம் ஸ்தா$_3$பய' என்று கண்ணனை நியமித்த அர்ஜுநன், இப்போது புருஷோத்தமா! ப்ரபோ! யோகேஶ்வர! என்று விளித்து மிகவும் பணிவுடன் ப்ரார்த்திக்கிறான். கண்ணனும் அர்ஜுநனால் ஊனக்கண் கொண்டு அந்த ரூபத்தை காணவியலாதென்று 'தி$_3$வ்யம் த$_3$தா$_3$மி தே சக்ஷு: பஶ்ய மே யோக$_3$மைஶ்வரம்' (11-8) – ப்ராக்ருத கண்ணிலும் வேறுபட்ட அப்ராக்ருத கண்ணை உனக்குத் தருகிறேன். அதைக் கொண்டு எனக்கேயுரிய கல்யாணகுண விபூதிச் சேர்த்தியைக் காண்பாய் என்று காணக்கிடைக்காத தன் விஶ்வரூபத்தை ஸேவை பண்ணி வைக்கிறான். (ஸஞ்ஜயனும் பகவத் ப்ரஸாதத்தாலே திவ்ய சக்ஷுஸ்ஸைப் பெற்று இந்த ரூபத்தை ஸேவித்து அதை த்ருதராஷ்ட்ரனுக்குச் சொல்வதாகக் காண்கிறோம்.)

அர்ஜுநன், 'விஶ்வேஶ்வர! விஶ்வரூபா!' என்றழைத்த வண்ணம் தான் காண்பதை பெரு வியப்புடன் கூற முற்படுகிறான். 'ஆயிரக்கணக்கான ஸூர்ய ஒளி ஆகாயத்தில் ஒரே ஸமயம் கிளர்ந்தாப் போலே ஒளிமயமான ரூபம், ஸகல லோகங்கள், ஸகல ப்ராணி ஸமூஹங்கள், நான்முகன் சிவன் இந்த்ரன் உள்ளிட்ட தேவ ஸமூஹம், ரிஷிகணங்கள், வாஸுகி தக்ஷகன் முதலான பாம்புகள் எல்லாவற்றையும் காண்கிறேன். இந்த விஶ்வரூபத்துக்கு ஆதி, மத்யம், அந்தம் எது என்று தெரியவில்லை. ஹே விஶ்வேஶ்வர! ஸகல லோகங்களும் உனது ஆஜ்ஞைக்கு கட்டுப்பட்டே இயங்குகிறது. ஹே விஶ்வரூபா! ஸகல லோகங்களையும் ஶரீரமாக வுடையவனே! உனதுருவம் எல்லையற்றது, எங்கும் பரவியுள்ளது. ஆஶ்சர்யமான பலவிதமான தலைகள், ஒளிவீசும் கண்கள், கைகள், கால்கள், அப்ராக்ருதமான பலபல ஆபரணங்கள், திவ்யாயுதங்கள், மாலைகள், வஸ்த்ரங்கள்! அநுகூலர்கள் உனக்கு மங்களத்தை ஆசாஸிக்கிறார்கள். ப்ரதிகூலர்கள் பயந்து ஓடுகிறார்கள். கௌரவஸேனை முழுவதும் நாஶமடைவதையும் பார்க்கிறேன்.'

இவற்றையெல்லாம் கண்டு பயந்து கலங்கி ஸ்தம்பித்து நின்றவன், '**ஆக்$_2$யாஹி மே கோ ப$_4$வாந் உக்$_3$ரரூபோ நமோSஸ்து தே தே$_3$வவர ப்ரஸீத$_3$'** (11-31) - தேவர்களில் சிறந்தவனே! மிகவும் கே$_4$ாரமான உருவத்தை தாங்கி நிற்பவனே! உன்னைத் தொழுகிறேன். ஏன் இவ்வாறு காட்சி தருகிறீர்? நீர் என்ன செய்ய விரும்புகிறீர்? உம் அபிப்ராயத்தை அறிகிலேனல்லேன். அருள்கொண்டு எனக்கு அதைச் சொல்லுவீர் என்று வேண்டுகிறான். பகவான் சொல்கிறான்: நான் எதிரிகள் எல்லோரையும் முடிக்கும் காலனாயிருக்கிறேன். இவர்கள் அனைவரும் என்னால் அழிக்கப்பட்டு விட்டார்கள். பீஷ்மர், துரோணர் முதலான உன் சத்ருக்களை நீ கொல்லாவிடிலும் அவர்கள் அழிவு நி*ஶ்ச*யம் என்று தெரிவிக்கவே இந்த உக்ரவுருவம் உனக்குக் காட்டப்பட்டது. நீ எனது கருவியாயிருந்து இவர்களை வென்று புகழையும் ராஜ்ஜியத்தையும் அடைவாய் (11-32, 33).

இதைச் செவியுற்ற அர்ஜுநன் நடுக்கத்துடன் கைகூப்பி நாகுழற பேச முற்படுகிறான். பயத்தாலும் பக்தியாலும் உந்தப்பட்டவனாய், மிகுந்த தடுமாற்றத்துடன் பேசுவதைக் காண்கிறோம். 'எல்லையற்றவனே! தேவர்களை நியமித்து நடத்துமபவனே! ஜகதனைத்தும் வ்யாபித்து நிற்பவனே! சிதசித்துக்களெல்லாம் நீயே. நீயே ஆதிதேவன். மிகத் தொன்மையானவன். லோகங்களுக்கெல்லாம் ஆதாரமாயுள்ளவன் நீ. எண்ணற்ற வுருவங்களையுடைய பெரியவேனே! எல்லாமறிபவன் நீயே. அறியப்படுபவை யாவும் நீயே! மேலான இருப்பிடமும் நீயே! உன்னை எல்லாப் பக்கத்திலும் வணங்குகிறேன். பலமுறை என் வணக்கங்கள் அமையட்டும். **'அநந்த வீர்யாமித விக்ரமஸ் த்வம் ஸர்வம் ஸமாப்நோஷி ததோSஸி ஸர்வ:'** (11-40) - அளவற்ற பராக்ரமமுடையவனே! நீ எல்லா வஸ்துக்களையும் வ்யாபித்துள்ளதால் எந்த வஸ்துவைச் சொல்லும் சொல்லாலும் நீயே சொல்லப்படுகிறாய்'.

மேலே, கண்ணனை தனக்கு ஸமமான நண்பனாக உறவினனாக யெண்ணி நடந்து கொண்டதற்கு மன்னிப்பு கோருகிறான். 'உமது பெருமையறியாமல் ஹே க்ருஷ்ண! ஹே யாதவ! ஹே ஸகே! என்று அறியாமையாலும் நெடிய பழக்கத்தினாலும் அழைத்துப் போந்தேன். உண்ணும் போதும், விளையாடும்போதும், படுக்கையில் இருந்தபோதும் உன்னைப் பலவகையில் அவமதித்ததை நினைத்துப் பார்க்கிறேன். க்ஷமித்தருள்வாய்'. மீண்டும் அர்ஜுநன் கண்ணனை துதிக்கத் தொடங்குகிறான்:

**பிதாSஸி லோகஸ்ய சராசரஸ்ய த்வமஸ்ய பூஜ்ய*ஶ்ச* கு$_3$ருர் க$_3$ரீயாந்|**
**ந த்வத்ஸமோSஸ்த்யப்$_4$ யதி$_4$க:குதோSந்யோ லோகத்ரயேSப்ய ப்ரதிம ப்ரப$_4$ாவ!||**
**தஸ்மாத் ப்ரணம்ய ப்ரணித$_4$ாய காயம் ப்ரஸாத$_3$யே த்வாமஹமீ*ஶ* மீட்$_3$யம்|**
**பிதேவ புத்ரஸ்ய ஸகே$_2$வ ஸக்$_2$யு: ப்ரிய ப்ரியாயார்ஹஸி தே$_3$வ ஸோடு$_4$ம்||**

**(11-43, 44)**

நீர் ஸகல ஜீவராஶிகளுக்கும் பிதாவாகவும் ஆசார்யராகவுமிருக்கிறீர். உம்மை யொத்தவன் எங்கும் யாருமில்லை. உன்னிலும் மேம்பட்டவன் எப்படியிருக்க முடியும். எல்லோரையும் நியமிப்பவனும், அனைவராலும் துதிக்கத்தக்கவனுமான உன்னை ஶிரம் தாழ்த்தி வேண்டுகிறேன். மகனுக்குத் தந்தை போலவும், தோழனுக்கு தோழன் போலவும் உமக்குப் ப்ரியமான என்னுடைய பிழைகளையெல்லாம், எனக்குப் ப்ரியமான நீ பொறுத்தருள வேணும். (மேற்காணும் இரண்டு ஶ்லோகங்களும் ஸ்ரீப$_4$ாஷ்யகாரராலே ஶரணாக$_3$தி க$_3$த்$_3$யத்தில் ஶரணமடையும் ப்ரகணத்தில் ஸ்வவாக்யமாக அநுஸந்திக்கப்பட்டன. ப்ரகண பேதத்தை திருவுள்ளத்திற்கொண்டு பெரியவாச்சான் பிள்ளையால் ரஸக$_4$னமான அர்த்த பேதங்களும் காட்டப்பட்டுள்ளன.)

**கிரீடிநம் க$_3$தி$_3$நம் சக்ரஹஸ்தம் இச்சாமி த்வாம் த்$_3$ரஷ்டுமஹம் ததை$_2$வ| தேநைவ ரூபேண சதுர்பு$_4$ஜேந ஸஹஸ்ரபா$_3$ஹோ ப$_4$வ விஶ்வமூர்த்தே||** (11-46) - இந்த பயங்கர ரூபத்தை மறைத்துக் கொண்டு முன்னைய வண்ணமே கிரீடமென்ன, சங்குசக்கரங்களென்ன, கதையென்ன இவற்றை யேந்தியவனாய் முன்பிருந்த நாலு கைகளோடு கூடிய அந்த க்ருஷ்ணரூபத்தையே காண விரும்புகிறேன். (க்ருஷ்ணன் அவதரிக்கும் போது சதுர்புஜங்களுடனேயே அவதரித்தான். வசுதேவர் கேட்டுக் கொண்டபடி இரண்டு கைகளை மறைத்துக் கொண்டான் கம்ஸவதம் வரையில். பிறகு நான்கு கைகளுடனேயே இருந்ததாகத் தெரிகிறது. சிசுபாலன் கண்ணனை நான்கு கைகள் உடையவனாகவே கூறியுள்ளான். இங்கு அர்ஜுநனும் 'தேனைவரூபேண சதுர்பு$_4$ஜேன' என்றே கூறுகிறான்.)

திருவல்லிக்கேணி வேங்கட க்ருஷ்ணன் நெடியோனாய் ஒரு திருக்கையில் பாஞ்சஜன்யமேந்தி மற்றொரு திருக்கையை தன் திருவடியைப் பற்றும்படி ஸேவை ஸாதிப்பதும், உத்ஸவர் பார்த்தஸாரதி எம்பெருமான் திருவாழி திருச்சங்கேந்தி இடது கையில் ஒரு கோலைக் கொண்டும் வலது கையால் அபயமுத்ரை காட்டியும் உடம்புக்கு ஈடாதே எதிரிகளம்புக்கு இலக்காக்கிய திருமுகத்துடன் ஸேவை ஸாதிப்பதும் லோகத்தார் பண்ணிய பாக்கியம். ஆஶ்ரிதர்க்கே பணிசெய்துபோரும் மண்ணளந்த தாளாளன் வரையெடுத்த தோளாளனுக்கு தேஹ முழுவதும் தழும்பே. 'சித்திரத்தேர்வலவா' என்றார் ஆழ்வார். விசித்ரமாக தேரை நடத்த வல்லவனே! விசித்ரமாவது - துரோணர் வியூஹம் வகுத்து நின்றால், அவரை வளைந்து சென்று அவருக்கவ்வருகே தேரைக் கொடுபோய் நிறுத்தி, அவருக்கு வ்யாபரிக்கைக்கு இடம் அறுப்பன்; பீஷ்மர் கையிலம்பு அர்ஜுநன்மேல் தையாதபடி தேரை தூரக்கொண்டுபோயும், அர்ஜுநன் கையிலம்பு பீஷ்மர்மேல் தைக்கும்படி கிட்டநிறுத்தியும் இப்படி விசித்ரமாகவிறே தேரை நடத்தியது! பார்த்தனுக்காகவே தேர் ஊர்ந்தான்; ஸ்ரீபூமிப்பிராட்டிக்காக, தேவர்களுக்காக என்பது உபலக்ஷணம்.

சீராமப்பிள்ளைக்கு ஓர் ஆபத்துக் காலத்தில் பட்டர் அருளிச்செய்த *ஶ*லோகார்த்தம்: பாண்டவர்களின் வனவாஸ காலத்தில் கண்ணனும் ஸத்யபாமை பிராட்டியும் அவர்களைக் காணவருவதாகக் கேள்விப்பட்ட பரா*ஶ*ரர் முதலான ரிஷிகள் மார்க்கண்டேய மஹர்ஷியை முன்னிட்டுக்கொண்டு பெரும்ஸபையில் வீற்றிருக்க, தர்மபுத்ரர் அவர்களிடம் 'அறவழியில் செல்லும் நான் துக்கப்பட, மறவழியில் செல்லும் துர்யோதனாதிகள் ஸுகமாயிருக்கக் காரணமென்? இக்கஷ்டத்துக்கு பரிஹாரம் சொல்லவேணும் என்ன, ஒவ்வொரு ரிஷியும் ஒவ்வொரு பரிஹாரத்தை (உபாயந்தரங்களை)ச் சொல்ல, அவை யாவற்றையும் பூர்வபக்ஷமாக்கி, ஸ்ரீமார்க்கண்டேய பகவான் எழுந்து நின்று சொன்ன *ஶ*லோகம் - ஸர்வேஷாமேவ லோகாநாம் பிதா மாதச மாத$_4$வ:| க$_3$ச்ச$_2$த்$_4$வமேநம் *ஶ*ரணம் *ஶ*ரண்யம் புருஷர்ஷப$_4$ா:|| (பாரதம்) - 'ஸுகத்திற்கோ து:க்கத்திற்கோ தர்மனைப் போலே அறவழியில் நிற்பதோ, துர்யோதனனைப் போலே மறவழியில் நிற்பதோ காரணமன்று. தன் முயற்சியால் தர்மன் இவ்வாபத்தின்று நீங்கலாமென்று ரிஷிகள் சொன்னது பொருந்தாது. ஸர்வ லோகங்களுக்கும் தந்தையும் தாயுமானவன் லக்ஷ்மீநாதனே. *ஶ*ரணமடையத்தகுந்த இக்கண்ணனை *ஶ*ரணமடையுங்கள். அதுவே உண்மையில் ஸுகஹேது; பிறவழிகளை உபாயமாகக் கொள்வது துக்கஹேது. இக்கண்ணனே உங்களுக்குத் தஞ்சமாவான்' என்றருளிச்செய்தார். ஸம்ஸாரத்தைப் பார்த்தால் பயப்பட வேணும். ஸர்வே*ஶ*வரனைப் பார்த்தால் பயங்கெடவேணும். அவனைப் பார்த்து பயம் கெட்டிலனாகில் பகவத் ப்ரபாவம் அறிந்திலன். ஸம்ஸாரத்தைப் பார்த்து பயப்பட்டிலனாகில் ஸம்ஸார ஸ்வபாவம் அறிந்திலன்.

மேலே, க்ருஷ்ணன் தனது ஸாமாந்ய ரூபத்தைக் காட்டி அர்ஜுநனை ஆ*ஶ*வாஸப்படுத்தி, **நாஹம் வேதை$_3$ர் ந தபஸா ந த$_3$ாநேந ந சேஜ்யயா| *ஶ*க்ய ஏவம்விதே$_4$ா த்$_3$ரஷ்டும் த்$_4$ருஷ்டவாநஸி மாம் யத$_2$ா||** (11-53) - நான் உனக்குக் காட்டிய இந்த ரூபத்தை வேத$_3$ாத்யயன யாக$_3$ த$_3$ான ஹோம தபஸ்ஸுக்களாலே எவனாலும் காணமுடியாது. **ப$_4$க்த்யா து அநந்யா *ஶ*க்ய அஹமேவம் விதே$_4$ாSர்ஜுந| ஜ்ஞாதும் த்$_3$ரஷ்டும் ச தத்த்வேந ப்ரவேஷ்டும் ச பரந்தப||** (11-54) - நான் ஸ்வயம்ப்ரயோஜன ப$_4$க்தியாலேயே (*ஶ*ாஸ்த்ரங்களால்) அறிவதற்கும், காண்பதற்கும், அடைவதற்கும் கூடியவன். '*ஶ*ுத்$_3$த$_4$ ப$_4$ாவம் க$_3$தோ ப$_4$க்த்யா *ஶ*ாஸ்த்ராத்$_3$ வேத்$_3$மி ஜநார்த்தனம்' (நான் ப$_4$க்தியினாலே *ஶ*ாஸ்த்ரங்கொண்டு ஜநார்த்தனனையறிகிறேன்) என்றானிறே ஸஞ்ஜயன். 'வேத$_3$ாநு வசநேந யஜ்ஞேந த$_3$ாநேந தபஸாSநா*ஶ*கேந ப்$_3$ராஹ்மணா விவிதி$_3$ஷந்தி' (ப்ருஹ.) - அந்த பரமாத்வை வேத மோதுதலாலும், வேள்வியாலும், தானத்தாலும், தவத்தாலும் அறிய விரும்புகிறார்கள் - என்று உபநிஷத் ஓதியிருக்க, 'எவனாலும் காணமுடியாது' என்னலாமோவென்னில் - பக்தியோடு கூடிய இவற்றால் அறியமுடியுமே தவிர, பக்தியில்லாத கேவல வேதாத்யயனம் இத்யாதிகளால் காணவரிது என்பது கண்ணன் கருத்தாகக் கொள்வது.



ஸம்ஸாரஸர்ப்ப ஸந்தஷ்ட நஷ்டசேஷ்டைக பேஷஜம் |
க்ருஷ்ணேதி வைஷ்ணவம் மந்த்ரம் ஶ்ருத்வா முக்தோ பவேத் நர: ||

(ஸம்ஸாரமாகிற பாம்பினால் கடிக்கப்பட்டு செயலற்றிருக்கும் மக்கள் க்ருஷ்ணன் எனும் மந்த்ரத்தை கேட்டவுடன் விடுபட்டவர்களாகிறார்கள்)



ஸ்ரீ உ.வே. தேசூர் நல்லான் சக்ரவர்த்தி ஸ்ரீநிவாஸ வரதாசார்ய ஸ்வாமி

தர்ஶனே தர்ஶனே ஸந்திவிவாதா: ஸர்வவாதிநாம் ।
ஸம்மதம் ஸர்வலோகாநாம் தர்ஶநம் சக்ரவர்த்திநாம் ॥
நௌமி நல்லான் சக்ரவர்த்தி வம்ஶ்யம் ஸத்குணஸாகரம் ।
ஸ்ரீந்ருஸிம்மாசார்ய தநயம் ஸ்ரீவாஸ வரதம் குரும் ॥



இந்நூலாசிரியர் :

தேசூர் நல்லான் சக்ரவர்த்தி ஸ்ரீவத்ஸாங்கன்

அர்ஜுநனுக்கு பயமே மேலோங்கி, கேவலம் நமது பக்தியால் விஶ்வேஶ்வரனான இவனை அடைய முடியுமோ! என்று ஸந்தேஹ பார்வையை வெளிப்படுத்த, 'நான் பக்தி சுலபன், என்னையறிய காண அடைய அநந்யபக்தியால்தான் முடியும்; பற்றற்றவனாய் என்னிடம் பக்தியுள்ளவனாய் ஶாஸ்த்ர முறைப்படி வர்ணாஶ்ரமத்திற்குத் தக்க கர்மங்களை பலனை இச்சியாது பகவத் கைங்கர்யமாக செய்யவேணும்' என்று நியமித்தருள்கிறான்.

ப்ரஹ்லாத₃ நாரத₃ பராஶர புண்ட₃ரீக வ்யாஸ அம்ப₃ரீஷ ஶுக ஶௌநக பீ₄ஷ்ம தா₃ல்ப்₄யாந்| ருக்மாங்க₃த₃ அர்ஜுந வஸிஷ்ட₂ விபீ₄ஷணாதீ₃ந் புண்யாநிமாந் பரம ப₄ாக₃வதாந் ஸ்மராமி|| எனும் ப்ரஸித்த ஶ்லோகம் பகவத்பக்தியில் சிறந்தவர்களைத் தொகுத்தளிக்கிறது. எம்பெருமானுக்கு எவ்வளவு பெருமையிருந்தாலும் உண்மையான அன்புக்கு ஏங்குபவன். தன் பக்தனுக்கு தன்னையே கொடுத்து நிற்பவன். அவனையடைய அவனருளே உபாயம். மற்றவை எதுவும் உபாயமாகாது. இருப்பினும் ஶாஸ்த்ரஜந்ய ஜ்ஞானத்தாலே அவனிடம் விஶ்வாஸம் பிறந்து அவனை இடைவிடாமல் த்யானித்து பகவத்ஸாக்ஷாத்காரமேற்பட்டு அவனைப் பெற்றல்லது தரிக்கமாட்டாத பரமபக்தியும் தலையெடுக்கப் பெற்று மோக்ஷத்தையடையயியலும்.

* * * * *

## பன்னிரண்டாம் அத்யாயம் – ப₄க்தி யோக₃ம்

முன் அத்யாயத்தின் இறுதியில் ப்ரஸ்தாவிக்கப்பட்ட பக்தியோகத்தின் சிறப்பையும், பக்தியோடு தொடர்புள்ள விஷயங்களையும் இவ்வத்யாயத்தில் கூறுகிறான். சென்ற அத்யாயத்தின் கடைசியில் பகவானையுள்ளபடி அறிந்து கண்டு அடைவதற்கு எல்லையற்ற அநந்யப₄க்தியே உபாயம் என்னப்பட்டது. பக்தியின் உத்க்ருஷ்டதை (மேன்மை), ஆரம்ப நிலையில் பக்தியை எவ்வாறு அநுஷ்டிக்க வேணும், பக்தியில் இழிய இயலாதவன் தன்னை பகவச்சரீரமாக அநுஸந்தித்து கர்மயோகத்தை யநுஷ்டிக்க வேணும், கர்மயோக அனுஷ்டானத்துக்குதவும் குணப்ரகாரங்கள், பக்தியோக நிஷ்டனிடம் பகவானுக்குள்ள அதிக ப்ரீதி – இவை இவ்வத்யாயத்துக்கு விஷயங்கள்.

'யதோபாஸநம் ப₂லம்' என்கிறபடி ஆஶ்ரிதனுக்கு, அவனவன் நிலைக்குச் சேர, பலன் வேறுபட்டிருக்கும். அசித்தைப் பற்றிய பலன் ஐஶ்வர்யம். சித்தாகிற ஜீவனைப் பற்றி ஏற்படுவது கைவல்யம். ஈஶ்வரனைப் பற்றி வருவது பகவதநுபவ கைங்கர்யமாகிற மோக்ஷ புருஷார்த்தம். பகவத்ப்ராப்தியை விரும்புபவன் முதலில் தன்னைப்பற்றி (ஜீவாத்மாவை) யறிந்து சிந்தனம் பண்ண வேணும். இந்த ஜீவாத்ம சிந்தனம் பரமாத்ம சிந்தனமான பக்திக்கு உதவுவதே. பக்தி அங்கி என்றால் ஜீவாத்ம சிந்தனம் அதற்கு அங்கம் என்னலாம். ஜீவாத்ம சிந்தனத்தை அங்கமாகக் கொள்ளாமல் ஜீவாத்மாவை அடைவதையே விரும்புமவன் கேவலன்.

இப்படி ப$_4$க$_3$வதுபாஸகர், ஆத்மோபாஸகர் எனும் இருவரில் எவர் சிறந்தவர் என்று கேட்கிறான் அர்ஜுநன். அதற்கு பகவான், **மய்யாவேஶ்ய மநோ யே மாம் நித்யயுக்தா உபாஸதே| ஶ்ரத்$_3$த$_4$யா பரயோபேதா: தே மே யுக்ததமா மதா:||** (12-2) (அர்ஜுநா! எவர் என்னிடம் அளவிலா அன்புடன் ஶ்ரத்தையோடு மனதை என்னிடமே வைத்து என்னையடைய வேண்டுமென்று பக்தி செய்கிறார்களோ, அவர்களே சிறந்தவர் என்பது என் கருத்து.) மேல் மூன்று ஶ்லோகங்களாலே ஆத்ம சிந்தனம் செய்வது கடினம் என்று விளக்குகிறான் பகவான்.

ஜீவன் கண்ணுக்குத் தோன்றாதவன். அணு ஸ்வரூபன். மனதினால் சிந்திக்க எட்டாதவன். தேஹத்திலும் வேறுபட்ட ஜீவன் நித்யன், மாறுதலற்றவன், ஜ்ஞான ஸ்வரூபன் என்றறிந்து ஜீவ ஸ்வரூபத்தில் ஈடுபடும் மனநிலை, தேஹமே ஆத்மா என நினைத்துப்போரும் ஸம்ஸாரிக்கு மிகவும் கடினம். பகவானது கல்யாண குணங்கள், அவனது ஸௌந்தர்ய திருமேனி இவை அவலம்பமாய் (பிடிப்பாய்) அமைகின்றன. ஜீவாத்மாவை சிந்திப்பதற்கு இதைப்போல் அவலம்பம் இல்லை. ஆக பகவத் சிந்தனம் ஸுகரம். பகவத் சிந்தனத்தில் இந்த்ரியங்களை பகவத்விஷயத்தில் ஈடுபடுத்தயியலும். நாவே! அவனைப் பாடு, காலே! அவன் ஸந்நிதிக்குச் செல், கையே! அவனைத் தொழு என்று திசை திருப்ப வாய்ப்புண்டு. ஜீவாத்ம சிந்தனத்தில் இந்த ஸௌகர்யம் கிடையாது. மேலும் பக்தி மூலம் பகவானை விரைவில் அடைவதுபோல், ஆத்ம சிந்தனம் செய்து அவனையடைவதென்பது காலதாமத்திலேயே முடியும். ஆகவே ஸுலபமாகச் செய்து விரைவில் பயன்தரக்கூடிய பக்தியோகமே மேம்பட்டது.

ஈஶ்வர ஸ்வரூபத்தைப் பார்த்தால் ஶ்ரிய: பதியாய், அகிலஹேய ப்ரத்யநீகனாய், ஸமஸ்த கல்யாணகுணாத்மகனாய், அந்த குணங்களுக்கு ப்ரகாஶமாய் ஸௌந்தர்ய ஸௌகுமார்யாதி ஆகரங்களையுடைய திவ்யமங்கள விக்ரஹத்தையுடையனாய் உபயவிபூதிநாதனாய் நிரதிஶய போக்யனாயிருக்கும். ஜீவாத்ம ஸ்வரூபத்தைப் பார்த்தால் அநந்யார்ஹமாய், ஸ்வரக்ஷணத்தில் ப்ராப்தியன்றிக்கே பரதந்த்ரமாயிருக்கும். ஸ்வஸ்வரூப பரஸ்வரூபங்களைக் காணவொட்டாத இடைச்சுவராய் இருக்கும் விரோதியான அசித் ஸ்வரூபம். இவ்விரோதி ப்ரபலமாயிருக்கையால் இதைக் கழித்து பகவதநுபவரூபமான பரமபுருஷார்த்தமான மோக்ஷத்தை லபிப்பதற்கு, அநந்ய ஸாத்யமாயிருக்கும் ஈஶ்வரனையே உபாயமாகப் பற்றவேணும். இப்படி அவனையே உபாயமாய் பரிக்ரஹிக்குமிடத்தில் ஈஶ்வரவிஷயம், பர வ்யூஹ விபவ அந்தர்யாமி அர்ச்சையென்று பஞ்சப்ரகாரமாயிருப்பினும், நம் கண்ணனுக்குத் தோற்றிக்கொண்டு நம் அருகே கோயில் கொண்டிருக்கும் எம்பெருமானின் அர்ச்சாவதாரமே ஆஶ்ரயணீய ஸ்தலமாயிருக்கும். அவன் ஸந்நிதியில் வர்த்திப்பதே ஸ்வரூபத்துக்குச் சேர்ந்தது. அதுவும் 'இவன் இப்பேற்றை பெறக்கடவன்' என்றவன் நினைக்கிலிறே ஸித்திப்பது! அப்பரவஸ்து பிராட்டியுடன் சேர்ந்தே மிதுனமாயிருப்பதால், ப்ரபந்நர்களாகிய நமக்கு இம்மிதுநமே உத்தேஶ்யம்.

(இங்கு ஶ்லோகத்திலுள்ள அக்ஷர ஶப்தம் ஜீவாத்மாவையே குறிக்கும். ப்₃ரஹ்மஸூத்ரத்தில் (1-3-9) ஜகத்காரணத்வம் முதலான பெருமைகளைச் சொன்னதால், அங்கு அக்ஷர ஶப்தத்திற்கு ப்ரஹ்மம் பொருளாகக் கொள்ளப்பட்டது. மேலும் (கீதையில்) 15ம் அத்யாயத்தில் சொல்லப்படும் புருஷோத்தம வித்யா ப்ரகரணத்தில் ப₃த்₃த₄ஜீவனை க்ஷரம் என்றும் பரிசுத்த (முக்த) ஜீவனை அக்ஷரம் என்றே கூறுவதால், இங்கும் அக்ஷர ஶப்தம் ஜீவாத்மாவையே குறிப்பதாகக் கொள்ள வேணும்.)

**தேஷாமஹம் ஸமுத்₃த₄ர்த்தா ம்ருத்யு ஸம்ஸார ஸாக₃ராத்|**
**ப₄வாமி நசிராத் பார்த்த₂ மய்யாவேஶித சேதஸாம்|| (12-7)**

(எவர் தாங்கள் செய்யும் லௌகிக செயல்களாகட்டும், ஸந்த்யாவந்தனம், பகவதாராதனம், யஜ்ஞம், யாகம் முதலான வைதீக கருமங்களாகட்டும் அவற்றை எனக்கு அர்ப்பணம் செய்து, வேறு பயனைக் கருதாமல், என்னையடைவதையே பரம ப்ரயோஜனமாகக் கொண்டு என்னிடம் பக்தி செய்கிறார்களோ அவர்களை ஸம்ஸாரக் கடலினின்று கரையேற்றுகிறேன்.) இதனால் நாம் செய்யும் பக்தியும் மோக்ஷோபாயமன்று; ஸித்த தர்மமான அவனே தன்னையடைவிக்கிறான் எனும் கருத்து கண்ணனாலேயே கூறப்பட்டதாகிறது.

மேலே, **அப்₄யாஸ யோகத்**தைப் பற்றி கூறுகிறான். அப்யாஸம் என்றால் பழக்கம். யோகம் என்றால் த்யானம். 'விஷயங்களில் ஈடுபடும் மனதை அவற்றிலிருந்து திருப்பி என்னிடம் நிலைநிறுத்த யியலவில்லையெனில், எனது கல்யாண குணங்களை அடிக்கடி த்யானம் செய்து பழகுவாய்; அதன் மூலம் என்னை எளிதில் அடையலாம்' என்கிறான். பகவானது எண்ணிறந்த கல்யாண குணங்கள் அனைவருடைய நெஞ்சையும் ஈர்க்கக் கூடியவையன்றோ. அவையாவன - 'குழலழகர் வாயழகர் கண்ணழகர் கொப்பூழில் எழுகமலப் பூவழகர்' என்கிறபடி அவயவ ஸௌந்தர்யம்; ஸுக்ரீவன், குஹன், ஶபரி, ஆய்ச்சியர் முதலான தாழ்ந்தவர்களோடும் உயர்ந்தவனான தான் ஒரு நீராகக் கலந்து பரிமாறும் ஸௌஶீல்யம்; 'ஸுஹ்ருத் நாராயண:' என்றபடி அனைவர்க்கும் நன்மையை விரும்பும் ஸௌஹார்த்தம்; 'செய்த குற்றம் நற்றமாகவே' என்றபடி அடியார் குற்றங்களைக் குணமாகக் கொள்ளும் வாத்ஸல்யம்; 'வ்யஸநேஷு மநுஷ்யாணாம் ப்₄ருஶம் ப₄வதி து₃:க்கி₂த:' (மனிதர்க்கு துன்பம் ஏற்படும்போது, அவர்களிலும் மிகுதியாகத் துன்புறுகிறான் ராமன்) என்று கூறப்படும் கருணை; எல்லையற்ற இன்பமாயிருக்கிற மாது₄ர்யம்; 'ஸமுத்ர இவகாம்பீ₄ர்யே' என்கிறபடி கடல்போலே ஆழங்காண வொண்ணா நெஞ்சின் காம்பீர்யம்; 'எனக்கே தன்னைத் தந்த கற்பகம்' என்கிறபடி தன்னையும் தன் உடைமையையும் தமர்க்கு ஆக்கிவைக்கும் ஔத₃ார்யம்; 'சென்று கொன்று வென்றிகொண்ட வீரனே' என்கிறபடி எதிரிகள் இருக்குமிடம் சென்று அவர்களை வெற்றி கொள்ளும் ஶௌர்யம் (சூரத்தன்மை); இப்படி வெற்றி கொள்வதை

அநாயாஸமாகச் செய்யும் வீர்யம்; மூலப₃லம் போன்ற பெரும் ஸேனையிலும் புகுந்து அவற்றை சி₂ன்னபி₄ன்னமாக்கும் திறமையாம் பராக்ரமம்; ஸர்வத்தையும் ஒரே காலத்தில் ப்ரத்யக்ஷமாக (நேரே) அறிகையான ஸர்வஜ்ஞத்வம்; விரும்புவதை உடைத்தா யிருக்கையாகிற ஸத்யகாமத்வம்; நினைத்ததை ஸாதிக்கவல்ல ஸத்யஸங்கல்பத்வம்; தன்னையொழிந்த அனைத்தையும் நியமிக்க வல்லமையாகிற ஸர்வேஶ்வரத்வம்; தன்னையொழிய அனைத்துக்கும் எல்லாவகை காரணமுமாயிருக்கும் ஸர்வகாரணத்வம் இத்யாதிகள். ஆக, இப்படிப்பட்ட **என்னுடைய கல்யாண குணங்களை அநுஸந்திப்பதாகிற 'அப்யாஸ யோகம்'** மூலம் என்னிடம் நெஞ்சை செலுத்தி என்னையடைய விரும்புவாய் என்று கூறினானாயிற்று.

கர்மங்கள் செய்வதிலேயே பழக்கப்பட்ட நெஞ்சை மேற்படி த்யானம் செய்வதில் ஈடுபடுத்த முடியவில்லையெனில், எனக்கு உகந்து பணி செய்வதில் ஈடுபடுவாய். விரைவில் என்னிடம் உறுதிபெற்ற நெஞ்சையடைந்து பக்தியோகம் ஸித்₃தி₄யாகி என்னையடைவாய் (12-10). அதாவது அப்யாஸம் பண்ண முடியாதவனுக்கு கைங்கர்யத்தில் ஈடுபடுவதே உத்தம ஸாதனம்; பகவத் கைங்கர்யம் பக்தியை யுண்டுபண்ணி, பிறகு அப்யாஸம் அடைவே ஏற்படும் என்கிறான். பகவானுக்கும் தொண்டுகளாவன: ஆலய நிர்மாணம், நந்தவனம் அமைத்தல், திருவிளக்கெரித்தல், திருவலகிடுதல், நீர் தெளித்து கோலமிடுதல், மாலை கட்டுதல், திருவாராதனம் செய்தல், ப்ரதக்ஷிணம் ஸ்தோத்ரம் செய்தல், நமஸ்கரித்தல் முதலியன. இவற்றிலொன்றை அன்புடன் செய்து வந்தால் த்யானவிரோதிகள் நீங்கி அவனிடம் பக்தி செய்து அவனையடையலாம் என்றபடி. இத்தொண்டுகளை பணத்தாலோ உடலினாலோதான் செய்ய வேண்டுமென்பதில்லை. மனத்தினாலும் வாக்கினாலும் செய்தாலும் பகவான் திருவுள்ளமுகந்து நமக்கு ஆத்ம நன்மையைச் செய்வன்.

பகவத்கைங்கர்யமே ஸ்வரூபாநுகூலமான ஐஶ்வர்யம். இவன் அடிமை செய்து ஸ்வரூபம் பெறும்; அவன் அடிமை கொண்டு ஸ்வரூபம் பெறும். 'லக்ஷ்மணோ லக்ஷ்மீ ஸம்பந்ந:' (லக்ஷ்மணன் ஐஶ்வர்யத்தால் நிறையப் பெற்றவன்) என்று இளைய பெருமாளுக்கு கைங்கர்யமே ஸம்பத்து என்னப்பட்டது. 'அஹம் ஸர்வம் கரிஷ்யாமி' என்று எல்லாவடிமையும் செய்கையாலன்றோ 'சுற்றமெல்லாம் பின்தொடர' என்றது. பெருமாள் ராஜ்யத்தை இழந்தார்; இவர் கைங்கர்ய ஸாம்ராஜ்யம் பெற்றார். 'ஸது நாகவர ஶ்ரீமாந்' - கஜேந்திராழ்வானுக்கு ஸர்வேஶ்வரன் அரைகுலைய தலைகுலைய வந்து விழவேண்டும்படியான ஆர்த்திதன்னை ஒரு ஸம்பத்தாகச் சொல்லிற்று. ஸ்வரக்ஷணத்தில் ஸ்வவ்யாபாரத்தை விட்டபின்பிறே ஶ்ரீமாந் ஆனான். அவனுக்கு விரோதி முதலையல்ல; அஹங்காரம். 'அந்தரிக்ஷகத ஶ்ரீமாந்' (ஆகாஶத்தை யடைந்த செல்வன்) என்று விபீஷணாழ்வான் ராவண ஸம்பந்தத்தையுதறி பெருமாள்பக்கல்வர ஓரடியிட்டவாறே ஸ்வரூபாநுரூபமான ஶ்ரீ குடிபுகுந்தது. பிராட்டி

லங்கையில் இருக்கச் செய்தேயும் ஸஹவாஸ தோஷத்தாலே பிராட்டி கடாக்ஷம் பெற்றிலன். இளைய பெருமாளைப் போலே படைவீட்டை விட்டு ஆகாஶத்தில் கிளம்பியவாறே ஸ்ரீமாந் ஆனான்.

இதுவரை பக்தியோகத்தைப் பற்றிப் பேசிய பகவான், இடையில் ப்ராஸங்கி₂கமாக ஆத்மநிஷ்டையைப் பற்றிப் பேசுகிறான்: மேற்சொன்னபடி பக்தியோகத்தின் தொடக்க நிலையான பகவத் கர்மங்களை செய்ய இயலாதவன், ஜீவாத்ம யோகத்தைப் பற்றிநின்று அதன் தொடக்க நிலையான கர்மயோகத்தை யநுஷ்டிக்கக் கடவன் என்கிறான். அதாவது பக்தியோகத்தில் ஶக்தியில்லாதவன் அதை ஸாதித்துத்தரும் உபாய பரம்பரையின் எல்லை நிலமான கர்மயோகத்தை அநுஷ்டிக்க வேணும் என்று விதி₄த்தானாயிற்று. கர்மத்தினால் பாபம் நீங்கப்பெற்று, ரஜஸ்தமோ குணங்கள் குறைந்து, மனஶ்ஶாந்தி யுண்டாகி, ஆத்மத்யானம் கைகூடி, அந்த த்யானத்தினால் ஆத்மதர்ஶநம் ஏற்பட்டு அதன்பின் பரபக்தி ஏற்படும். ஆக, பக்தியோகத்தில் ஶக்தியில்லாதவன் ஆத்மத்யானம் செய்வதே சிறந்தது. ஆத்மத்யானம் ஸித்திப்பதற்கு ஆத்மஜ்ஞானத்தை யுள்ளடக்கிய கர்மயோகத்தில் ஈடுபடுவதே சிறந்தது என்றானாயிற்று.

பகவான் தனக்கு பக்தனிடத்திலேயே அதிப்ரீதியுள்ளதென்பதை இவ்வத்யாயத்தின் கடைசி ஶ்லோகமான 20-ம் ஶ்லோகத்திலே சொல்லப்போகிறான். அதற்கு முன் ஏழு ஶ்லோகங்களால் கர்மயோகத்தில் ஊன்றி நிற்பவன் கைக்கொள்ள வேண்டிய குணங்கள் எவையெவை என்று கூறுகிறான். இதனை, பகவானுக்குப் ப்ரியனான பக்தன் எத்தகைய குணங்களைக் கொண்டிருக்க வேணும் என்பதைக் கூறுவதாகவும் கொள்ளலாம்.

ஸகல உயிர்களிடத்தும் த்வேஷமின்றி கருணை காட்டுபவனாய், அஹங்கார மமகாரமற்று ஸுக துக்கங்களை ஸமமாகக் கருதுபவனாய், எப்போதும் குதூகலத்துடனும், ஸர்வேஶ்வரனே எல்லாரிலும் மேம்பட்டவன் யென்பதில் நிஶ்சய புத்தியுடையவனாய், தன் புத்தியை பகவானிடத்திலேயே வைத்து பக்தி செய்பவனாய், உலகத்தில் ஒட்டற்று இருப்பதால் எதிலும் பயமின்றி யிருப்பவனாய், ஆஹார ஸுத்தி யுடையவனாய், விருப்பு-வெறுப்பு பகை-நட்பு புகழ்ச்சி-இகழ்ச்சி இவற்றை ஸமமாக கருதுபவனாய் இத்தகைய குணங்களை யுடைவன் எனக்கு ப்ரியமானவன். ('கடல் சூழ்ந்த மன்னுலகம் வாழ' என்கிறபடி விரோதிகள் உட்பட யாவரும் வாழவேணும் எனும் எண்ணம் கர்மயோகிக்கு மிகவும் அவஶ்யம். நமக்கு கேடு செய்பவனிடமும் 'நமது பாபம் இவன் மூலம் பயன் தருகிறது. இவன் நேரே நமக்கு விரோதியல்ல' எனும் நல்லெண்ணம் கொள்ளவேணும். த்ரவ்யார்ஜனத்தை (பொருளீட்டுவதை) பகவதாராதனத்திற்கென்றே பண்ணவேணும். இவையாவும் பக்தி முளைத்து வளர ஸாதனங்களாக அமையும்.)

இறுதியில் **'மத்பரமா: ப₄க்தாஸ்தே அதீவ மே ப்ரியா:'** (12-20) - 'யார் அமுதம் போன்ற பக்தி யோகத்தினால், கீழே சொன்னபடி என்னை அடைவதையே சிறந்த பயனாகக் கொண்டு, *ஶ்*ரத்தையுடன் என்னை உபாஸிக்கிறார்களோ அந்த பக்தர்கள் எனக்கு மிகவும் ப்ரியமானவர்கள்' என்கிறான். ஆக, மத்யம ஷட்கத்தில் பகவதநுபவம் உண்டாவதன் பொருட்டு ஜ்ஞானத்தோடு கூடிய கர்மயோகத்தால் உண்டாகும் பக்தியோகம் சொல்லப்பட்டதாயிற்று.

**மத்யம ஷட்கம் நிறைவுபெற்றது.**

* * * * *

## பதிமூன்றாம் அத்யாயம் – க்ஷேத்ர க்ஷேத்ரஜ்ஞ விபாக யோகம்

'பகவான் இந்த இறுதி ஷட்கத்தில் புதிதாக அர்த்தங்களைச் சொல்லவில்லை; முதலிரண்டு ஷட்கங்களில் சொன்னதையே மீண்டும் ஆராய்ந்து வெளியிடுகிறான்' என்றே நமதாசார்யகள் அபிப்ராயம். **ப்ரத₂ம ஷட்கத்தில்** - பகவானே பரமப்ராப்யன் (அடையத்தக்கவன்). அவனை அடைவதற்கு உபாயமாயிருப்பது பக்தியோகம் எனப்படும் பகவத் உபாஸனம். இந்த பகவத் உபாஸனத்திற்கு அங்கமாயிருப்பது ப்ராப்தாவான (அடைபவனான) ஜீவாத்மாவை உள்ளபடி அறிவது. ஜீவாத்ம ஸாக்ஷாத்காரத்தை கர்மயோகம், ஜ்ஞானயோகம் எனும் இரண்டு உபாயங்களையும் அநுஷ்டிப்பதால் பெறலாம். இவ்வுபாயங்கள் ஆத்மாநுபவம் எனும் கைவல்ய மோக்ஷத்தை ஸாதித்துக் கொடுக்கும் - இது முதல் ஷட்கத்தின் தாத்பர்யம். **ம₄த்யம ஷட்கத்தில்** - பரமப்ராப்யமான பகவானைப் பற்றிய யாதாத்ம்ய ஜ்ஞானம்; அவனது பெருமைகளையறிந்து வேறு பயன் கருதாமல், இவைவிடாமல் செய்ய வேண்டிய பக்தியோகமானது கர்மஜ்ஞான யோகங்களால் உண்டாகிறது; பக்தியோகம் ஐ*ஶ்*வர்யார்த்திகளுக்கும் கைவல்யார்த்திகளுக்கும் அவரவர் விரும்பும் பலனைத் தருவதற்கு ஸாதனமாகிறது எனும் விஷயங்கள் மத்யம ஷட்கத்தின் தாத்பார்யமாக விளங்குகிறது. இனி, கடைசி ஆறு அத்யாயங்களாகிற **அந்திம ஷட்கத்தில்** - அசித்தான மூலப்ரக்ருதி, சித்தான ஜீவாத்ம தத்வம், இவையிரண்டும் கூடியிருக்கும் ஸ்தூல உலகம், ஸர்வே*ஶ்*வரன் இவற்றைப் பற்றிய யாதாத்ம்ய ஜ்ஞானம், கர்மஜ்ஞான பக்தியோகங்களின் ஸ்வரூபம், அவற்றைக் கைக்கொள்ளும் வகைகள் என்று முன்னிரண்டு ஷட்கங்களில் சொல்லப் பட்டவையே மீண்டும் *ஶோ*தித்து *ஸம்*ஶ*ய விபர்யயமற சொல்லப்படுகிறது என்பது அந்திம ஷட்கத்தின் தாத்பர்யமாக அறியலாகிறது.

இனி, இந்த பதிமூன்றாம் அத்யாயத்தில் தேஹம் ஆத்மா இவற்றின் ஸ்வரூபமும், இவையிரண்டின் உண்மைத் தன்மைகளை ஆராய்ந்து சொன்ன விளக்கமும், அசித்தான

---

* ஸம்*ஶ*யம் (ஐயம்) - பழுதோ, பாம்போ என்கிற நிலை.

விபர்யயம் (திரிபு) - பழுதை பாம்பாகவே நினைக்கை (விபரீத ஜ்ஞானம்).

தேஹத்தினின்று வேறுபட்ட சித்தாகிற ஆத்மாவையடைவதற்கு உபாயமும், ஆத்மா அநாதிகாலமாக அசித்தோடு கட்டப்பட்டிருப்பதற்கு காரணமும், ஆத்மாவை அசித்திலிருந்து பிரித்து அநுஸந்திக்கும் முறையும் கூறப்படுகிறது.

**இத₃ம் ஶரீரம் கௌந்தேய க்ஷேத்ரமித் யபி₄தீ₄யதே|**
**ஏதத்₃யோ வேத்தி தம் ப்ராஹு: க்ஷேத்ரஜ்ஞ இதி தத்₃வித₃:|| (13-1)**

(அர்ஜுநா! இந்த தேஹம் ஆத்மாவின் போகத்திற்கு விளைநிலம் என்று சொல்லப்படுகிறது. இந்த ஶரீரத்தை எவன் அறிகிறானோ, அவனை ஜ்ஞானிகள் க்ஷேத்ரஜ்ஞன் என்று கூறுகிறார்கள்.) இந்த ஶரீரம், ஆத்மாவுக்கு கர்மம் காரணமாக ஏற்படும் போ₄கங்₃களின் விளைநிலமாயுள்ளதால் க்ஷேத்ரம் (விளைநிலம்) என்று சொல்லப்படுகிறது. இந்த ஶரீரத்தினுள் இருக்கும் ஜீவன் இவ்வுடலை இது என் தலை, இவை என் கண்கள், இது என் ஶரீரம் என்று க்ஷேத்ரமாகிற ஶரீரத்தை அறிகிறானாகையால், ஜீவன் 'க்ஷேத்ரஜ்ஞன்' எனப்படுகிறான். இவ்வாறு அறிவுடையோர் பகர்வர்.

**க்ஷேத்ரம் - ஶரீரம்; ஶரீரத்தை யறிந்தவன் க்ஷேத்ரஜ்ஞன் (ஆத்மா).** இதனால் 'ஶரீரமும் ஜீவனும் வெவ்வேறு தத்வங்கள்' என்ற ஶரீர ஆத்ம விவேகம் தெரிவிக்கப்பட்டதாயிற்று. ஶரீரத்துக்கு அறிவில்லை. அறிவுள்ளது ஜீவனே. ஶரீரம் அறிவுக்கு விஷயமாயிருக்கும். ஜீவன் அறிபவனாகவும் அறிவுக்கு விஷயமாகவும் இருக்கக்கூடும். கர்மம் காரணமாக ஸம்ஸாரிகளுக்கு ரஜஸ்தமோ குணங்கள் நிறைந்திருப்பதால், ஒன்று சேர்ந்திருக்கும் தேஹாத்மாக்களில் புறப்பொருளான ஶரீரம் புலப்படுகிறது; அகப்பொருளான ஆத்மா புலப்படுவதில்லை. அதனால் தே₃ஹத்தையே ஆத்மாவாக மயங்குகிறார்கள்.

அடுத்த **'க்ஷேத்ரஜ்ஞம் சாபி மாம் வித்தி'** (13-2) என்று தொடங்கும் ஶ்லோகத்துக்கு ஸ்ரீராமாநுஜ பாஷ்யம் மிக விரிவாக உள்ளது. 'ஶரீரமும் ஆத்மாவும் வேறானவை; என்னை ஆத்மாவாகக் கொண்டவை என்றறிவாய். இந்த அறிவே கைக்கொள்ளத்தக்க அறிவு என்பது என் கருத்து' என்கிறான். க்ஷேத்ரம், க்ஷேத்ரஜ்ஞன் இரண்டும் ப்ரஹ்மாத்மகம் - ப்ரஹ்மத்தை (கண்ணனை) ஆத்மாவாகக் கொண்டவை. பற்பல ஜீவராஶிகளில் (ஶரீரங்களில்) உள்ள ஜீவர்கள் வெவ்வேறு, ஒவ்வொன்றும் ப்ரஹ்மாத்மகம். 'வெள்ளை வஸ்த்ரம்' என்றால், வஸ்த்ரம் என்பது வஸ்துவாகவும் வெண்மை அதில் பிரிக்கமுடியாத ஒரு குணமாகவும் அறிகிறோம். வெண்மை வஸ்த்ரத்தை விட்டுத் தனியாக இருக்க முடியாது. வஸ்த்ரத்தில் சேர்ந்தேதானிருக்க வேணும். அதாவது வெண்மைக்கு தனியிருப்பு (ப்ருதக் ஸித்தி) கிடையாது. பிரிக்க முடியாத குணத்தை (வெண்மையை) அப்ருதக்ஸித்த விஶேஷணம் என்பர். அசேதனம் (ஜடம்) எப்போதும் ஒரு சேதநனுடன் (அஜடம்) சேர்ந்தேதானிருக்கும். (ஜடம் - தானே ப்ரகாசியாது. அஜடம் - தனக்குத் தானே ப்ரகாசிக்கும். இருட்டறையில் உள்ள ஜடம் தன்னைக் காண்பிக்க

வெளிச்சத்தை அபேக்ஷிக்கும். ஆனால் சேதநனான ஜீவாத்மா இருட்டறையிலும் 'நான்' என்று தனக்கு ப்ரகாசிக்கும்.) சேதநாசேதனங்களிரண்டும் ப்ரஹ்மாத்மகமாதலால் பகவானுக்கு அவை **அப்ருதக்ஸித்த விஶேஷணம்.** 'யஸ்ய ஆத்மா ஶரீரம் யஸ்ய ப்ருத்வீ ஶரீரம்' (எந்த பரமபுருஷனுக்கு ஜீவாத்மா ஶரீரமோ, எவனுக்கு ப்ருத்வி – அசேதனம் – ஶரீரமோ' என்று ஶ்ருதி காட்டும் அர்த்தமிது. ஆழ்வாரும் 'நீராய் நிலனாய்த் தீயாய்க் காலாய் நெடுவானாய் சீரார் சுடர்களிரண்டாய்ச் சிவனாய் அயனானாய்' என்று சேதநாசேதனங்களை ஒக்க எடுத்து இவற்றுக்கு ஆத்மா பகவான் என்றருளிச் செய்தார். இனி 'க்ஷேத்ரஜ்ஞ:' (ஜீவனும்) என்று ஒருமையில் கண்ணன் கூறியிருக்கிறானே! ஜீவாத்மா ஒன்றா பலவா? எனில் – ஜீவ ஸமூஹத்தை ஜ்ஞான ஆகாரத்தால் ஒன்றாயிருப்பதைப் பற்றி ஒன்று என்று சொல்லியிருக்கிறான். குவியல் நெல்லை 'இது ஒரேநெல்' என்று ஜாதியைப் பற்றிச் சொல்வது போல், இதுவும் ஜாத்யேக வசனம். 'க்ஷேத்ர க்ஷேத்ரஜ்ஞயோர் ஜ்ஞாநம் யத்தத் ஜ்ஞானம் மதம் மம" – அர்ஜுநா! மற்றெல்லா அறிவும் அறிவல்ல; பகவானுக்கும் சித் அசித்துக்களுக்கும் உள்ள ஶரீராத்ம ஸம்பந்தத்தைப் பற்றியறிவதே அறிவு என்பது என் ஸித்தாந்தம் என்றான்.

க்ஷேத்ரம் என்பது யாது? எத்தகையது? அதன் விகாரங்கள் யாவை? எதிலிருந்து உண்டாயிற்று? க்ஷேத்ரஜ்ஞன் யார்? அவனுடைய ப்ரபாவம் என்ன? இவற்றை சுருக்கமாகச் சொல்வதாகக் கூறுகிறான் (13-3). நிலம், நீர், தீ, காற்று, ஆகாசம் என்கிற பஞ்ச பூதங்களும், அஹங்காரம், மஹத், மூலப்ரக்ருதி இப்படியான எட்டுவித அசித்துக்கள் இந்த தேஹம் உண்டாகக் காரணமாகும். கண், காது, மூக்கு, நாக்கு, தோல் எனும் ஐந்து ஞானேந்த்ரியங்களும், கை, கால், வாய், பாயு, உபஸ்தம் ஆகிய ஐந்து கர்மேந்த்ரியங்களும், மனம் ஒன்றும், ஆக பதினொன்றும் உடலைச் சார்ந்துள்ளன. இவை போக்யங்களான ஶப்த, ஸ்பர்ச, ரூப, ரஸ, கந்த விஷயங்களை அநுபவிக்க ஏற்பட்டவை. ஸுகம், துக்கம், விருப்பு, வெறுப்பு இவை ஶரீர ஸம்பந்தத்தால் ஜீவனுக்கு ஏற்படுபவை. இவைகளை ஶரீரகார்ய மென்னலாம். நல்ல கெட்ட அநுபவங்களுக்கு ஶரீரம் துணையாயுள்ளது. கர்மாநுகுணமாக ஜீவன் பெறும் உடலுக்கேற்ப உண்டாகும் இவ்வநுபவங்கள் ஶரீரத்திற்கே; பரிசுத்த ஜீவனுக்கு இவை கிடையாது. உடலைப் பற்றிய நமக்கு, ருசியும் வாஸனையும் ஏற்படுகிறது. ஒரு ஒட்டகத்தின் ஶரீரத்திலுள்ள ஜீவனுக்கு வேப்பிலை ருசிக்கிறது; நமக்கு கசக்கிறது. ஶரீர குண வேறுபாடுகளால் ஒருவனுக்கு இன்று பிடித்த வஸ்து நாளை பிடித்தமில்லை. முற்பிறவி கர்மபலன்களை யநுவிப்பதற்காகவே ஜீவன் ஒரு ஶரீரத்தைப் பெறுகிறான். அக்கர்ம பலனை யநுபவித்து தீர்ந்தவுடன் 'சட்டி சுட்டது கைவிட்டது' என்பது போல் அந்த உடலை விட்டு வெளியேறுகிறான். (13. 3-6)

இனி ஐந்து ஶ்லோகங்களாலே ஆத்மஜ்ஞான ஸாத₄னமாக கைக்கொள்ள வேண்டிய குணங்களைக் கூறுகிறான். அமாநித்வம் – பெரியோரை அவமதிக்காமை. வித்யை தனம்

குலம் இவற்றை பெருக்க மதித்து சான்றோரை அவமதித்தல் கூடாது. அ3தம்பி4த்வம் – பிறர் நம்மை புகழ்வதற்காக ஒரு நற்செயலை செய்கிற த3ம்ப4ம் கூடாது. அஹிம்ஸா – ஶாஸ்த்ர விருத்3த4மாகத் தனக்கோ பிறர்க்கோ அனர்த்த2த்தை விளைக்கும் தீங்கு செய்யாமலிருக்கை. க்ஷாந்தி: – பிறரால் துன்புறுத்தப்பட்டாலும் கோபம் கொள்ளாதிருக்கும் பொறுமை. ஆர்ஜவம் – மெய் நா மனத்தால் ஒருபடிப்பட்டிருக்கும் நேர்மை. ஆசார்யோபாஸநம் – ஆசார்யனிடம் நன்றியுள்ளவனாய், அவனை வணங்கி தொண்டு செய்தல். ஶௌசம் – தூய்மை. குளித்தலால் ஏற்படும் ஶுத்3தி4மாத்ரமன்று; மனதில் பேராசை கூடாது; வாக்கினால் பொய் சொல்லுதல், நிஷித்த போஜனம் கூடாது. ஸ்தை2ர்யம் – பாஹ்ய குத்ருஷ்டி மதத்தோர் எத்தனை விதண்ட3வாத3ம் செய்தாலும் ஶாஸ்த்ர விஷயங்களில் நிலைநிற்கும் அசையாமை. ஆத்ம விநிக்ரஹம் – விஷயாந்தரங்களில் பட்டிமேயாமல் மனதை அடக்குதல். இந்த்ரியார்த்தேஷு வைராக்யம் – ஶப்3த3ாதி விஷயங்களில் பற்றில்லாமை. அஹங்காரம் – ஆத்மாவல்லாத தேஹத்தில் ஆத்மா (நான்) எனும் நினவு. இத்துடன் தன்னதல்லாததை 'தனது' என்று நினைக்கும் மமகாரமும் சேர்ந்தே வருமாதலால், அஹங்கார மமகாரமற்றிருத்தல். ஜன்ம ம்ருத்யு ஜரா வ்யாதி4 து3:க்க2 தே3ாஷாநுத3ர்ஶநம் – பிறப்பு, இறப்பு, மூப்பு, நோய், துன்பம் ஆகிய தோஷங்களை யநுஸந்திப்பது. புத்ர த3ாராக்3ருஹாதி3ஷு அஸக்தி: அநபி4ஷ்வங்க3: – மக்கள், மனைவி, வீடு முதலியவற்றில் அதிக பற்று இல்லாமலிருத்தல், ஸங்கமாகிற பற்றில்லாமலிருத்தல், அது இல்லாமையால் அபி4ஷ்வங்க3மாகிற பாசத்துக்கு இடமில்லை. இஷ்டாநிஷ்டோபத்திஷு நித்யம் ஸமசித்தத்வம் ச – மனதை விகாரமடையச் செய்யும் இஷ்டாநிஷ்டங்கள் வந்தாலும் ஆனந்தமோ அருவருப்போ இல்லாமல் மனம் ஒருபடிப்பட்டிருக்கை. மயிச அநந்ய யோகே3ந அவ்யபி4சாரிணிப4க்தி: – பகவானிடம் பக்தி செய்யும்போது மற்ற விஷயங்களில் பற்றில்லாதிருத்தல், பலனை விரும்பி பக்தி செய்தல் விபசார தோஷமாகையால் அது தவிர்த்து பகவானை அடைதலே பலனாக நினைத்தல், மறந்தும் புறந்தொழாமை. விவிக்ததே3ஶ ஸேவித்வம் – மனித ஸஞ்சாரமற்ற இடத்தில் வாழ்வது. ஜந ஸம்ஸதி3அரதி: – ஸம்ஸாரிஜனக் கூட்டத்தில் ஈடுபாடின்மை. அத்4யாத்ம ஜ்ஞாந நித்யத்வம் – ஆத்மஜ்ஞான விஷயத்தில் என்றும் ஈடுபட்டிருக்கை, தத்வஜ்ஞாநார்த்த2 சிந்தனம் – தத்வ ஜ்ஞானத்தை பயனாகக் கொண்ட சிந்தனத்தில் ஈடுபட்டிருக்கை. இவ்விருபது குணங்களும் ஆத்ம ஸாக்ஷாத்காரத்திற்கு ஸாதனமானவை. ஶரீர ஸம்பந்தத்தால் ஏற்படும் மற்ற குணங்கள் யாவும் ஆத்மஜ்ஞானத்திற்கு தடையாயிருப்பவை. (13. 7-11). ஆக இதுவரை க்ஷேத்ரம் எனப்படும் ஶரீரமும் அதன் கார்யங்களும் விளக்கப்பட்டன.

இனி ஆறு ஶ்லோகங்களில் ஜீவனுடைய ஸ்வரூபம் விளக்கப்படுகிறது. ஆத்மாவானது ஆதி அந்தமற்றது. எனக்கு அடிமைப்பட்டிருப்பது. ஜ்ஞான குணத்தாலே

பெருமையுடைத்தாகையாலே பெரியதாயிருப்பது. ஆத்ம ஸ்வரூபம் கார்ய நிலையில் தேவாதி நாம ரூபங்களோடு கூடியிருப்பதால் 'ஸத்' என்றும், காரணநிலையில் அந்த நாம ரூபங்கள் இல்லாத நிலையில் 'அஸத்' என்றும் கூறப்படுவதுபோல், அசித்ஸம்பந்தம் நீங்கிய (முக்த) நிலையில் ஆத்மஸ்வரூபம் 'ஸத்' என்றோ 'அஸத்' என்றோ கூறத்தகாதது. முக்தி நிலை ஜீவாத்மாக்கள், கை கால் முதலிய அங்கங்களால் ப$_3$த்$_3$த$_4$ ஜீவர்கள் இங்கு செய்யும் காரியங்களை, ஸங்கல்பத்தாலேயே அங்கு செய்கிறார்கள். எல்லாவிடத்திலும் இப்படி காரியம் செய்யலாம்படி உலகிலுள்ள ஸர்வ வஸ்துக்களிலும் ஜ்ஞானத்தாலே வ்யாபித்திருக்கிறார்கள். ஜீவர்கள் ஸம்ஸார நிலையில் இந்த்ரியங்களின் மூலம் விஷயங்களை அறிய வல்லவர்கள். முக்தி நிலையில் இந்த்ரியங்களை எதிர்பாராமலேயே விஷயங்களை அறியவல்லவர்கள். ஸம்ஸார நிலையில் தேவாதி தேஹங்களை த$_4$ரிப்பதுபோல் முக்தி நிலையிலும் பரமாத்மாவின் நினைவையொட்டி பல ஶரீரங்களை எடுத்துக் கொள்பவன். முக்தி நிலையில் ஸத்வம் ரஜஸ் தமஸ் எனும் ப்ராக்ருத குணங்களற்றவன்; ஆனால் அக்குணங்களின் பலனையநுபவிக்கும் வல்லமையுள்ளவன். ப$_3$த்$_3$த$_4$ தஶையில் பஞ்ச பூதங்களாலான ஶரீரத்தினுள் இருப்பவன், கர்மம் கழிந்ததும் வெளியேறுகிறான். உடலின் ஹ்ருதயத்தில் சலனமின்றி இருப்பவன். அணு ஸ்வரூபனாகையால் புலன்களால் அறியமுடியாதவன். யோகிகளுக்கு காணத்தக்கவன்; தேஹாத்மாபிமானிகளுக்கு காண முடியாதவன். ஜீவராஶி களில் உள்ள ஆத்மாக்கள் யாவும் ஒரே மாதிரியானவை. தனித்தனியானவை. ஜீவனே உடலை த$_4$ரிக்கிறான். பசியை உண்டாக்குபவன் அவனே. அவனே உணவை உட்கொண்டு ஜீரணிக்கவும் செய்து, ஸாரத்தை யெடுத்துக் கொண்டு, மிகுதியை வெளியில் தள்ளுகிறான். ஜீவாத்மா ஒளிமிக்கவன். ஜ்ஞானமே வடிவானவன். ஜ்ஞானத்தை குணமாகக் கொண்டவன். ப்ரக்ருதியிலும் வேறுபட்டவன். (13.12-18)

**ப்ரக்ருதிம் புருஷம் சைவ வித்$_3$த்$_4$யநாதீ$_3$ உப$_4$ாவபி|**
**விகாராம்ஶ்ச கு$_3$ணாம்ஶ்சைவ வித்$_3$தி$_4$ ப்ரக்ருதி ஸம்ப$_4$வாத்|| (13-19)**

ஶரீரத்திற்கு காரணமான ப்ரக்ருதியும் அநாதி. இந்த ப்ரக்ருதியும் ஜீவாத்மாவும் அனாதியாய் சேர்த்திருப்பவை யென்றறிவாய். விருப்பு வெறுப்பு முதலான குணங்களும் அமாநித்வம் முதலான நற்குணங்களும் ப்ரக்ருதியினால் உண்டாகின்றன. புலன்கள் செய்யும் செயல்களுக்கு ஜீவனே காரணமாகிறபடியால் அதன் பலனையநுபவிப்பவனும் ஜீவனேயாகிறான்., ஜீவன் ஶரீரத்திலிருந்துகொண்டு ஸத்வரஜஸ் தமோ குணங்களினாலான ஸுக துக்கங்களை யநுபவிக்கிறான். இந்த குணாநுபவ பற்றுதலே பிறவிகள் எடுக்கக் காரணமாகிறது. ஸத்வ குணப் பற்றுதலால் தேவ மனுஷ்ய பிறவிகளும் மற்ற இரண்டு குணங்களின் பற்றுதலால் திர்யக் ஸ்தாவர பிறவிகளும் ஏற்படுகின்றன. ஶரீரத்தைப் பொறுத்தவரை ஜீவன் ஈஶ்வரன் என்னத்தகுந்தவன் (13-22).

எவன் ப்ரக்ருதி, ஜீவன் இவைகளின் உண்மையான தன்மைகளை அறிகிறானோ அவன் மறுபிறவி அடைவதில்லை. ஆத்மதர்ஶநம் கர்மயோகத்தாலுல் ஜ்ஞான யோகத்தாலும் அடையக்கூடும். இவைகளைச் செய்ய இயலாதோர் மஹான்களிடம் ஶரீரம் ஆத்மாவைப் பற்றி கேட்டறிந்து ஆத்மத்யானம் செய்கிறார்கள். அவர்களும் ஸம்ஸார பந்தத்தை கடக்கிறார்கள் (13-25).

உலகிலுள்ள எல்லா ஜங்கம ஸ்தாவரங்களும் உடல் உயிர் இவைகளின் சேர்க்கையினாலேயே உண்டானவை. அவயக்கூட்டங்களான உடலுக்கு ஜீவனே எஜமானன், ஈஶ்வரனாகிறான். இவ்வாறு ஜீவஸ்வரூபத்தையறிந்தவன் ஸம்ஸார பந்தத்தை விடுத்து மேலான கதியை (ஶுத்தாத்மாவை) அடைகிறான். (13.28)

எல்லாச் செயல்களும் உடலின் புலன்கள் மூலம் நடைபெறுகின்றன. ஜீவன் தானாகவே செய்வதில்லை என்பதை அறிந்தவன் ஆத்ம நன்மையை அடைகிறான். (13-29)

ஶரீரமே முக்குணங்கள் உள்ளவை. இவை ஜீவனுக்கில்லை. ஜீவன் பலவிதமான ஶரீரங்களில் இருந்தாலும் அச்சரீங்களின் தன்மையை அடைவதில்லை. (13-32). ஜீவன் தன் உடல் முழுதும் தன் ஞான ஒளியினால் ப்ரகாசிக்கிறான்; முக்த தஶையில் அவனது ஜ்ஞானம் எங்கும் பரவி ப்ரகாசிக்கக்கூடியது. (13-33).

இவ்வாறு ஶரீர ஸ்வரூபமும், ஆத்ம தர்ஶநம் பெற உபாயமான அமானித்வம் முதலான குணங்களும், ப$_3$த்$_3$த$_4$ முக்த தஶைகளில் ஜீவாத்மாவின் தன்மையும், ஸம்ஸார பந்தத்திற்கு காரணமும், அதிலிருந்து விடுபட்டு பரிசுத்த ஆத்மாவை அடையும் வழியும் இவ்வத்யாயத்தில் சொல்லப்பட்டது.

* * * * *

## பதினான்காம் அத்யாயம் – கு$_3$ணத்ரய விபா$_4$க யோக$_3$ம்

முன் அத்யாயத்தில், ஒன்றோடொன்று சேர்ந்திருக்கும் ப்ரக்ருதி புருஷர்களைப் பற்றிய உண்மையறிவு விளக்கப்பட்டது. இடையே ஆத்மப்ராதிக்கு பரம்பரையா காரணமான அமாநித்வம் முதலான குணங்கள் விளக்கப்பட்டன. ப்ரக்ருதி புருஷர்களை பகுத்தறிந்து, முன் சொல்லப்பட்ட அமாநித்வம் முதலான குணங்களைக் கைகொண்டால் ஸம்ஸார ஸம்பந்தம் நீங்கப்பெற்ற ஆத்மாவையடையலாமென்றும், ஆத்மா ஶரீரத்தில் கட்டுண்டிருப்பதற்கு காரணம் ப்ரக்ருதியின் (ஶரீரத்தின்) முக்குணங்களாலுண்டாகும் இன்பதுன்பங்களில் பற்றே என்றும் உணர்த்தப்பட்டது.

இவ்வத்யாயத்தில் அதற்கு விளக்கமாக, ஶரீரத்திலுள்ள ஸத்வாதி குணங்கள் ஸம்ஸார பந்தத்தில் மூட்டும் முறையும், அந்த பந்தத்தை எவ்வாறு நீக்குவது என்பதும் ப்ரதானமாகச்

சொல்லப்படுகின்றன. ப்ராஸங்கி₃கமாக, ஸத்வாதி குணங்கள் செயலுக்கு காரணமாயிருக்கும் தன்மையும், ஐஶ்வர்ய, கைவல்ய, பகவத்ப்ராப்தியெனும் மூன்று ப்ராப்யங்களும் பகவானைத் தஞ்சமாகப் பற்றியவர்களுக்கே ஸித்திக்கும் என்றும் காட்டப்படுகிறது.

**இத₃ம் ஜ்ஞானம் உபாஶ்ரித்ய மம ஸாத₄ர்ம்ய மாகதா:|**
**ஸர்க்கே₃Sபி நோபஜாயந்தே ப்ரளயே ந வ்யதந்தி ச|| (14-2)**

ஜீவன் ஸம்ஸார மண்டலத்தில் கட்டுப்படுவதற்கு ஸத்வாதி குணங்கள் காரணமாகின்றன; அக்கட்டிலிருந்து நீங்குவதற்கு வழியாது என்று மேலே சொல்லப்போகிற விஷயங்களைப் பற்றிய ஜ்ஞானம், அதை மனனம் செய்யும் ஜீவனை ஸம்ஸாரக்கட்டிலிருந்து விடுவித்து ஆத்மாப்ராப்தியையும் பகவத்ப்ராப்தியையும் அளிக்கவல்லது என்கிறான்.

பகவத்ப்ராப்தியான பயன் எத்தகைத்து என்னில் - மம ஸாத₄ர்ம்யம் ஆக₃தா: - என்னோடு ஸாம்யத்தைப் பெறுகிறார்கள். ஸாம்யமாவது 'அபஹதபாப்மா' முதலான எட்டு குணங்களின் ஆவிர்ப்ப₄ாவமேயாம். இந்த ஸாம்யம் எத்தகைத்து என்பதை 'நிரஞ்ஜந: பரமம் ஸாம்யமுபைதி' (முண்டக.) - ஸம்ஸார ஸம்பந்தமற்றவனாய் என்னோடு மேலான ஒற்றுமையை யடைகிறான் என்று ஶ்ருதியிலும் ஓதப்பட்டது. பகவானாகவே ஆகிவிடுகிறானன்று. இரண்டு வஸ்துக்ககளிடையேதான் ஸாம்யம் (அது இதற்குச் ஸமம்) என்று கூறமுடியும். ஆதலால் முக்தி தஶையில் ஜீவன் தனிப்பட்ட தத்வமே. ஆக, ஸாயுஜ்யமாகிறது வஸ்து ஐக்யம் சொல்கிறதன்று; அவன் திருவடிகளிலே பரிசர்யை பண்ணும் என்கிறது. ஸாயுஜ்யம் ப்ரதிபந்தா யே தீவ்ரப₄க்தாஸ் தபஸ்விந:| கிங்கரா மம தே நித்யம் பவந்தி நிருபத்ரவா:|| (பரம ஸம்.) - யாவர் மிக்க பக்தியுடையவர்களாய், உபாஸனை செய்கிறவர்களாய் ஸமமான உயர்ந்த ஜீவனத்தையடைந்தார்களோ, அவர்கள் விரோதி கழிந்தவர்களாய் எப்பொழுதும் என்னுடைய தொண்டர்கள் ஆகிறார்கள். ஆக₃தா: என்று பன்மையில் கூறியிருப்பதால், மோக்ஷ தஶையிலும் ஜீவாத்மாக்கள் பலர் என்று தேறிற்று.

**மமயோநிர் மஹத்₃ ப்₃ரஹ்ம தஸ்மிந் க₃ர்ப்ப₄ம் த₃த₄ாம்யஹம்|**
**ஸம்ப₄வ: ஸர்வபூ₄தாநாம் ததோ ப₄வதி ப₄ாரத|| (14-3)**

(உலக உற்பத்திக்கு காரணமான மூலப்ரக்ருதி என்னுடையது. ஜீவனை அதில் நான் சேர்க்கிறேன். அதனால் எல்லா ஜீவராஶிகளின் பிறப்பும் உண்டாகிறது.) ப்ரஹ்மம் என்கிற பதம் பகவானையும் குறிக்கும்; நான்முகனையும் குறிக்கும்; சிலவிடங்களில் ஜீவனையும் அசித்தையுங்கூடச் சொல்லும். இங்கே அசித்தான மூலப்ரக்ருதியைச் சொல்கிறது. பஞ்சபூதங்களுக்கும் காரணம் அஹங்கார தத்வம்; அதற்கு காரணம் மஹான் தத்வம்; அதற்கும் காரணம் மூலப்ரக்ருதி. ஆகையால் 'மஹத் ப்₃ரஹ்ம' (பெரியதான ப்ரஹ்மம்) என்னப்பட்டது.

'தஸ்மிந் க$_3$ர்ப்பம் த$_3$த$_4$ாம்யஹம்' என்பதால் ப்ரக்ருதி புருஷ ஸம்யோக$_3$ம் பகவானான தன்னாலேயே செய்யப்படுகிறது; ஜீவனை ஸம்ஸாரத்தில் கட்டிவைப்பதும் தானே என்கிறானாயிற்று. மூலப்ரக்ருதியாகிற க$_3$ர்ப்ப பையில் அண்டத்தில் படைக்கப்படும் எல்லா ஜீவர்களையும் தன் *ஶ*ரீரத்தில் கொண்ட ஸமஷ்டிபுருஷனான பிரமனை கர்ப்பம் போலே சேர்த்ததை முற்பாதி *ஶ்*லோகம் கூறுகிறது. அந்த பிரமனால் செய்யப்படும் நாலுவகை (தேவ மனுஷ்ய திரியக் ஸ்தாவர) யோனிகளின் பிறப்பு பிற்பாதியால் கூறப்படுகிறது. தே$_3$வாதி$_3$ பே$_4$த$_3$மின்றிக்கே யிருக்கை - ஸமஷ்டி; தே$_3$வாதி$_3$ பே$_4$த$_3$முண்டாகை - வ்யஷ்டி.

பூ$_4$த *ஶ*ப்தம் பஞ்சபூதங்களை குறிக்காது. (ஜீவர்களின் பந்தத்திற்கு ஹேதுவைக் காட்டும் ப்ரகரணமாகையால்) அசேதந தேஹத்தில் கட்டுப்பட்டிருக்கும் ஜீவரா*ஶி*களையே குறிக்கும். **மம யோநி:** என்று கூறப்பட்ட **மூலப்ரக்ருதி 'என்னுடைய *ஶ*ரீரம்'** என்றதால், மூலப்ரக்ருதிவி*ஶி*ஷ்டமான எம்பெருமானே உபாத$_3$ான காரணமென்று ஸித்திக்கிறது. 'தானோருருவே தனிவித்தாய்' – தான் வித்து (உபாதாநம் வேறில்லை – ஏகமேவ); ஓர் வித்து (நிமித்தம் வேறில்லை – அ$_3$த்விதீயம்); தனிவித்து (ஸஹகாரி வேறில்லை – ஸதே$_3$வ). தேஹாத்ம விவேகமுடைய பல ஞானிகள் வாழ்ந்த பரத குலத்தில் பிறந்த நீ 'ஸர்வே*ஶ்*வரனே எல்லா ஜீவரா*ஶி*களுக்கும் காரணமாயிருப்பவன்' எனும் ஜ்ஞானத்தைப் பெறவேண்டாவோ என்று கருத்து.

**ஸத்வம் ரஜஸ்தம இதி கு$_3$ணா: ப்ரக்ருதி ஸம்ப$_4$வா:|**
**நி$_3$பத்$_4$நந்தி மஹாபாஹோ தே$_3$ஹே தே$_3$ஹிந மவ்யயம்|| (14-5)**

(அர்ஜுநா! ஸத்வம் ரஜஸ் தமஸ் எனும் முக்குணங்களும் ப்ரக்ருதியில் என்றும் சேர்ந்திருப்பவை. இக்குணங்கள் நித்யனான ஜீவனை *ஶ*ரீரத்தில் கட்டி வைக்கின்றன.)

**ஸத்வம் ரஜஸ் தமஸ் மூன்றும் ப்ரக்ருதியின் இயல்பான குணங்கள்.** கார்யநிலையில் முக்குணங்களின் ஏற்றத்தாழ்வு உண்டாவதால் 'ப்ரக்ருதி: ஸம்ப$_4$வா:' எனப்பட்டது. 'இதி' *ஶ*ப்தம் இக்குணங்கள் ப்ரக்ருதிக்கு ஸ்வரூப நிரூபகமாய் (தனித்தன்மையாய்) இருக்கையைக் காட்டும். அவ்யயம் – இயற்கையில் ஜ்ஞானத்தில் ஏற்றத்தாழ்வற்ற ஜீவனை, குணஸம்பந்தம் ஏற்றத்தாழ்வு உடையவனாக ஆக்கிவிடுகிறது.

இனி, அக்குணங்களின் தன்மையையும், அவை ஜீவனைக் கட்டும் விதத்தையும் விவரிக்கிறான். ஸத்வகுணம் ஜீவனின் ஜ்ஞானத்தை மறைக்காது ப்ரகா*ஶி*க்கச் செய்யும்; ஆரோக்ய வாழ்வைத்தரும். அதே ஸமயம் ஸுகத்தில் பற்றையும் ஜ்ஞானத்தில் பற்றையும் விளைவித்து அவற்றை மேன்மேலும் பெற விருப்பத்தை விளைவித்து புருஷனுக்கு தேஹ ஸம்பந்தங்களை மேன்மேலே யுண்டாக்கி ஸம்ஸாரத்தில் கட்டும். ரஜோ குணம் ஆணுக்கும் பெண்ணுக்கும் மிடையே காமத்தை (ராகம்) விளைவிக்கும்; *ஶ*ப்த ஸ்பர்*ஶ* ரூப ரஸ

கந்தங்களாகிற ஐந்து விஷயங்களிலும் ஆசையையும் (த்ருஷ்ணை), புத்ரமித்ராதிகளிடம் பாசத்தையும் (ஸங்க$_3$ம்) விளைவிக்கும். காமத்தினால் கர்மம் புரிவதில் ஆசையை (கர்மஸங்க$_3$ம்) விளைவித்தும், த்ருஷ்ணா ஸங்கங்களுக்கு காரணமாயிருந்தும் ஜீவனை ஸம்ஸாரத்தில் கட்டும். தமோ குணம் (உள்ள நிலைக்கு மாறான) விபரீத ஜ்ஞானத்தையும், தர்மத்துக்கும் புறம்பான அறிவையும் (மோஹநம்) உண்டாக்கும். கவனமின்மை, சோம்பல், தூக்கம் ஆகியவற்றை விளைவித்து, செய்யவேண்டிய கர்மங்களை அநுஷ்டியாமலிருக்கச் செய்து, பாபங்களை விளைவித்து ஸம்ஸாரத்தில் கட்டும். (14. 6-8). (ரிஷிகள் ஆஹாரத்தினாலேயே ஸத்வகுணம் பெற்று, நல்ல ஜ்ஞானத்தையும் தேஹ ஆரோக்யத்தையும் பெற்றிருந்தனர். ஸாத்விக வஸ்துக்களால் தயாரித்த உணவை பகவந் நிவேதிதமாக ஆக்கி உட்கொள்ளவேணும். பூண்டு வெங்காயம் நிஷித்தம்.)

ஒவ்வொரு குணமும் மற்ற இரண்டையும் அடக்கி தான் மேலோங்க முயற்சிக்கும். எந்த ஸமயத்தில் எந்த குணம் மேலோங்கி நிற்கிறது என்பதை எப்படி யறிவதென்னில் - கண் முதலான புலன்களின் அறிவு ஒளிர்ந்தால், ஸத்வகுணம் மேலோங்கியிருப்பதை யறியலாம். பேராசை, விஷயப்பற்று, மிகுந்த முயற்சி இவை ரஜோகுணம் மேலோங்கியிருப்தைக் காட்டும். விவேகமின்மை, அஜாக்ரதை, மோஹம் இவை தமோகுணம் மேலோங்கியிருப்பதைக் காட்டும். இதைக் கண்டு எக்குணம் மேலோங்கியுள்ளது என்பதையறியலாம் (14.10-13).

ஸத்வகுணம் மேலோங்கியிருக்கும்போது ஒருவன் மரணமடைந்தால் ஆத்மதத்துவத்தையறிந்த ஞானிகளின் குலத்தில் பிறக்கிறான். ரஜோகுணம் மேலோங்கியிருக்கும்போது ஒருவன் மரணமடைந்தால் பலனை விரும்பி கர்மங்களை யநுஷ்டிப்போர் குலத்தில் பிறக்கிறான். தமோகுணம் மேலோங்கியிருக்கும்போது மரணமடைந்தால் அவன் மிகக்குறைந்த அறிவுள்ள திர்யக் ஸ்தாவர யோனிகளில் பிறக்கிறான். இவர்கள் இக்குணங்களின் பயனாக மேன்மேலும் அத்தகைய பிறவிகளையடைந்து, மேன்மேலே அப்பிறவிப்பயன்களையும் அடைகிறார்கள் (14. 14-16). (மரண காலத்தில் உடல் பூமியில் இருக்க வேணும். படுக்கையில் இருத்தல் கூடாது. தர்ப்ப படுக்கை ஸத்வத்தை வளர்க்குமாகையால் உபாதேயம். தர்ப்பாஸனத்திலிருந்து நற்கருமங்களைச் செய்வது மரபு. வால்மீகி முனிவர் தர்ப்பாஸனத்திலமர்ந்தே ஶ்ரீராமாயணம் பட்டோலை கொண்டார்.)

**ஸத்வாத் ஸஞ்ஜாயதே ஜ்ஞாநம் ரஜஸோ லோப$_4$ ஏவச|**
**ப்ரமாத$_3$ மோஹௌ தமஸ: ப$_4$வதோऽஜ்ஞாந மேவச|| (14-17)**

(மிகுதியான ஸத்வ குணத்தால் ஆத்மஸாக்ஷாத்கார ஜ்ஞானம் விளையும். மிகுதியான ரஜோ குணத்தால் ஸ்வர்க்காதி பலன்களில் ஆசையுண்டாகும். மிகுதியான தமோ குணத்தால்

கவனமின்மையாலுண்டாகும் தீய கர்மங்களில் ப்ரவ்ருத்தியும் அதன் விளைவாக விபரீத ஜ்ஞானமும் அஜ்ஞானமும் உண்டாகும்.)

ஸத்வகுணம் மிகுதியாக உடையோர் ஆத்மஸாக்ஷாத்காரத்தைப் பெற்று காலக்ரமத்தில் ப்ராரப்த கர்மம் அழியும்போது மோக்ஷமாகிற உயர்நிலைக்கும் செல்வர். ரஜோகுணம் மிகுதியாக உடையோர் ஜ்யோதிஷ்டோமாதி கர்மங்களைச் செய்து ஸ்வர்க்கமும் இந்நிலவுலகுமாய் பிறவியிலேயே உழல்வர்கள். தமோகுணம் மிகுதியாக இருப்போர் தாழ்ந்த தமோகுணச் செயல்களாலே அறிவின்மை மிகுந்த கடைநிலைப் பிறவிகளையே அடைந்து துன்புறுவர் (14.18).

இனி, குணங்களின் கர்த்ருத்வத்தைக் கூறி 26-ம் *ஶ்*லோகமீறாக 'குணங்களைக் கடந்து நிற்கும் வகை' விவரிக்கப்படுகிறது. ஸாத்விகமான ஆஹாரத்தை உண்பதாலும், பலனில் பற்றற்ற கர்மங்களை யநுஷ்டிப்பதாலும் படிப்படியாக ஸத்வகுணம் வளரப் பெற்றவர்கள் மேலே சொல்லப்போகும் குணங்கடந்த நிலையை யடைந்து மோக்ஷத்தையடைவர்கள். 'தமக்குரிய செயல்களில் குணங்களே செயல்புரிகின்றன; குணங்களிலும் வேறுபட்ட தான் செய்யவில்லை' என்று எவன் அறிகிறானோ அவன் பிறவிச் சூழலிலிருந்து விடுபட்டு மோக்ஷமடைவான். 'காமோSகார்ஷீத் நாஹமகார்ஷம்' (காமம் செய்தது, நான் செய்யவில்லை) முதலான இடங்களில், செய்தவன் தானேயாயிருந்த போதிலும், காமத்தால் தூண்டப்பட்டே செய்கையாலே 'நான் செய்யவில்லை' என்று கூறுவது போன்றது இது (14.19).

அர்ஜுநனின் கேள்வி (14-21): முக்குணங்களைக் கடந்தவனின் அடையாளம் யாது? அவன் ஸ்வரூபஸ்வபாவங்கள் எத்தகையது? இக்குணங்களை அவன் கடப்பது எப்படி? ஸ்ரீக்ருஷ்ணன் பதில் (14-22): ஸத்வத்தின் பயன் ஜ்ஞானம். ரஜஸ்ஸின் கார்யம் செயல். தமஸ்ஸின் விளைவு விபரீத ஜ்ஞானமும் மயக்கமும். குணங்களைக் கடந்தவன் இவைகள் வந்தபோது களிப்பதுமில்லை, வெறுப்பதுமில்லை. விரும்புவது கிடையாவிடில் வருத்தமடைவதில்லை. 'உடலின் குணங்கள் செயல்களைச் செய்கின்றன, நான் செய்யவில்லை' என்று உத₃ாஸீனனாய் தன் ஆத்மாநுபவத்திலேயே ஊன்றியிருப்பன். ஆத்மசிந்தனத்திலேயே ஈடுபட்டு, இன்பதுன்பங்கள், இஷ்டாநிஷ்டங்கள், இகழ்ச்சி புகழ்ச்சி இவைகளை ஸமமாகக் கருதுவன். *ஶ*ரீராத்ம விவேகத்துடன் மண், கல், பொன் இவைகளை துல்யமாக நினைத்திருப்பன். மான அவமானங்களை ஸமமாகக் கொள்வன். நண்பர் பகைவர்களிடத்து ஒருபடிப்பட்டிருப்பன். தன் நலத்திற்கென்று ஒரு செயலையும் செய்யாதிருப்பன். இப்படியுள்ளவனே முக்குணங்களை தாண்டினவனாகிறான் (14. 24, 25). (ஶுத்த ஸத்வம் இந்நிலவுலகில் கிடையா. ரஜஸ்தமோமி*ஶ்*ர ஸத்வ குணமே காணவியலும். ஆக, தமோ குணமும் ரஜோகுணமும் ரஜஸ்தமோமி*ஶ்*ர ஸத்வ குணமுமாகிய

முக்குணங்களைக் கடந்தவன் **கு₃ணாதீதன்** எனப்படுவான். மேற்சொன்ன தன்மைகள் இந்நிலத்தில் நம் போன்ற பாமரர்களுக்கு எவ்வளவு பழக்கம் செய்தாலும் வாய்க்கக்கூடியவையல்ல. இத்தகைய நலம் வாய்ந்தவர்கள் பூலோகம் முழுவதும் தேடினாலும் ஓரிருவர் தேறுவதும் அருமையென்னலாம். ஆயினும் இப்படிப்பட்ட *ஶ்*லோகங்களை நாம் மனனம் செய்து கொண்டேயிருந்தால் பெரிதும் பயன்படும் என்றிவ்வளவே சொல்லலாம்.)

'என்னை ஒருவனையே எவன் உபாஸிக்கிறானோ, அவன் முக்குணங்கைக் கடந்து பரிஸுத்த ஜீவனையடைகிறான். நானே ஐ*ஶ்*வர்ய, கைவல்ய, பகவத்ப்ராப்திகளைத் தருவதற்கு உபாயமாவதால், என் ஒருவனிடமே அநந்யப₄க்தியை முக்குணங்களைக் கடந்தவன் செய்கிறான்' என்று சொல்லி இந்த அத்யாயத்தை பூர்த்தி செய்து கொள்கிறான் ஸ்ரீகண்ணபிரான்.

இஹலோக ஐ*ஶ்*வர்யமாகட்டும், ஆத்மதர்*ஶ*நமாகட்டும் அல்லது பகவத்ப்ராப்தியேயாகட்டும் ஈ*ஶ்*வரனிடம் நிலையான ஸ்நேஹமிருப்பின் கிட்டும். 'இடந்தது பூமி எடுத்தது குன்றம் கடந்தது கஞ்சனை முன்னஞ்ச' - ப்ரளயத்திலிருந்து காக்க பூமியை குத்தி எடுத்தான்; இந்திரனால் வந்த நலிவு தீர குன்றமெடுத்தான். கம்ஸனால் வந்த நலிவு தீர அவன் மேலேறி அழித்தான்; கூப்பீடு கேட்கைக்கு பாற்கடலில் கிடந்தான்; முகம் கொடுக்கைக்கு திருமலையில் நின்றான்; இப்படி ரக்ஷ்யவர்க்கமான நம்மிடம் ஸ்நேஹத்தாலே அவன் செய்யாத செயலில்லை. நாமோவெனில், பெருமாளை உகக்கிறோம் என்று சொல்லிக்கொண்டே சோற்றை உகக்கிறோம். அதையாவது எப்போதும் உகக்கிறோமோவெனில் அதுவுமில்லை. சோறு பிடிக்காமல் சிலநாள் பட்டினி கிடக்கிறோம். ஸ்த்ரீகளை உகக்கிறோம் என்று சொல்லிக்கொண்டே சதுரங்கம் ஆடுகிறோம்; உறங்குகிறோம். ஒன்றிலும் ஸ்நேஹமில்லை. இதுவே நமக்கும் ஈ*ஶ்*வரனுக்கும் வாசி. பகவத்விஷயத்தில் போலியான ஆசையுண்டாகிலும் 'நத்யஜேயம் கதஞ்சந' என்றிருக்கும் அவன். மெய்யே ஆசைப்படிலும் விரும்புமளவு கிடைக்காது *ஶ*ப்தாதிகள் என்பதை நினைவில் கொள்ளவேணும்.

* * * * *

## பதினைந்தாம் அத்யாயம் – புருஷோத்தம யோகம்

கண்ணபிரான் முதலிரண்டு ஷட்கங்களில் சொன்னவைகளையே, மீண்டும் விவரித்து பதிமூன்றாம் அத்யாயம் முதல் சொல்லி வருகிறான். 13-ம் அத்யாயத்தில் *ஶ*ரீரம் ஆத்மா இவைகளின் ஸ்வரூப ஸ்வபாவங்களைக் கூறினான். 14-ம் அத்யாயத்தில் *ஶ*ரீரத்திற்குண்டான முக்குணங்களினாலேயே எல்லாக் கர்மங்களும் நடைபெறுகின்றன; அக்குணங்களே

ஜீவனை *ஶ*ரீரத்தில் கட்டிவைக்கின்றன; அவைகளைக் கடப்பது எவ்விதம்? அப்படித் தாண்டினவனது ஸ்வரூப ஸ்வபாவங்கள் என்ன என்பதைச் சொல்லி, ஸர்வ பலன்களையும் தரவல்ல உபாயம் தானேயாகையாலே தன்னிடமே பக்தி செய்து பரிசுத்த ஆத்மாவை அடையக்கடவன் என்றான்.

இனி, இவ்வத்யாயத்தில் ப$_4$க்தி செய்யத்தக்க எம்பெருமானுக்கு க்ஷர புருஷனாகிற ப$_3$த்$_3$த$_4$ ஜீவனும், அக்ஷர புருஷனாகிற முக்த ஜீவனும் செல்வங்களாயிருப்பவர்கள்; ஜீவர்களுக்கெல்லாம் தானே ஆத்மாவாய், அவைகள் தனக்குச் சரீரமாயுள்ளவை; தானே எல்லாவிதத்திலும் உயர்ந்தவன் என்று கூறி 'புருஷோத்தம வித்யை'யை உபதே*ஶி*க்கிறான்.

முதலில், **வேதவாக்யத்தை யொட்டி ஸம்ஸாரமானது ஒரு அரசமரமாகக் கல்பிக்கப்படுகிறது.** 'பற்றின்மை' எனும் ஆயுதம் கொண்டு எங்கும் பரவியிருக்கும் அசித் பரிணாம ரூபமான இந்த மரமாகிற ஸம்ஸார ப$_3$ந்த$_4$த்தை வெட்டிய பின்பே க்ஷரபுருஷனாகிற ப$_3$த்$_3$த$_4$ ஜீவன் அக்ஷர புருஷனாகிற முக்த ஜீவனாகிறான்.

இந்த ஸம்ஸாரமாகிற மரத்தின் வேர் மேலேயுள்ளது. நைமித்திக ஸ்ருஷ்டியில் சதுர்முக பரஹ்மா படைப்பைச் செய்வதால் வேர்மேலே காட்டப்பட்டது. தேவலோகத்தில் பூமியிலும் ஸம்ஸாரம் படர்வதால் கீழே கிளைகளும் இலைகளும் உள்ளதாகச் சொல்லப்பட்டது. வேதத்தில் பூர்வ பாகத்தில் சொல்லப்பட்ட காம்ய கர்மாக்களே இம்மரத்தின் கிளைகள். அதனால் பிறவியும் ஸம்ஸார பந்தமும் வளர்கிறது. மரத்தின் கிளைகள் ஸத்வ ரஜஸ்தமோ குணங்களால் தளிர்விட்டு படர்கின்றன. தேவ மனுஷ்ய திர்யக் ஸ்தாவரமான மரத்தின் கிளைகள் அவரவர் கர்மானுகுணமாக சில மேல் நோக்கியும் சில கீழ்நோக்கியும் படர்கின்றன. விஷயானுபவங்களே அக்கிளைகளில் உண்டாகும் தளிர்கள். இம்மரத்தின் ஆணிவேர் ஸத்யலோகத்திலும் சல்லிவேர் தேவ மனுஷ்ய லோகங்களிலும் இருக்கிறது. சேதநர்கள் தாங்கள் செய்யும் கர்மங்களினால் வேரூன்றி ஸம்ஸாரத்தில் கட்டுண்டிருக்கிறார்கள். இந்த மரம் ப்ரவாஹரூபேண நித்யம். இம்மரத்தை உறுதியான **'விஷயப்பற்று இல்லாமை'** எனும் ஆயுதத்தால் வெட்டி வீழ்த்த வேணும். அஹங்கார மமகாரம் நீங்கினவரே விஷயப்பற்று அற்றவர்; ஆசையை வென்றவர்; இன்ப துன்பங்களைக் கடந்தவர்; தெளிவான ஜ்ஞானமுள்ளவர். இவர்களே ஆத்மதர்*ஶ*நம் பெறுகிறார்கள். ஆக ஸம்ஸாரமாகிற மரத்தை உள்ளபடி யறியவே, அது வைராக்யத்தை யுண்டாக்கி மோக்ஷத்திற்கு வழிவகுக்கும் என்றதாயிற்று (15. 1-6).

'நீர் நுமதென்றிவை வேர்முதல் மாய்த்து' என்றருளிச்செய்தார் ஆழ்வார். அஹங்கார மமகாரங்களை விட்டு 'பற்றற்றவனாய் யிருத்தல்' கிடைத்தற்கரிய ஆயுதம். இதைப் பெற பரமபுருஷனையே சரணம் பற்ற வேணும். 'முக்குணங்களாலான என் மாயை (ப்ரக்ருதி) கடக்க

வொண்ணாதது; என்னையே சரணம் பற்றி சேதநர்கள் இந்த மாயையைத் தாண்டுகிறார்கள்' என்று முன்னமே சொல்லிவைத்தானன்றோ, ஆக ஸம்ஸாரமாகிற இந்த மரத்தை வெட்டக்கூடிய 'அஸங்கம்' (பற்றின்மை) என்ற ஆயுதத்தை அவனையே கால்கட்டி அவனருளால் பெறவேணும்.

'ஜீவனானவன் எனதம்*ஶ*மாயிருந்து வைத்தே ஒரு *ஶ*ரீரத்தையடைந்து அதில் வாஸம் செய்த இந்த்ரியங்கள் மூலம் விஷயங்களை யநுபவித்தபிறகு வெளிப்படுகிறான். சுத்த மனம் படைத்த யோகிகளே ஜீவனின் தன்மையை அறிகிறார்கள்; மற்றவர் அறிவதில்லை. எல்லா ஜீவர்களும் என் ஸொத்து. ஸூர்ய சந்திரர்களுடைய தேஜஸ் என்னுடையது. உலகிலுள்ள எல்லா ஜீவரா*ஶி*களிலும் நான் இருந்து தாங்குகிறேன். அவை யாவும் என்னுடையவை. எல்லா ஜீவரா*ஶி*களிலும் வயிற்றில் அக்நியாயிருந்து வாயுக்களுடன் கூடி உணவை ஜீர்ணிக்கச் செய்கிறேன்' (15. 7-14). இப்படித்தன் பெருமைகளைத் தானே சொல்லிக் கொள்ளுகிறான் கண்ணபிரான்.

**புருஷோத்தம வித்யை:** 'வேதை$_3$*ஶ்*ச ஸர்வைரஹமேவ வேத்ய:' (15-15) - எல்லா வேதவாக்யங்களாலும் அறியப்படுமவன் நானே - என்றபடி நாராயணன் ஸர்வாந்தர்யாமியாயிருக்கையாலே, 'இந்த்$_3$ரம் யஜேத' 'வருணம் யஜேத' என்று இந்த்ராதி தேவதைகளைக் குறித்துச் செய்யும் யாகங்களிலும் நாராயணனே முக்கியமாகச் சொல்லப்படுகிறான். இவ்விஷயம் 'நாராயணம் மஹாஜ்ஞேயம்' (அறியத்தக்கவைகளுள் முக்யமாயிருப்பவன் நாராயணன்), 'வசஸாம் வாச்யமுத்தமம்' (சொற்களுக்கு முக்யமான பொருளாயிருப்பவன் நாராயணன்) முதலான ப்ரமாணங்களில் சொல்லப்பட்டது.

இப்படி எல்லா வேத வாக்யங்களாலும் முக்கியமாக அறியப்படுபவன் நாராயணனே யாகையால், எல்லாக் கர்மங்களாலும் ஆராதிக்கப்படுபவனும் அவனேயாய், பிற தேவதைகளைக் குறித்துச் செய்யும் யாகங்களுக்கு பலனளிப்பவனும் நாராயணனே ஆகிறான். 'அஹம் ஹி ஸர்வயஜ்ஞாநாம் போ$_4$க்தாச ப்ரபு$_4$ரேவச' (9-24) என்றவிடத்தில் இவ்விஷயம் சொல்லப்பட்டது. ப்ரபு$_4$ - ப$_2$லப்ரதன் என்றபடி. ஔதார்யமில்லாதவனுக்கு ப்ரபு$_4$த்வம் ஆமைமயிர் போலே இல்லாதது. ஆக, *ஶ*ாஸ்த்ரத்தினால் அறியப்படுபவ்னும், ஸர்வகர்ம உபாஸனங்களுக்கும் ஆராதிதனான பரமாத்மாவே 'ஸகல ப$_2$லப்ரதோ ஹி விஷ்ணு:' 'ஸர்வ லாபாய கே*ஶ*வ:' 'மோக்ஷமிச்சேத் ஜனார்த்தனாத்' என்கிறபடி யாவர்க்கும் போ$_4$க$_3$ மோக்ஷங்களை அருளுபவன்.

இவ்வண்ணம், 'எல்லா வேதங்களும் நாராயணனையே முக்கியமாகக் கூறுகின்றன என்பதையறியாமல் வேதவாக்யங்கள் அந்தந்த இந்த்ராதி தேவதைகளை மாத்திரமே குறிக்கின்றன என்று நினைப்பவன் வேதார்த்தத்தை அறியாதவன். வேதங்களின் முக்கியப்

பொருளையறிந்தவன் நானேயாகையால் ஸகல வேதங்களிலும் ஸாரமான அர்த்தத்தை என்னிடமிருந்து கேட்பாய்' என்று அர்ஜுநனுக்கு புருஷோத்தம வித்யையை ஐந்து *ஶ்*லோகங்களினால் உபதே*ஶி*க்கிறான் பகவான்.

**த்வாமிமௌ புருஷௌ லோகே க்ஷர*ஶ்*சாக்ஷர ஏவச|**
**க்ஷரஸ் ஸர்வாணி பூ$_4$தாநி கூடஸ்தே$_2$ாऽக்ஷர உச்யதே|| (15-16)**

க்ஷரன் அக்ஷரன் எனும் இரண்டு புருஷர்கள் *ஶ*ாஸ்த்ரங்களில் ப்ரஸித்தி பெற்றவர்கள். 'லோக்யதே அநேந இதி - லோக:' (அறிவதற்கு காரணமாயிருக்கையாலே *ஶ*ாஸ்த்ரம் லோகம் எனப்படுகிறது) எனும் வ்யுத்பத்தியாலே இங்கு லோக *ஶ*ப்தத்தாலே *ஶ்*ருதி ஸ்ம்ருதிகளான *ஶ*ாஸ்த்ரங்கள் குறிக்கப்படுகின்றன. *ஶ்*வேதா*ஶ்*வதரத்தில், 'ப$_3$த்$_3$த$_4$ ஜீவன் ப்ரக்ருதியை யநுபவிக்கிறான்; முக்த ஜீவன் தான் அனுபவித்துவந்த ப்ரக்ருதியை விட்டுச் செல்கிறான்' எனும் வாக்யம் இங்கு லோக *ஶ*ப்தத்தாலே கருதப்படும் *ஶ்*ருதி ப்ரமாணம். அழியும் தன்மையுள்ள ப்ராக்ருத உடலோடு கூடியிருப்பதாலே, பிரமன் முதல் புல் ஈறாகவுள்ள **ப$_3$த்$_3$த$_4$ ஜீவர்கள்** அனைவரும் **க்ஷரன்** எனப்படுகின்றனர். ஜீவாத்ம ஸ்வரூபம் நித்யமானாலும், அசித் ஸம்ஸர்க்க$_3$த்தாலே ஜீவர்களின் த$_4$ர்மபூ$_4$த ஜ்ஞானம் ஸங்கோச விகாஸங்களை அடைவதையிட்டும் க்ஷர புருஷர்கள் எனப்படுகிறார்கள்.

அசித்தான உடலோடு தொடர்பு நீங்கப் பெற்றவனாய் அதன் காரணமாகவே ஸ்வரூப விகாஸம் பெற்ற **முக்தாத்மா அக்ஷரன்** எனப்படுகிறான். அக்ஷர *ஶ*ப்தம் முக்தாத்மாக்கள் அனைவரையும் குறிக்கும். பரமபுருஷன், பிரமன் முதல் ப$_3$த்$_3$த$_4$ ஜீவர்கள் அனைவர்க்கும் கூடஸ்த$_2$னாயிருந்த போதிலும், அடுத்த *ஶ்*லோகத்தில் 'உத்தம: புருஷஸ் து அந்ய:' என்று அக்ஷர புருஷனைக் காட்டிலும் வேறுபட்டவனாக சொல்லுகிறபடியால், இங்கு கூடஸ்த$_2$ *ஶ*ப்தத்தால் க்ஷர புருஷர்களுக்கும் பரமாத்மாவுக்கும் இடைப்பட்டவனாய் அசித் ஸம்பந்தம் நீங்கப் பெற்றவனாய் அதனாலேயே த$_4$ர்மபூ$_4$த ஜ்ஞானம் விகாஸமடையப் பெற்றவனுமான முக்தாத்மாவே அக்ஷர *ஶ*ப்தத்தால் சொல்லப்படுகிறான்.

அடுத்த *ஶ்*லோகத்தில், அக்ஷர புருஷன் எனப்பட்ட முக்தனையுங்காட்டில் பல காரணங்களால் மேலானவனான பரமபுருஷன் வேறுபட்டவன் என்கிறது. **உத்தம: புருஷஸ் த்வந்ய: பரமாத்மேத் யுதாஹ்ருத:| யோ லோகத்ரய மாவி*ஶ்*ய பி$_3$ப$_4$ர்த்யவ்யய ஈ*ஶ்*வர:||** (15-17). எத்தகைய காரணங்களால் விலக்ஷணன் என்னில் - 'ஆத்மா நாராயண: பர:' (நாராயணனே பரமாத்மா), 'தஸ்யா: *ஶி*க$_2$ாயா மத்$_4$யே பரமாத்மா வ்யவஸ்தி$_2$த:' (அக்னியின் திருமேனியின் நடுவில் பரமாத்மா எழுந்தருளியிருக்கிறான்) முதலான *ஶ்*ருதிகளில் மேலான ஆத்மாவாகச் சொல்லப்படுமிவன் முற்கூறிய இரண்டு வகைப்பட்ட ஜீவாத்மாக்களைக் காட்டிலும் வேறுபட்டவன். ய: லோகத்ரயம் ஆவி*ஶ்*ய பி$_3$ப$_4$ர்த்தி - அசித், சித், முக்த சேதநன்

எனும் மூன்று தத்வங்களையும், ஆவிஶ்ய - உள்நுழைந்து வ்யாபித்திருப்பவன்; பி₃ப₄ர்த்தி - அவற்றைத் தாங்குபவன்; ஈஶ்வர: - அவற்றை நியமிப்பவன். ஆக, வ்யாபிக்கப்படுபவர்களைக் காட்டிலும், த₄ரிக்கப்படுபவர்களைக் காட்டிலும், நியமிக்கப்படுபவர்களைக் காட்டிலும் அவன் விலக்ஷணன்.

**யஸ்மாத் க்ஷர மதீதோऽஹம் அக்ஷராத₃பி சோத்தம:|**
**அதோऽஸ்மி லோகே வேதே₃ ச ப்ரதி₂த: புருஷோத்தம:|| (15-18)**

எக்காரணங்களால் க்ஷர புருஷர்களான ப₃த்₃த₄ரிலும் வேறுபட்டவனாயும், அக்ஷரபுருஷர்களான முக்தரிலும் மேலானவனாயும் இருக்கிறேனோ, அக்காரணங்களாலேயே, வேத லோகேச - ஶ்ருதி ஸ்ம்ருதிகளில், புருஷோத்தம: ப்ரதி₂த: அஸ்மி - புருஷோத்தமன் என்று புகழ் பெற்றவனாயிருக்கிறேன். உத்தம புருஷன் வேறுபட்டவன் என்று படர்க்கையில் சொல்லப்பட்டவன் 'தானே' என்பதை 'அஹம் புருஷோத்தம: ப்ரதி₂த: அஸ்மி' (நான் புருஷோத்தமன் என்று ப்ரஸித்தி பெற்றிருக்கிறேன்) என்று தன்மையில் சொல்வதன்மூலம் அப்படி உத்தம புருஷனென்று நிர்தேஶிக்கப்பட்டவன் புருஷோத்தமனான தானே என்று நிலைநாட்டுகிறான். அதாவது, உத்தம புருஷன், **புருஷோத்தமன்** எனும் திருநாமங்களுக்கு **'க்ஷர அக்ஷர புருஷர்களைக் காட்டிலும் மேம்பட்டவன்'** என்பதே பொருள் என்றும் 'அந்த புருஷோத்தமன் நானே' என்றும் உணர்த்துகிறான். இங்கு லோக ஶப்தத்தால் கருதப்படுவது வேதார்த்தத்தையறிய உதவும் ஸ்ம்ருதிகளேயாம். சாந்தோக்யத்தில், 'பரஞ்ஜ்யோதிர் உபஸம்பத்₃ய ஸ்வேந ரூபேண அபி₄நிஷ்பத்₃யதே, ஸ உத்தம புருஷ: (பரஞ்சோதியை யடைந்து முக்தாத்மா தன் ஸ்வரூப விளக்கம் பெறுகிறான்; அப்பரஞ்சோதியே உத்தம புருஷன் எனப்படுகிறான்) என்றுள்ள வாக்யத்திலுள்ள உத்தம: புருஷ: எனும் அந்த ஶப்தத்தையே எடுத்து இச்சுலோகத்தில் புருஷோத்தமன் என்று ஸமஸ்த பதமாகக் கூறுகிறான். ஸ்ரீவிஷ்ணுபுராணத்தில், 'அம்ஶாவதாரம் புருஷோத்தமஸ்ய ஹ்யநாதி₃ ம₄த்யாந்த மஜஸ்ய விஷ்ணோ:' (பிறப்பற்றவனாய், புருஷோத்தமன் எனும் பெயருடையவனுமான விஷ்ணுவினுடைய முதலும் நடுவும் முடிவுமில்லாத அம்ஸாவதாரமாயிருக்கும் கண்ணனை) என்றும், ஸ்ரீராமாயணத்தில் 'ந ச தேந விநா நித்₃ராம் லப₄தே புருஷோத்தம:' (லக்ஷ்மணன் பக்கத்தில் இல்லாவிடில் புருஷோத்தமனான ராமன் உறங்கமாட்டான்) என்றும் காண்கையால், ஶ்ருதி ஸ்ம்ருதிகளை புருஷோத்தமன் எனும் தன் பெயருக்கு ப்ரமாணமாகக் காட்டியபடி.

மேலிரண்டு ஶ்லோகங்களால், எவனொருவன் இப்படி க்ஷர அக்ஷர புருஷர்களைக் காட்டிலும் பல காரணங்களால் சிறப்புற்றவனாக என்னை கலக்கமின்றியறிகிறானோ, அவன் என்னையடைவதற்குரிய வழியனைத்தையும் அறிந்தவனாகிறான். என்னை அடையும்

வழியான ஸ்மரணம், கீர்த்தனம், வந்தனம், தாஸ்யம் முதலான பக்திப்ரகாரங்கள் அனைத்தாலும் பக்தி செய்தவனாகிறான் என்று தன்னை புருஷோத்தமன் என்றறிவது சிறந்த பலனைத் தரும் என்றும், 'இந்த புருஷோத்தம வித்தையாகிற பரம ரஹஸ்யமான ஶாஸ்த்ரம் என்னால் உனக்கு உபதேஶிக்கப்பட்டது; இதை அறிந்தவன் அறிவாளியாய், செய்ய வேண்டியதனைத்தையும் செய்தவனாகிறான்' என்று புருஷோத்தம ஶப்₃தார்த்த₂த்தை விளக்குகிற புருஷோத்தம வித்யையை புகழ்கிறான். ஆக, புருஷோத்தமன் எனும் திருநாமத்தின் பொருளை உள்ளபடி அறிந்தவன் மோக்ஷத்தில் இச்சை உண்டாகி அதற்கான செயலைச் செய்து மறுபிறவியின்றி பகவானையே அடைகிறான் என்றதாயிற்று.

* * * * *

## பதினாறாம் அத்யாயம் – தேவாஸுர ஸம்பத் விபாக யோகம்

கீழ் அத்யாயத்தில் கண்ணன் அர்ஜுநனுக்கு புருஷோத்தம வித்யையை உபதேஶித்து இது கு₃ஹ்யதமம் ஶாஸ்த்ரம் – பரமரஹஸ்யமான ஶாஸ்த்ரம் – என்று கூறினான். இப்படி ஶாஸ்த்ரத்தைப் பற்றி பேச்சு வரவே, அதில் நம்பிக்கையுள்ளவன் ஆஸ்திகன், தேவ வகுப்பைச் சேர்ந்தவன்; நம்பிக்கை இல்லாதவன் அஸுர வகுப்பைச் சேர்ந்தவன் என்று தேவாஸுர விபாகம் (தேவ அஸுர பாகுபாடு பண்ணுகிறான் இவ்வத்தியாயத்தில்.

ஈஶ்வரனுடைய திவ்யாஜ்ஞைகள் ஶாஸ்த்ரங்கள். 'ஶாஸநாத் ஶாஸ்த்ரம்' – ஆணையிடுவதால் ஶாஸ்த்ரம் எனப்படுகிறது. மனிதன் ஶாஸ்த்ரத்திற்கு வசப்பட்டிருக்க வேணும், ஶாஸ்த்ர வஶ்யதை மிகவும் அவஶ்யம், தன்னுடைய ஆணையான **ஶாஸ்த்ரத்திற்கு வசப்பட்டிருப்பவன் தைவப்பிறப்பை சேர்ந்தவன்,** என்று சொல்ல திருவுள்ளம் பற்றி முதலில் தை₃வ ஸம்பத்துடன் பிறந்தவனுக்குரிய முக்கியமான குணங்களைக் கூறுகிறான். அவையாவன – அஞ்சாமை, மனத்தூய்மை, ஆத்ம ஸ்வரூபத்தை சிந்தித்திருத்தல், ஈகை, ஸத்பாத்ரத்தில் புண்ணிய காலத்தில் தானம் செய்தல், புலனடக்கம், யாகம் செய்தல், வேதமோதுதல், ஏகாத₃சி உபவாஸம் போன்ற தவங்களில் ஈடுபடுதல், மனம் மொழி மெய்களால் ஒருபடிப்பட்டிருத்தல், பிறர்க்கு தீங்கிழையாமை, நன்மை செய்யும் உண்மையை பேசுதல், கோபத்தை அடக்குதல், துறவு, இந்த்ரியங்களை ஶப்₃த₃ாதி விஷயங்களில் போகாமல் அடக்குதல், கோள் சொல்லாமை, ஜீவராஶிகளிடம் இரக்கம் கொள்ளுதல், பிறர் பொருளை விரும்பாமை, இனிமையாகப் பேசுதல், தகாத செயல்களைச் செய்வதில் வெள்கியிருத்தல், மனம் சலியாமை, தைர்யம், மனவுறுதி, பொறுமை, வஞ்சகமில்லாமை, செருக்கில்லாமை ஆகிய 26 குணங்கள் (16. 1-3). இவ்விடத்தில், அஹிம்ஸா ப்ரத₂மம் புஷ்பம் புஷ்பம் இந்த்₃ரிய நிக்₃ரஹ:| ஸர்வபூ₄த த₃யா புஷ்பம் க்ஷமா புஷ்பம் விஶேஷத:|| ஜ்ஞாநம் புஷ்பம் தப: புஷ்பம் த்₃யாநம் புஷ்பம் ததை₂வ ச| ஸத்யம்

அஷ்டவித₄ம் புஷ்பம் விஷ்ணோ: ப்ரீதிகரம் ப₄வேத்|| (அஹிம்ஸை, புலனடக்கம், ஸர்வபூ₄த த₃யை, பொறுமை, ஜ்ஞாநம், தவம், த்₄யானம், ஸத்யம் ஆகிய எட்டுவகை புஷ்பங்களும் விஷ்ணுவை உகப்பிப்பவை) எனும் பாத்ம புராண ஶ்லோகங்கள் அநுஸந்திக்கத் தக்கவை. 'ப₄வந்தி ஸம்ப₃தம் தை₃வீம் அபி₄ஜாதஸ்ய' – இக்குணங்கள் பகவதாஜ்ஞையைப் பின்பற்றி நடக்கும் தெய்வப்பிறவியாகிற செல்வத்தை யுடையவனுக்கு இருப்பவை என்கிறான். உண்மையில், ஜாயமாந காலத்தில் பகவத் கடாக்ஷம் பெற்றவனே இக்குணங்கள் லபிக்கப் பெறுவான்.

அடுத்து அஸுர வகுப்பைச் சேர்ந்தவனுக்குரிய குணங்களைக் கூறுகிறான். அவையாவன – பிறர் மெச்சுவதற்காக தர்மம் செய்தல் (ட₃ம்ப₄ம்), இறுமாப்பு (செருக்கு), தற்புகழ்ச்சி, கோபம் (க்ரோதம்), நல்லோர்களை வெறுப்படையச் செய்யும் கடுமை (பாருஷ்யம்), அறிவின்மை எனும் அஜ்ஞானம் (16–4). என் ஆணையைப் பின்செல்வதாகிற செல்வம் மோக்ஷத்தைத் தரும்; அஸுர குணங்கள் ஸம்ஸார பந்தத்தையே தரும் என்ன, இதைக் கேட்ட அர்ஜுநன் தான் தை₃வீ ஸம்பத் உடையவனா அஸுர குணமுடையவனா என்று கலங்க, 'அர்ஜுநா! கலங்காதே நீ தெய்வீக ஸம்பத் வாய்ந்தே பிறந்திருக்கிறாய்' என்று பரமானந்தப் படுத்துகிறான். (16. 4,5).

கைக்கொள்ளவேண்டிய தெய்வப் பிறவிகளின் ஆசாரத்தை கர்மஜ்ஞான ப₄க்தி யோகங்களைச் சொல்லும்போது விவரித்ததால், அஸுர ப்ரக்ருதிகளின் ஆசாரத்தை 18வது ஶ்லோகம் வரை சொல்லுகிறான். லோகத்தில் உயிருள்ளவரை ஸுகமாகவே இருக்க எல்லோரும் விரும்புவர். அதற்காக முயற்சிகளும் மேற்கொள்வர். இவை ப்ரவ்ருத்தி தர்மங்கள். மோக்ஷத்தை இச்சிப்பவனுக்கு அதிப்ரவ்ருத்தி கூடாது. ஸ்வப்ரவ்ருத்தி நிவ்ருத்தியே முமுக்ஷுவுக்கு அவஶ்யமாகிறது. அவன் செய்யும் கர்மங்கள் பகவதர்ப்பணமாக கர்த்ருத்வ ப₂ல த்யாகத்துடன் செய்யப்படுவதால் அதுவே நிவ்ருத்தியாய் விடுகிறது. அஸுர ஸ்வபாவமுடையவனுக்கு ப்ரவ்ருத்தி நிவ்ருத்தி தர்மங்கள் தெளிவாகத் தெரியாது. அவனிடம் அகத்தூய்மை புறத்தூய்மை எனும் ஶுத்₃தி₄ இருக்காது. இந்த ஶுத்₃தி₄யைத் தரும் ஸந்த்யாவந்தனம் முதலான ஆசாரமும் இராது (16–7). நித்யமஶுசி: என்ற நிலையிலிருப்பவனுக்கு எந்த ஶாஸ்த்ரவிதி₄தமான கார்யத்திலும் அதிகாரம் கிடையாது. 'ஸந்த்யாஹீநோSஶுசிர் நித்யமநர்ஹஸ் ஸர்வகர்மஸு' – ஸந்த்யாவந்தனம் செய்யாதவன் ஶுத்தியற்றவன்; எந்த வைதிக கர்மமும் செய்யத் தகுதியற்றவன் – என்று தக்ஷ ஸ்ம்ருதி.

எம்பெருமானுக்குள்ள பல திருநாமங்களில் ஸத்யம் (விகாரமின்றியிருப்பவன்) என்பதும் ஒன்று. அந்த ஸத்யஶப்தவாச்யனான பகவானிடமிருந்தே லோகங்கள் ஸ்ருஷ்டிக்கப்பட்டு, ரக்ஷிக்கப்பட்டு கடைசியில் அவனிடமே லயமடைகின்றன. ஸர்வமும் அவனது ஆணைக்குட்பட்டே நடக்கின்றன. 'அந்த ப்ரவிஷ்ட ஶாஸ்தா ஜநாநாம் ஸர்வாத்மா'

(எல்லா ஜீவராஶிகளிலும் உட்புகுந்து நின்று நியமிப்பவன்; எங்கும் ஆத்மாவாக ஸத்தையை நிர்வஹிப்பவன்) என்று ஶ்ருதி அவனைக் கொண்டாடுகிறது. இதை இல்லை செய்பவன் அஸுர ப்ரக்ருதி. ஆண், பெண் சேர்க்கையால் உண்டாகாதது எதுவுமில்லை; உலகனைத்தும் காமத்தையே காரணமாகக் கொண்டது என்பவன். காமானுபமே பரம புருஷார்த்தமென்று நினைப்பவன். நாஸ்திகனாய், புண்ணிய பாபங்களில் நம்பிக்கையற்றவனாய், தனக்குத் தோன்றிய செயல்களைச் செய்துவிட்டு அவற்றின் பலன் தன்னை தட்டக்கூடாது என்பவன். புண்ணிய காரியங்களைச் செய்யாமல் அத்தகைய காரியங்களின் பலனான ஸுகத்தை மட்டும் விரும்புமவன். நூற்றுக்கணக்கான ஆஶாபாஶங்களால் கட்டுண்டவன்; காம க்ரோதங்களுக்கு முற்றும் வஶப்பட்டவன். காமானுபவத்திற்கு தவறான வழிகளில் பொருள் ஈட்டுபவன். (16.8-12). 'இஷ்டப்ராப்தியான பல ஸொத்துகளை ஸம்பாதித்தேன்; அநிஷ்ட நிவ்ருத்தியான என் எதிரிகளைக் கொன்றேன்' என்று தன் திறமையாலேயே எல்லாம் ஸாதித்ததாகவும் அதற்கு முன்கர்மவினை காரணமல்ல என்றும் மயங்குபவன். இவன் பெறும்பேறு என்னென்னில் – 'பதந்தி நரகே அஶுசௌ' அஶுத்தமான நரகத்தில் விழுகிறான். இவர்களை மிகவும் வெறுத்து, நராத$_4$மா: (மனிசரில் கடையர்) என்கிறான் பகவான்.

**தாநஹம் த்$_3$விஷத: க்ரூராந் ஸம்ஸாரேஷு நராத$_4$மாந்|**
**க்ஷிபாம்யஜஸ்ர மஶுபாந் ஆஸுரீஷ்வேவ யோநிஷு|| (16-19)**

(என்னை துவேஷிப்பவர்களாய், கொடியவர்களாய், மனிதரில் கடையானவர்களாய், அமங்களமான அவர்களை நான் இடைவிடாமல் ஆஸுரப் பிறவிகளிலேயே தள்ளுகிறேன்.) அவர்களுடைய த்வேஷமே அவர்களைக் கீழே தள்ளுகிறதேயொழிய அவர்களுடைய அதே$_4$ாக$_3$திக்கு நான் கரணமல்ல' என்று உணர்த்துகிறான். இந்த நாலு வகை ஆஸுர ப்ரக்ருதிகளையும் நான் இடைவிடாமல் பிறப்பு, மூப்பு, இறப்பு என்று மாறிமாறி வரும் பிறவிகளிலேயே தள்ளுகிறேன். அதிலும் 'ஆஸுரீஷு ஏவ யோநிஷு' த்வேஷம் உண்டாவதற்குறுப்பான தாமஸமான ஆஸுரப்பிறவிகளிலேயே தள்ளுகிறேன். இத்தகைய ஆஸுர ப்ரக்ருதிகள் தேவாதி நாலுவகை யோனிகளிலும் உண்டாகக் கூடியவர்கள் என்பது குறிக்கொள்ளத்தக்கது. க்ஷிபாமி – அந்தந்த ஆஸுரப்பிறவிகளை அடைவதற்குறுப்பான பாபச்செயல்களை செய்வதற்கு காரணமான கொடிய புத்திகளை அவர்களுக்கு உண்டாக்குகிறேன் என்று கருத்து. 'ஏஷ ஏவ அஸாது$_4$ கர்ம காரயதி தம் யமதே$_4$ா நிநீஷதி' – எவனை கீழே தள்ள விரும்புகிறானோ அவனை அந்த பரமபுருஷனே தவறான கர்மங்களைச் செய்ய வைக்கிறான் – என்று கௌஷீதகீ உபநிஷத்திலும் சொல்லப்பட்டதன்றோ. பாபச் செயலைப் புரியும்படி எம்பெருமான் தூண்டுவதற்கு காரணம் இவனிடம் ஏற்கனவே இருக்கும் மிகுந்த த்வேஷமேயாகையால், எம்பெருமானுக்கு பக்ஷபாதமோ கருணையின்மையோ வாராது.

நல்லவர்கள் அஸுரத்தன்மைக்கு நுழைவாயிலாயிருக்கும் காமம், க்ரோதம், லோபம் (பேராசை) எனும் மூன்றையும் அவஶ்யம் கைவிடவேணும். இம்மூன்றையும் கைவிடுபவன் தனது நன்மைக்கு முயற்சி செய்து பகவானையே அடைகிறான். ஆஸுரத்தன்மைக்கு மூல காரணம் ஶாஸ்த்ர நம்பிக்கையின்மையே. ஶாஸ்த்ர விதிகளைக் கைவிடுபவன் இம்மை மறுமைப் பயன்களையோ மேலான கதியையோ அடையமாட்டான் (16.20-24). ஶ்ருதி: ஸ்ம்ருதிர் மமைவாஜ்ஞா யஸ்தாமுல்லங்க்$_4$ய வர்த்ததே| ஆஜ்ஞாச்சே$_2$தீ$_3$ மமத்$_3$ரோஹீ மத்$_3$ப$_4$க்தோऽபி ந வைஷ்ணவ:|| (வி.தர்மம்) - ஶ்ருதியும் அதை விளக்கும் ஶாஸ்த்ரங்களும் எனது ஆணையே; எவனொருவன் அதை மீறி நடக்கிறானோ அவன் எனது ஆணையை மீறுகையாலே எனக்கு துரோகியாகிறான், என் பக்தனாயினும் அவன் வைஷ்ணவனாக மாட்டான் - எனும் ஶ்லோகம் இங்கு அநுஸந்தேயம். கைக்கொள்ளத் தக்கது தகாதது என்று நிர்ணயிப்பதில் ஶாஸ்த்ரமே (வேதமே) ப்ரமாணம்.

ஆக, இவ்வத்யாயத்தில் 'ஸத்வகுணம் மிக்க நீ, வஞ்சகர்கள் சொல்லிப்போரும் பொய்நூல்ளை காற்கடை கொண்டு, உன் அதிகாரத்திற்கேற்ப, பகவதாஜ்ஞையாம் ஶாஸ்த்ரத்தில் சொல்லப்பட்ட கர்மஜ்ஞான பக்தியோகத்தால் பரமபுருஷன் ஒருவனையே உபாஸிப்பதாகிற பரதர்மத்தையே கைக்கொள்ள வேணும்' என்று சொல்லப்பட்டதாயிற்று.

* * * * *

## பதினேழாம் அத்யாயம் – ஶ்ரத்$_3$த$_4$ாத்ரய விபாக யோகம்

கீழத்யாயத்தில், தை$_3$வப்பிறவி, அஸுரப்பிறவி என இருவகைகளைக் கூறி, ஶாஸ்த்ரத்தை மீறி நடப்பதே அஸுரப்பிறவிக்குக் காரணம், ஶாஸ்த்ரீய கர்மங்களைச் செய்யாமல் அஶாஸ்த்ரீய கர்மங்களைச் செய்பவன் ஒரு நன்மையும் அடையமாட்டான்; ஆகையால் ஶாஸ்த்ர விதிகளையறிந்து அதன்படி ஒழுகுவாயாக என்றான். இவ்வத்யாயத்தில், ஶாஸ்த்ரத்தில் விதிக்கப்பட்டுள்ள கர்மம் ஸத்வ ரஜஸ்தமோ குணங்களுக்குச் சேர மூன்று விதங்களாயிருக்கும் என்பதையும் அவைகளின் தன்மையையும் கூறுகிறான்.

அர்ஜுநனின் கேள்வி: கண்ணா! எவர்கள் ஶாஸ்த்ர வித$_4$யைக் கைவிட்ட போதிலும், ஶ்ரத்தையுடன் யாகங்களைச் செய்கிறார்களோ, அவர்களின் நிஷ்டை (நிலை) ஸத்வமா, ரஜஸா, தமஸ்ஸா? (17-1). இக்கேள்விக்கு பதில் சொல்பதற்கு முன் கண்ணன் சில விஷயங்களைச் சொல்கிறான். ஶாஸ்த்ரிய கர்மங்களில் ஜீவர்களின் முக்குண வேறுபாட்டாலே ஶ்ரத்தைகளும் வேறுபட்டிருக்குமாகையால் ஸாத்விக ராஜஸ தாமஸ நிஷ்டைகள் விளைகின்றன. ஶ்ரத்தையாவது – 'தான் விரும்பியதை இது ஸாதித்துக் கொடுக்கும்' எனும் நம்பிக்கையோடு அதை ஸாதிப்பதில் உண்டாகும் த்வரை (வேகம்). ஒவ்வொருவரிடமும்

மிகுதியாயுள்ள குணத்திற்கேற்ப ஒவ்வொரு விஷயத்தில் ருசியுண்டாகி ஸாத்விகம் முதலான மூவகைப்பட்ட *ஶ்*ரத்தைகள் உண்டாகின்றன. அவனவனுடைய மனதிற்கு அனுகுணமாகவே *ஶ்*ரத்தை அமையும். *ஶ்*ரத்தைக்கேற்ப பலன் கிடைக்கும். ஒருவனிடம் ஸாத்விக குணம் மிகுதியாயிருப்பின் ஸாத்விக *ஶ்*ரத்தை யுண்டாகிறது. இதேபோல் ராஜஸ தாமஸ *ஶ்*ரத்தைகள் உண்டாகின்றன. ஸாத்விக *ஶ்*ரத்தை யுடையவர்கள் தேவர்களை ஆராதிப்பர்; ராஜஸ *ஶ்*ரத்தை யுடையவர்கள் யக்ஷ ராக்ஷஸர்களை ஆராதிப்பர்; தாமஸ *ஶ்*ரத்தை யுடையவர்கள் இறந்தவர்களையும் (ப்ரேதங்களையும்) பூ$_4$தக$_3$ணங்களையும் ஆராதிப்பர் (17. 2-4).

இப்போது, அர்ஜுநன் கேள்விக்கு கண்ணன் பதில் சொல்கிறான்: எவர் அ*ஶ*ாஸ்த்ரீய (*ஶ*ாஸ்த்ரத்தில் விதிக்கப்படாத) கடுமையான யாகம் தவம் தானத்தை அஹங்காரத்துடனும், டம்பத்துடனும், பலனில் விருப்பத்துடனும், இந்த்ரியங்களையும் ஆத்மாவையும் வருத்திச் செய்கிறார்களோ அவர்கள் (எனது ஆணையை மீறுதலாகிற) ஆஸுரமான இயல்பை உடையவர்கள்; 'காயோடு நீடு கனியுண்டு வீசு கடுங்கால் நுகர்ந்து நெடுங்காலம் ஐந்து தீயோடு நின்னு' என்கிறபடி காய் கனி காற்று இவற்றையே உண்டு, நாலுபுறம் நெருப்பு மேலே சூரிய வெப்பம் கொளுத்தும்படி தங்கள் புலன்களை மட்டுமின்றி என் அம்*ஶ*மென்று சொல்லப்படுவதாய் என் *ஶ*ரீரமான தங்கள் ஆத்மாவையும் வருத்திக்கொண்டு கர்மங்களைச் செய்யுமவர்களுக்கு தீயபலனே விளையுமேயொழிய நற்பயன் எதுவுமில்லை (17. 5-6).

பிறகு, ஒவ்வொருவரின் ஆஹாரமும் மூன்றுவிதமாயிருக்கும்; அவர்கள் செய்யும் கர்மங்களும் வேறுபட்டிருக்கும் என்று தொடர்கிறான். 'அந்நமயம் ஹி ஸோம்ய மந:' (சாந்.) – அன்னத்திற்கு அனுகுணமாகவே மனம் அமைகிறது; 'ஆஹார *ஶு*த்$_3$தௌ$_4$ ஸத்வ*ஶு*த்$_3$தி$_4$:' (சாந்.) – ஆஹார*ஶு*த்தியாலேயே மனம் *ஶு*த்தியடைகிறது. ஆயுள், அறிவு, ப$_3$லம், ஆரோக்யமவற்றை வளர்ப்பதாய், இனிப்புச் சுவை உடையனவாய், வழவழப்பையுடையதாய் நிலையான நற்பயனை விளைவிப்பதாய், காண்பதற்கு இனியனவான ஆஹாரத்தை ஸாத்விகர்கள் (முமுக்ஷுக்கள்) விரும்புவர் (17-8). இனிப்பு, புளிப்பு, உவர்ப்பு, துவர்ப்பு, உறைப்பு, கசப்பு எனும் ஷட்ரஸங்களில் (அறுசுவைகளில்) முதலில் இனிப்பையே சொல்லிற்று. கடின பதார்த்தங்களுக்கு எதிர்த்தட்டான வழவழப்பு பதார்த்தங்கள் வாயுத்தொல்லைகளை நீக்குமென்று ஆயுர்வேதம். அறைவயிறு நிறையும்படி ஆஹாரம், கால்வயிறு நீர், மீதி காற்று இப்படி புசிப்பது யுக்தாஹாரம். இத்தகைய ஸாத்விக ஆஹாரத்தால் ரஸம், ரத்தம், மாம்ஸம், மேதஸ், எலும்பு, மஜ்ஜை, *ஶு*க்லமெனும் ஏழு தாதுக்களும் நிலைபெற்று விளங்குமென்று கருத்து. துவர்ப்பு, புளிப்பு, உவர்ப்பு, காரம், மிகவும் உஷ்ணம், மிகவும் குளிர்ச்சி இவை மிகுந்த உணவுகள் ராஜஸமாம். சமைத்து ஒரு யாமத்துக்குமேல் தாண்டியது (சுமார் மூணு மணிநேர அவகாசம்), ருசிமாறியது, பழையது, துர்கந்தமுடையது (வெங்காயம், பூண்டு), எச்சில், சுத்தமல்லாதது இவை தாமஸமாம் (17-9, 10).

பகவதாரதனமான யஜ்ஞத்திலும் மூன்று விதமுண்டு. பலனை யுத்தேஶியாமல் பகவானின் உகப்புக்காகவே செய்யப்படுவது ஸாத்விகம். விதி$_4$ த்ருஷ்ட: – ஶாஸ்த்ரங்களில் காணப்பட்டபடி செய்ய வேண்டும் (17-11). டம்பத்திற்கோ பலனையுத்தேஶித்தோ செய்யப்படுவது ராஜஸம் (17-12). அநுஜ்ஞா பூர்வமாகவே (தகுந்த ப்ராஹ்மணர்களின் அநுமதி கொண்டு செய்கை) யஜ்ஞாதி ஆராதனங்கள் செய்யவேண்டும். அநுமதியில்லாமல் செய்கை விதி$_4$ஹீநமெனப்படுகிறது. ஶாஸ்த்ர விரோதமாக பெறப்பட்ட த்ரவியத்தைக் கொண்டு பகவதாராதனமான யஜ்ஞத்தை செய்யக்கூடாது. 'யாகத்திற்காக (து$_3$ானம் கொடுக்க அதி$_4$காரமில்லாத) நான்காம் வர்ணத்தவரிடமிருந்து பணத்தைப் பெறலாகாது' என்று மநுஸ்ம்ருதி. மந்த்ரஹீநம் அதக்ஷிணம் – மந்த்ரங்கள் ஸரியாக உச்சரிக்கப்பட வேண்டும். தாராளமாக தக்ஷிணைகள் வழங்கப்பட வேண்டும். யாவும் ஶ்ரத்தையுடனும், விஶ்வாஸத்துடனும், மனநிறைவோடும் செய்யப்பட வேணும். இவையில்லாமல் செய்யப்படுவது தாமஸம் (17-13).

மேலே, தபஸ்ஸை குணமடியாக விபாகம் பண்ணிச் சொல்ல வேண்டி, காயிகம் வாசிகம் மானஸமென்று மூன்று விதமான தவங்களைச் சொல்லுகிறான். தேவதைகள், அந்தணர்கள், பெரியவர்கள், வித்வான்கள் இவர்களைப் பூசிப்பது; ஶுத்தி, நேர்மை, ப்$_3$ரஹ்மசர்யம், அஹிம்ஸை இவைகளை கடைபிடிப்பது **காயிக தபஸ்.** வேதம், திவ்ய ப்ரபந்தங்கள், ஆசார்ய ஶ்ரீஸூக்திகள் இவற்றை ஓதுவது, இனிமையாக, ம்ருதுவாக, மிதமாக, பிறர்மனம் நோவு படாதபடி பேசுவது – **வாசிக தபஸ்.** 'ஸத்யம் ப்$_3$ரூயோத் ப்ரியம் ப்$_3$ரூயோத் ந ப்$_3$ரூயாத் ஸத்யம் அப்ரியம்| ப்ரியம் ச நாந்ருதம் ப்$_3$ரூயாத் ஏஷ த$_4$ர்ம: ஸநாதந:|| (பிறர்க்கு நன்மை பயக்கும் உண்மையையே பேசவேணும்; இனியதைப் பேசவேணும்; இனியதல்லாத உண்மையைப் பேசக்கூடாது; உண்மையல்லாத இனியதையும் பேசக்கூடாது. இதுவே நல்லோர்கள் கடைபிடிக்கும் தர்மமாகும்) எனும் ப்ரமாணம் இங்கு அநுஸந்தேயம். அடக்கம், கூடியவரை மௌனம், மன அமைதி, அன்பு, மனதை பட்டிமேயவிடாமை இவை யாவும் **மானஸ தபஸ்** (17-15, 16). இப்படி முக்காரணங்களாலும் பலனில் கண்வையாமல் பகவதாராதனமாக ப்ரீதியுடன் செய்யப்படும் தபஸ் ஸாத்விகம். க்யாதி லாப பூஜைகளை யுத்தேஶித்து செய்யப்படும் தபஸ் ராஜஸம். நிலையான பலனைத் தராது, பிடிவாதத்துடன் தன்னை துன்புறுத்திக் கொண்டும், பிறர்க்கு நாசம் விளைவிக்குமதான தபஸ் தாமஸம் (17-18,19). ஸத்பாத்ரத்தில் நல்ல காலத்தில் நல்ல தேஶத்தில் செய்யப்படும் த$_3$ானம் ஸாத்விகம். நற்குடிப்பிறப்பு, வித்யையுடன் நல்லொழுக்கமும் சேர்ந்தவனே ஸத்பாத்ரமாகிறான் (யாஜ்ஞவல்க்ய.). விருப்பமின்றி, ப்ரதிபலனை எதிர்பார்த்து செய்யப்படும் த$_3$ானம் ராஜஸம். தகாத தே$_3$ஶத்தில், தகாத பாத்திரங்களுக்கு, வாங்குபவனை அவமதித்து செய்யப்படும் த$_3$ானம் தாமஸம் (17. 20-22). இதுவரை 'லக்ஷணம் த்ரித$_4$ா' – யஜ்ஞ த$_3$ான தபஸ்ஶுக்களை குணமடியாக மூன்றுவிதமாக பிரித்து சொல்லியாயிற்று.

இவை வேதோக்த தர்மங்கள்: இவற்றுக்கு வேதஸார ப்ரணவத்துடன் தொடர்புண்டு. **தத்**, **ஸத்** என்பவற்றுடனும் ஸம்பந்தமுள்ளவை. வேதமோதும்போது ஆரம்பத்திலும் முடிவிலும் ப்ரணவத்தை உச்சரிக்கவேணும் என்று விதி$_4$. வேதோக்தகமான காரியங்களை ஆரம்பிக்கும்போது ப்ரணவத்தைச் சொல்லி ஆரம்பிக்கவேணும். ப்ரஹ்ம விசாரம் பண்ணும்போதும் இப்படியே (17-24). வேறு பலனை விரும்பாமல் ஆத்மநலனையே (மோக்ஷத்தை) குறித்துச் செய்யப்படும் யஜ்ஞ த$_3$ான தபஸ்ஸுக்களை **தத்** என்று தொடங்க வேண்டும். **தத்** என்பது ப்ரஹ்மத்தை குறிக்கும் (17-25). **ஸத்** என்றால் உள்ளது என்று பொருள். **ஸாது** - மங்களம் என்பதையும் **ஸத்** என்பது குறிக்கும். கொண்டாட்டத்துக்குரிய காரியங்களையும் **ஸத்** என்பர். ஸத்கார்யம் = நல்ல காரியம். யஜ்ஞத$_3$ான தபஸ்ஸுக்களில் நிலைத்திருக்கை **ஸத்** என்னப்படும். ஐஹிக பலன்களையும் ஸ்வர்க்காதி பலன்களையும் உத்தே*ஶி*த்துச் செய்யப்படும் காரியங்கள் **ஸத்** ஸம்பந்தமுடையவையாம். ப்ரணவத்துக்கு எல்லாவற்றுடன் தொர்புண்டு (17-26, 27).

*ஶ*ாஸ்த்ர விஹிதம் என்றறியாது *ஶ்*ரத்தையில்லாமல் செய்யப்படும் யஜ்ஞ த$_3$ான தபஸ்ஸுக்களை **அஸத்** என்றே சொல்ல வேண்டும்; பலனற்றது என்றபடி. இஹத்திலோ பரத்திலோ *ஶ்*ரேயஸ்ஸை அளிக்கமாட்டா (17-28). *ஶ்*ரத்தையோடு செய்தாலும் *ஶ*ாஸ்த்ர விதி$_4$க்குச் சேராத கர்மங்கள் பயனற்றவை. இவை ஆஸுரம், கோரம் எனப்பட்டன. *ஶ்*ரத்தையில்லாமல் செய்யப்பட்ட வைதிககர்மாவும் **அஸத்** - பலனளிக்காது, வீணாகும். இவ்வாறு அத்யாய தொடக்கத்தில் அர்ஜுநன் கேட்ட கேள்விக்கு கண்ணபிரான் விரிவாக பதிலளித்தான்.

ஆக இவ்வத்யாயத்தில், '*ஶ்*ரத்தையோடு கூடியதாயினும் வேதத்திற்கு முரண்பட்ட கர்மமும், வேதத்தை அனுஸரித்திருந்த போதிலும் *ஶ்*ரத்தையின்றி செய்யப்படும் கர்மமும் இம்மை மறுமைப் பயன்களை விளைவிக்காதாகையால் அநுஷ்டிக்கத்தக்கதன்று; அர்ஜுநா! நீ *ஶ*ாஸ்த்ரங்களில் உனக்கு விதிக்கப்பட்ட தர்மமான யுத்தத்தை பலனில் பற்றற்று ஸாத்விக *ஶ்*ரத்தையோடு அநுஷ்டிக்க வேண்டும்' என்று கூறினானாயிற்று.

* * * * *

## பதினெட்டாவது அத்யாயம் – மோக்ஷோபதே*ஶ* யோகம்

கீழ் அத்யாயத்தில், தை$_3$வ ப்ரக்ருதி ஆஸுர ப்ரக்ருதிகளின் செயல்களை ஸத்வ ரஜஸ் தமோ குணங்களுக்கேற்ப மூன்று விதமாகப் பிரித்துக் சொல்லி, ஸத்வ குணமுடைய தை$_3$வ ப்ரக்ருதிகள் தங்கள் கர்மங்களை *ஶ்*ரத்தையுடன் செய்து ஆத்ம நன்மையைப் பெறலாம் என்று முடித்தான். இனி இந்த இறுதி அத்யாயத்தில், முதலில் மோக்ஷ ஸாதனமாக

உபநிஷத்துக்களில் கூறப்பட்ட ஸந்யாஸம், த்யாகம் இரண்டும் ஒன்றே என்பதைச் சொல்லி, எல்லாக் கர்மங்களுக்கும் கர்த்ருத்வத்தை ஸர்வேஶ்வரனிடமே அநுஸந்திக்க வேணும் என்று கூறி, மனுஷ்யரில் நான்கு வர்ணத்தாரும் அவரவர்க்குறிய தர்மத்தை ஸாத்விக த்யாகத்துடன் செய்து நன்மையைப் பெறலாம் என்று சொல்லி, இறுதியில் பக்தியே மோக்ஷ ஸாதனம் என்பதை உறுதிப்படுத்தி அதற்குத் தடையான பாபங்களைத் தானே போக்கித் தருவதாகச் சொல்லி தன் உபதேஶத்தை முடித்துக் கொள்கிறான்.

அர்ஜுநன் கேள்வி: க்ருஷ்ணா! ஸந்யாஸத்தின் ஸ்வரூபத்தையும் த்யாகத்தின் ஸ்வரூபத்தையும் நான் அறிய விரும்புகிறேன்; அதை நீ எனக்குச் சொல்லுவாய். உபநிஷத்துக்களில், மோக்ஷத்தை த்யாக$_3$த்தாலே அடையலாமென்றும், ஸந்யாஸத்தாலே அடையலாமென்றும் இரண்டு ஸாதனங்களைத் தெரிவிக்கையால் இரண்டும் ஒன்றா? அல்லது தனித்தன்மைகளையுடையனவா என்று அர்ஜுநன் அறிய விரும்பினான் (18-1). க்ருஷ்ணனுடைய பதில்: கர்மம் செய்வதையே விட்டுவிட வேணும் (ஸ்வரூப த்யாகம்) என்று சிலர் சொல்கிறார்கள். கர்மங்களைச் செய்ய வேணும், அவற்றின் ப$_2$லனனை மட்டும் விட்டுவிடவேணும் (பலத்யாகம்) என்று சிலர் சொல்கிறார்கள். வேறு சிலர் யாகம் முதலான கர்மங்களைச் செய்யும்போது தோஷங்கள் நேரிடலாமாகையால் அவற்றைக் கைவிடுமாறு சொல்கிறார்கள். சிலர் யஜ்ஞம், தானம் ஆகியவை த்யாஜ்யம் (முமுக்ஷுக்களால்) கைவிடத்தக்து என்கிறார்கள். மற்றும் சிலர் ஶாஸ்த்ரம் விதித்திருப்பதால் எந்தக் கர்மாவையும் விடக்கூடாது என்கிறார்கள் (18. 2-4). இதிலிருந்து கண்ணன் த்யாகம் ஸந்யாஸம் இரண்டையும் பர்யாயச் சொற்களாகவே (ஒரே பொருளுடையதாகவே) கருதுகிறான் என்று தெரிகிறது.

கர்மங்களைச் செய்யும்போது த்யாக$_3$மானது மூன்று வகைப்பட்டது. 'இக்கர்மத்தை ஸர்வேஶ்வரன் செய்விக்கிறான்; நான் செய்யவில்லை' என்று கருதுவது கர்த்ருத்வ த்யாகம். 'ஸ்வர்க்காதி பலன்கள் எனக்குத் தேவையில்லை; யாகம் செய்வதே பலன்' என்று எண்ணுவது ப$_2$லத்யாகம். 'என்னுடைய பலனுக்கு ஸாதனமாக இக்கர்மம் அநுஷ்டிக்கப்படுகிறது' எனும் மமகாரத்தைத் தவிருகை மமதாத்யாகம். அர்ஜுநா! நீ உனக்குரிய கர்மாகிற யுத்தத்தை முற்கூறிய த்யாக மனப்பான்மையோடு செய்வாய் என்று கருத்து.

அர்ஜுநா! யஜ்ஞம், தானம், தபஸ் முதலான வைதிக கர்மாக்களை எவரும் விடக்கூடாது. அவை பாபங்களைப்போக்கி ஶுத்தியை தரக்கூடியவை. கர்த்ருத்வ, ப$_2$ல, மமதாத்யாகத்துடன் பகவதாராதனமாய் ஸ்வயம் ப்ரயோஜனமாய் கர்மங்களை யநுஷ்டிப்பதே (முமுக்ஷுக்களுக்கு) சிறந்தது. இதுவே **ஸாத்விக த்யாகம்.** இதுவே ஶாஸ்த்ரங்களில் ஸந்யாஸம் என்று சொல்லப்படுகிறது. உடல் வருத்தத்தைக் கருதி கர்மங்களை விட்டுவிடுவது **ராஜஸ த்யாகம்.** கர்மங்களைச் செய்யும்போது தோஷங்கள் நேரிட்டு பாபம் வரக்கூடும் என்றஞ்சி

அறிவின்மையால் கர்மங்களை விட்டுவிடுவது **தாமஸ த்யாகம்** (18. 5-8). நித்ய நைமித்திக கர்மங்கள் கர்த்ருத்வ ப$_2$லத்யாகத்துடன் ஸ்வயம் ப்ரயோஜனமென்றெண்ணி செய்யப்பட்டதாகில் அந்த த்யாகம் ஸத்வ குணத்தால் உண்டாவது. அவன் மேதாவி - தத்வஜ்ஞானத்தையுடையவன். அத்தகையவனிடம் கர்மத்தின் பலன் ஒட்டாது. அவன் செய்யும் கர்மங்கள் ப்ரஹ்மஜ்ஞானத்தை யுண்டாக்கி பரம்பரயா மோக்ஷ ஸாதனமாகும். இந்த மூன்றுவித பரித்யாகங்களை பண்ணாதவர்களுக்கே கர்மங்களால் ஏற்படும் இஷ்டாநிஷ்ட பலன்களும், இன்பதுன்பங்களைக் கலந்து தரும் (பிள்ளை, பசு, அந்நம் முதலான) பலன்களும் ஒட்டும் (18. 10-12).

*ஶ*ரீரம், ஆத்மா, புலன்கள் (மனம் உள்பட), ப்ராணன், பரமாத்மா இவை ஐந்தும் ஒரு செயல் உண்டாகக் காரணமாகின்றன. ஜீவன் மட்டும் தனித்து ஒரு செயலைச் செய்கிறான் என்பதில்லை. பகவானே அந்தர்யாமியாய் நின்று ஜீவனைத் தூண்டுகிறான். மனம் புலன்களைத் தூண்ட ஒரு செயல் உண்டாகிறது. ஆரம்ப கர்த்தா ஈ*ஶ்*வரனே. *ஶ*ரீரம், மனம், வாக்கு இவைகளினால் ஒரு செயல் செய்யப்பட்டால் மேலே சொன்ன ஐந்துமே காரணமாகும். அதில் பகவான் முக்ய காரணமாகிறான். அதை யறிந்தால் கர்த்தா ஜீவனன்று, பகவானே என்று நினைக்கத் தடையில்லை (18. 13-15). ப்$_3$ரஹ்ம ஸூத்ரத்தில் 'பராத்து தச்ச்$_2$ருதே' (2-3-40) ஜீவனுடைய கர்த்ருத்வம் பரமாத்மாவாலேயே விளைகிறது என்று நிர்ணயிக்கப்பட்டது. கர்த்ருத்வம் பரமாத்மாதீ$_4$னமே. தானே கர்த்தா என்று நினைப்பவன் அறிவற்றவன். பகவானே கர்த்தா என்று நினைத்துச் செய்யும் கர்மங்களின் பலன் பகவானையே சேரும். (அர்ஜுநா! நீ போரில் பலரைக் கொன்றாலும் பாபம் உன்னைச் சேராது என்று கருத்து) (18. 16-17).

கர்மங்களைப் பற்றிய வேத$_3$விதி$_4$, ஜ்ஞாநம் (செய்யவேண்டிய கர்மத்தைப் பற்றிய அறிவு) ஜ்ஞேயம் (அறிந்து செய்யத்தக்க அந்த கர்மம்) பரிஜ்ஞாதா (அந்த கர்மத்தை அறிபவன்) என்று மூன்றுடன் கூடியது. கர்மத்தின் வகை கரணம், கர்ம, கர்த்தா என்று மூன்று. ஜ்ஞானம், கர்மம், கர்த்தா ஒவ்வொன்றும் முக்குணங்களையிட்டு மூன்றாகப் பிரிக்கப்படுகின்றன (18-18, 19). எல்லா ஜீவரா*ஶி*களிடத்திலும் 'ஆத்மவஸ்து ஜ்ஞானமே வடிவாகவுள்ளது' என்று மாறுதலின்றி ஒரேவிதமாக ஆத்மாக்களைக் காண்பது ஸாத்விக ஜ்ஞானம். முற்பிறவியின் வாஸனைக்குச் சேர ஆத்மாக்களின் குணங்களும் செயல்களும் மாறுபட்டிருக்கும் என்றறிவது ராஜஸ ஜ்ஞானம். ஆத்மாக்கள் ஒவ்வொன்றும் வேறுபட்டவை என்றெண்ணி, (ப்ரேதங்களையும் பூதகணங்களையும் ஆராதிப்பதாகிற) அற்ப செயல்களைச் செய்ய எண்ணுவது தாமஸ ஜ்ஞானம் (18. 20-22).

தனக்குரிய வர்ணத்திற்கேற்ப கர்த்ருத்வ, மமதா, ப$_2$ல த்யாகத்துடன் செய்யப்படும் கர்மா ஸாத்விக கர்மா. கர்த்ருத்வ த்யாகமின்றி பலன்கருதி செய்யப்படும் கர்மா ராஜஸ கர்மா. பகவானே கர்த்தா என்றறியாமல் தானே செய்வதாக நினைத்து பிறர்க்கு தீங்கை விளைக்கும்

கர்மா தாமஸ கர்மா (18. 23-25). பலனில் இச்சையின்றி தன்னை கர்த்தாவாக நினையாமல் வெற்றி தோல்விகளில் மனவிகாரமற்று கர்மாவைச் செய்பவன் ஸாத்விக கர்த்தா. பலனை விரும்பியும், அதே ஸமயம் லோபியுமாய், பிறரைத் துன்புறுத்தியும், வெற்றி தோல்விகளில் மனவிகாரமடையுமவனானவன் ராஜஸ கர்த்தா. வைதிக கர்மாவைச் செய்ய தகுதியற்றவனாய், பிறருக்கு கெடுதலே செய்யுமவனாய் சோம்பேறியுமானவன் தாமஸ கர்த்தா (18. 26-28).

மோக்ஷ தர்மம் பயமற்றது என்றும், மற்ற தர்மங்கள் ஸம்ஸார பந்தத்தை தரக்கூடியதால் பயத்தைக் கொடுப்பது என்றும், தேஶ காலத்திற்கேற்ப செய்யவேண்டியதை உள்ளபடி அறிவதும் **ஸாத்விக புத்தி.** தர்மம் அதர்மம், செய்யத்தக்கது தகாதது இவைகளை உள்ளபடி அறியாமலும், ஒன்றை மற்றொன்றாக அறிவதும் **ராஜஸ புத்தி.** அதர்மத்தை தர்மமாக அறிவது, எதையும் உள்ளபடி அறியாமை இவை **தாமஸ புத்தி** (18. 30-32). த்$_4$ருதி - உறுதி, மனதை தாழ்ந்த விஷயங்களில் செல்லாமல் தடுக்கும் உறுதியான மனப்பான்மை. எந்த உறுதி மனம், ப்ராணன் மற்ற புலன்களை தான் செய்யும் யோகத்திலிருந்து நழுவவிடாமல் செய்கிறதோ அது ஸாத்விக த்$_4$ருதி. இங்கு யோக ஶப்தம் பகவது பாஸனத்தைக் குறிக்கும். ப$_2$லனில் பற்றுதலோடு செய்யும் கருமங்களில் உள்ள உறுதி ராஜஸ த்$_4$ருதி. மோக்ஷத்தைத் தவிர்த்து மற்ற புருஷார்த்தங்களான அறம், பொருள், இன்பம் இவற்றில் செருக்குடன் செய்யும் கருமங்களில் உள்ள உறுதி தாமஸ த்$_4$ருதி (18-33-35). கீழ்ச் சொன்னவைகளின் ப$_2$லன்களும் மூன்று விதமாயிருக்கும். யோகத்தை தொடங்கும் போது ஶ்ரமப்பட வேண்டியும் முடிவில் (ஆத்மாநுபவம் இன்பமாகையால்) அம்ருதம் போலே இனிதாயுமிருப்பது ஸாத்விக ஸுக$_2$ம். முதலில் அம்ருதம் போலேயும் முடிவில் துன்பமாயுமிருப்பது, அதாவது இந்திரியங்களால் (அன்னம், பானம் முதலியவற்றால்) பெறக்கூடிய விஷய ஸுக$_2$ம் ராஜஸ ஸுக$_2$ம். அநுபவிக்கும் போதும் துன்பமாய், தூக்கம், சோம்பல் ஆகியவற்றால் விளைவது தாமஸ ஸுக$_2$ம். இரவில் இரண்டு யாமங்கள் மட்டும் தூங்குபவனே மோக்ஷத்திற்கு தகுதியானவன் என்று த$_3$க்ஷ ஸ்ம்ருதி (18. 38-40).

அர்ஜுநா! ப்$_3$ராஹ்மணர். க்ஷத்ரியர், வைஶ்யர், ஶூத்$_3$ரர் என வர்ணங்கள் (ஜாதி) நான்கு. அந்தந்த ஜாதிக்குரிய குணங்களும், கருமமும் முற்பிறவி கர்மவினைக்குச் சேர வேறுபட்டிருக்கும். ஶ்லோகத்தில், (வேதத்தில் அதி$_4$காரமுடைய) அந்தணர், க்ஷத்ரியர், வைஶ்யர்களை ஒரே ஸமஸ்தபதமாகச் சேர்த்தும், (வேதத்தில் அதி$_4$காரமில்லாமையாலே) ஶூத்ரர்களை தனியாகவும் கூறுகிறான். ப்ராஹ்மணனிடம் ஸத்வ குணமும், க்ஷத்ரியனிடம் ராஜஸகுணமும், ஶூத்ரனிடம் தமோ குணமும் விஞ்சியிருக்கும் என்று பாரதத்திலும் புராணங்களிலும் சொல்லப்பட்டுள்ளது. இந்த்ரியங்களை அடக்குதல், ஶௌசம் (தூய்மை), க்ஷாந்தி (பொறுமை), ஆர்ஜவம் (நேர்மை), ஶாஸ்த்ரஜ்ஞானம், வேதாந்தஜ்ஞானம், ஆஸ்திக்யம் (ஈஶ்வர நம்பிக்கை) இவை யாவும் அந்தணர்க்கு ஸ்வபாவமான குணங்கள்.

ஶௌர்யம் (சூரத்தன்மை), துணிவு, மன உறுதி (த்₄ருதி), போரில் புறம் காட்டாமை, அரசு ஆளும் திறன் இவையாவும் க்ஷத்ரியர்க்கு ஸ்வபாவமான குணங்கள். கோ₃ரக்ஷணை, உழவு செய்து (க்ருஷி) பயிர் விளைத்தல், வாணிபம் இவையாவும் வைஶ்யரின் ஸ்வபாவ குணங்கள். மேலே சொன்ன மூன்று வர்ணத்தார்க்கு பணிவிடை செய்வது ஶூத்ரரின் ஸ்வபாவ குணங்கள். ஸ்வபாவ குணங்கள் என்றது – அந்தந்த வர்ணத்தார்க்குரிய கர்மங்கள் அனைத்தும் முன்வினையால் ஏற்பட்டவை என்றபடி. இவர்களின் கருமம் வேறுபட்டிருந்தாலும் இவர்கள் தங்களுடைய கருமத்தைச் (ஸ்வத₄ர்மமான செயல்களைச்) செய்தே மோக்ஷ பலன் பெறலாம் என்று மேலே கூறுகிறான் (18. 41-44). அர்ஜுநா! தம்தம் வர்ணத்துக்குரிய கர்மங்களைச் செய்பவன் என்னை உகப்பித்து மேலான பலனைப் பெறுகிறான். அதாவது பரமபதமே அடைகிறான் (18-45, 46). ப்₃ரஹ்மவித்₃யையில் அதிகாரமில்லாத சூத்ரன் தன் கர்மத்தில் ஈடுபடுவதாலேயே மோக்ஷமடையக் கூடுமோவென்னில் – அந்த ஜன்மத்தில் அவன் செய்யும் கர்மாநுஷ்டானத்தின் பயனாக மறு ஜன்மத்தில் உயர்ந்த குலத்தில் பிறந்து ப்₃ரஹ்ம வித்₃யையை யநுஷ்டித்து மோக்ஷம் பெறலாமன்றோ. விது₃ரன், த₄ர்ம வ்யாத₄ன், ஶப₃ரமணீ முதலானோர் தாழ்ந்த ஜாதியில் பிறந்திருந்த போதிலும், முன் ஜன்மத்தில் ப்₃ரஹ்மஜ்ஞான முடையவர்களா யிருந்ததால், அந்நினைவு நீங்கப் பெறாதவர்களாய் தமக்குரிய கர்மங்களை யநுஷ்டித்து ப்ராரப்த கர்மமும் நீங்கப்பெற்று நற்கதியை யடைந்தார்கள்.

'குலம் தாங்கு சாதிகள் நாலிலும்' (திருவாய் 3-7-9) என்று ஆழ்வாரும் நாலு ஜாதிகளும் ஸமூஹத்தை தாங்குவதாக அருளிச்செய்தார். புருஷ ஸூக்தத்தில் இந்நாலு ஜாதிகளும் பிரமனுடைய நாலு அவயவங்களிலிருந்து உண்டானதாகக் கூறப்பட்டுள்ளது. ப்ராஹ்மண ஜாதி பிரமனுடைய முக₂த்தினின்று உண்டாயிற்று. முகத்தில் ஞானேந்த்ரியங்கள் (மெய் வாய் கண் மூக்கு செவி) உள்ளன. அதற்கேற்ப ப்ராஹ்மணர்கள் தீ₄ர்க்க த₃ர்ஶிகளாகவும், ஜீவாத்ம பரமாத்ம தத்வஜ்ஞானிகளாகவும் உலகத்திற்கு கண்போன்று விளங்குகிறார்கள். கர்மேந்த்ரியங்களுள் வலிமை மிக்க கையிலிருந்து தோளாண்மையுடைய க்ஷத்ரியன் பிறந்தான். ஜனஸமூஹம் க்ஷத்ரியனுடைய தோள்வலிமையினால் ரக்ஷிக்கப்படுகிறது. ராஜாக்கள்இல்லாவிடில் நாடு அராஜகமாகி அழிந்துபோகும். அதனாலேயே அரசனுக்கு திருமாலின் அம்ஶம் உள்ளதாகக் கூறப்படுகிறது. எல்லோரும் உண்டு ஜீவிப்பதற்கு அவஶ்யமான உணவுப்பொருள்களை உண்டாக்குவதையும், பலருக்கு விநியோஹிப்பதையும் தொழிலாகவுடைய வைஶ்யன் துடையிலிருந்து பிறந்தான். வைஶ்யனுடைய தாளாண்மையினாலேயே வேளாண்மை நடக்கிறது. எல்லோருடைய தேஹத்தையும் போஷிப்பது வைஶ்யனுடைய தொழில்.

இம்மூவர்ணத்தார்க்கும் வேண்டிய உபகரணங்களை ஸம்பாதித்துக் கொடுப்பதற்காக நடந்து ஓடி கார்யம் செய்பவனாகையால் சூத்₃ரன் காலிலிருந்து படைக்கப்பட்டான். கால்கள்

ஶரீரத்தைத் தாங்குவதுபோல் அவன் மூவர்ணத்தாரையும் தாங்குகிறான். காலிலிருந்து உண்டானதால் ஒருவிதமான தாழ்வும் கிடையாது. எம்பெருமானுடைய திருவடிகளே எல்லோர்க்கும் வணங்கும் துறையன்றோ. மற்ற வர்ணத்தார்க்குரிய நியம நிஷ்டைகள், ஆசார வ்யவஹாரங்கள் முதலிய கஷ்டங்கள் இவர்களுக்குக் கிடையாது. சொன்னதைச் செய்வதில் பாபமும் ஸம்பவிக்காது; பொறுப்பும் கிடையாது. அவர்களுக்கு நற்கதியடைவது மிகவும் ஸுலபம். பிறப்பினாலேயே அவர்களுக்கு நைச்யமும், அஹங்கார மமகாரமில்லாமையும் ஏற்பட்டிருக்கின்றன. ஆசார்யர்களும் உயர்ந்த வர்ணத்தார்க்குப் பிறப்பினாலேற்படும் அஹங்கார மமகாரங்கள் அநர்த்தத்தை விளைவிக்குமாகையால் அவற்றை விட்டொழிக்க வேணுமென்று உபதே₃ஶித்திருக்கிறார்கள். 'தொழுமினீர் கொடுமின் கொண்மின்' (திருமாலை 42) என்று அவர்களிடமிருந்து ஞானத்தை பெற்றுக்கொள்வதிலும் அவர்களுக்கு ஞானத்தை கொடுப்பதிலும் தடையில்லை என்று தொண்டரடிப்பொடியாழ்வாரும் அருளியிருக்கிறார்.

பே₃தா₄னம், ரக்ஷணம், போஷணம், ஸேவகம் என்பவை முறையே நான்கு வர்ணத்தார்க்கும் தொழிலாகும். ஒவ்வொருவரும் மற்ற வர்ணத்தார்க்காக உழைக்கிறார்கள். நால்வரும் பகவானுடைய அவயவங்களே. அவர்களுக்குள் ஏற்றத்தாழ்வு கிடையாது. அவர்கள் ஒருவர்க்கொருவர் சண்டையிடுவது சரீரத்தின் அவயவங்கள் ஒன்றுக்கொன்று சண்டை செய்வதோடு ஒக்கும். இப்படியிருக்கும்போது ஶூத்₃ர ஶப்₃த₃ம் இழித்தவனைக் கூறுவதாக சில நாஸ்திகர்கள் பிரசாரம் செய்வதற்கு ஆதாரம் ஏதுமில்லை. 'ஶோசதீ இதி ஶூத்ர:' (வருந்துகிறவனாகையாலே சூத்ரன்) எனும் வ்யுத்பத்தியாலே முதல் மூன்று வர்ணத்தார்க்கு பணி செய்வதன் மூலம் மெய்வருத்தம் அடைகிறவனாகையாலே சூத்ரன் எனப்படுகிறான். அல்லது 'ஶுசம் த்₃ராவயதி இதி ஶூத்₃ர:' (வருத்தத்தைப் போக்குகிறவனாகையாலே சூத்ரன்) எனும் வ்யுபத்தியாலே தன் ஸேவையின் மூலம் முதல் மூன்று வர்ணத்தவர்களுடைய வருத்தத்தை போக்குகிறவனாகையாலே 'சூத்ரன்' எனப்படுவதாகவும் கொள்ளலாம்.

சூத்ரனுக்கு முதல் மூன்று வர்ணத்தவர்களுக்கு பணிபுரிவதே தொழில் என்று கூறியிருப்பது பொது விதி. இதற்கோர் விதிவிலக்கு உண்டு. ஆழ்வார்களைப் போன்ற ஜாயமாந கால கடாக்ஷம் பெற்ற மஹாத்மாக்களான ஞானிகளுக்கும், திருக்கச்சி நம்பி, மாறனேர் நம்பி, பிள்ளையுறங்கா வில்லிதாஸர் போன்ற ஆசார்யாபிமானம் பெற்ற பெரியோர்களுக்கும் அவர்களுடைய சரீரத்தில் தமோகுணம்மிகுதி நீங்கப்பெற்று ஸத்வகுணமிகுதி உண்டாகி தொண்டர்குலமாகிற உயர்ந்த ஜாதி வந்துவிடுகிறதாகையால், அத்தகையோர் அந்த ஜாதிகளுக்குரிய செயலையும் தொழிலையும் கடைபிடிக்க வேண்டிய நிர்பந்தமில்லை. இத்தகைய மஹாத்மாக்கள் விஷயத்தில்மட்டும் ஜாதி போகுமேயொழிய

எல்லா பாகவதர்கள் விஷயத்திலும் ஜாதி நீங்காது. பாகவதர்களும் தங்கள் ஜாதி நீங்கிவிட்டதாக அபிமானித்து வர்ணாஶ்ரம ஆசாரங்களை குலைப்பதில்லை. பஞ்ச ஸம்ஸ்காரம் செய்யப்பெற்ற க்ஷத்ரிய வைஶ்ய சூத்ரர்கள் மந்த்ரமில்லாமல் எம்பெருமானை ஆராதிக்க உரிமை கொடுக்கப்பட்டுள்ளது. பகவத் பக்தர்களாகிவிட்டால் ஶூத்ரர்களுக்கு ஶூத்ரத்தன்மை கழிந்து உயர்ந்த நிலையடைவதாக சொல்லப்படுகிறது.

**(இவ்விடத்தில் ப்ராஸங்கிகமாக சில விஷயங்கள் குறித்துப் பேசுவோம்.** ஜ்ஞாநிகளின் ஜாதி விஷயத்தில் தேசிகருடைய திருவுள்ளமும் மற்ற ஆசார்யர்களின் திருவுள்ளமும் வேறுபடுகிறது. **தேசிகரின் திருவுள்ளம்:** பக்தியில்லாத அந்தணன் ஒருவன். பக்தியில்லாத நான்காம் வர்ணத்தவன் ஒருவன். இருவரிடமும் பக்தியில்லை என்றே வைத்துக் கொள்வோம். இருப்பினும் இவர்களுக்குள் தாரதம்யம் உண்டா இல்லையா? உண்டு. அத்தகைய தாரதம்யம் பக்தியுள்ள அந்தணனுக்கும் பக்தியுள்ள சூத்ரனுக்கும் உண்டு. ஜாதி என்பது வேறு. குலம் என்பது வேறு. ப்ராஹ்மண, க்ஷத்ரிய, வைஶ்ய, சூத்ர மற்றும் அதிலும் தாழ்ந்த ஜாதிகள் உள்ளன. இவை சரீரமுள்ளவரை அழியாது. ஆனால் அவைஷ்ணவன் வைஷ்ணவனாகலாம். ஆக, குலம் மாறக்கூடியது; ஜாதி அழியாது. திருஶூரபியானாலும் (காமதேனுவானாலும்) கே$_3$ாத்வம் (பசு ஜாதி) கழியாது. ஆழ்வாரானாலும் ஜாதி போகாது.

ப்ராஹ்மணரான மதுரகவிகளுக்கு நான்காம் வர்ணத்தவரான ஆழ்வார் ஆசார்யரானது ஆழ்வாரின் ஜாதி போனதனாலன்று. ஆழ்வாரை மதுரகவிகள் ஆசார்யராக கொண்டதையோ, நாலு ஜாதிகளுக்கும் கீழான ஜாதியைச் சேர்ந்த திருப்பாணாழ்வாரை வர்ணத்தாலும் ஆஶ்ரமத்தாலும் உயர்ந்த லோக ஸாரங்க மாமுனிகள் அரங்கன் ஸந்நிதிக்கு தோளில் ஏற்றிக் கொண்டு வந்ததையோ, ஜாதி நஶியும் என்பதற்கு ஆதாரமாகக் காட்டக்கூடாது. விஶ்வாமித்ர ப்ராஹ்மண்யத்துக்கு காரணம் சரு வ்யத்யாஸமே; தபஸ்ஸு காரணமன்று. ஆசார்யன், தந்தை, தமயன், பர்த்தா – நால்வருடைய உச்சிஷ்டமே புனிதமானவை. மற்றைய பாகவதர்கள் எத்தனை பெரிய ஜ்ஞானிகளானாலும் அவர்களுடைய உச்சிஷ்டபோஜனம் கூடாது. விஹகேந்த்ர ஸம்ஹிதையில், 'நாராயணைக நிஷ்டஸ்ய' என்று தொடங்கி 'நாராயணன் ஒருவனிடத்திலேயே பக்தி செலுத்தும் பாகவதனுடைய எந்தச் செயலும் பகவதாராதனமாகும்; அவனுடைய சொற்கள் யாவும் மந்த்ரங்களாகும்; அவன் பார்வை யாவும் விஷ்ணு த்யானமாகும்' என்று சொல்லி, 'தத்$_3$ பாத$_3$ாம்ப்வதுலம் தீர்த்த$_2$ம் தத்$_3$ உச்சிஷ்டம் ஸுபாவநம்' – அவன் திருவடி ஸம்பந்தப்பட்ட ஜலம் ஒப்பற்ற தீர்த்தம், அவன் உண்டு மிகுந்த சேஷம் (மிச்சம்) புனிதமானது என்று சொல்லியிருப்பது ப்ரஶம்ஸா மாத்திரம். பகவத் பக்தனை புகழ்வதற்காகச் சொன்னதே. இதுகொண்டு பாகவதனுடைய ஸ்ரீபாத தீர்த்தமோ உண்டு மிகுந்த எச்சிலோ புஜிக்கலாம் என்று தேறிவிடாது. 'வானுளார் அறியலாகா'

எனும் திருமாலை 41-ம் பாசுரத்தில் தொண்டரடிப்பொடியாழ்வார், 'மிகத் தாழ்ந்தவர்களான போதிலும் திருநாம ஸங்கீர்த்தனம் செய்யும் பாகவதர்களின் 'போனகம் செய்த சேடம்' நம்மைப் புனிதமாக்கும் என்றருளிச் செய்தது உண்ட இலையிலுள்ள எச்சிலைப் பற்றியதல்ல; சமைத்த பாத்திரத்திலுள்ள மிச்சத்தைப் பற்றியதே. ஆழ்வார்கள் வரலாறுகள் வ்யக்தி விஶேஷ நியதம். மிகுந்த பெருமையுடைய ஆழ்வார்களுடைய வரலாறுகளை நம் அநுஷ்டானத்துக்கு ப்ரமாணமாகக் காட்ட முடியாது. அவற்றை அப்படியே யநுஷ்டிக்கும் பக்ஷத்தில் லோக க்ஷோபம் பிறக்கும். ஆக, ஜாதி நஶியாது. வர்ணாஶ்ரம வ்யவஸ்தையை மீறி இதர வர்ணத்தவர்களை உபசரிப்பதோ கௌரவிப்பதோ ஏலாது.

**தென்னாசார்யர்களின் திருவுள்ளம்:**

ஆழ்வார்களில் சிலர் தாழ்ந்த வர்ணங்களில் பிறந்துள்ளதால் அவர்கள் பக்கல் ஜாதி ப்ரயுக்தமான நிகர்ஷம் (தாழ்ச்சி) பாராட்டலாகாது. இவ்விஷயம் ஸ்ரீவசன பூஷணம், ஆசார்ய ஹ்ருதயம் முதலான க்ரந்தங்களில் பல ப்ரமாணங்களைக் காட்டி, உண்மையில் உத்க்ருஷ்ட ஜன்மம் இன்னது, நிக்ருஷ்ட ஜன்மம் இன்னது என்று நிர்கர்ஷித்துள்ளார்கள்.

லோகத்தில் ஒவ்வொருவரும் தமக்குப் பெருமையுண்டென்று நினைப்பதற்கு பல ஹேதுக்கள் உள்ளன. ஆனால் உண்மையில் ஜாதியினால் ஏற்றம், ஆஶ்ரமத்தால் உயர்வு, கல்வியினால் சிறப்பு, ஒழுக்கத்தால் உத்தகர்ஷம் இவை பக்திப் பெருஞ்செல்வ மில்லாதபோது சிறிதும் பயன்படாது. எம்பெருமானுக்கு ஶேஷப்பட்டிருத்தலே ஆத்மாவின் ஸ்வரூபமாகையால், அதற்கேற்ப த்யாஜ்ய உபாதேயங்களை பகுத்துணரும் ஜ்ஞானவான்கள் பகவத் ஸம்பந்தம் ஒன்றைக் கொண்டே பெருமையை நிஷ்கர்ஷிப்பர்களேயன்றி, மேற்சொன்ன காரணங்களினால் மட்டும் பெருமையைக் கருதார்கள்.

'சதுர்வேத$_3$ த$_4$ரோ விப்ரோ வாஸுதே$_3$வம் நவிந்ததி| வேத$_3$ப$_4$ார ப$_4$ராக்ராந்தஸ் ஸ வை ப்$_3$ராஹ்மண க$_3$ர்த்த$_3$ப$_4$:|| 'நாலு வேதங்களை யதிகரித்து வைத்தும் வேத ப்ரதிபாத்யனை அறியப் பெறாதவன் குங்குமம் சுமந்த கழுதை போல தான் சுமக்கும் வேதத்தின் பரிமளமறியா ப்$_3$ராஹ்மணக் கழுதை' என்பது ரிஷி வாக்கு. ஆக வெறும் ப்ராஹ்மண ஜாதி பிறப்பைக் கொண்டு பெருமை பாராட்டலாகாது. ஶ்வபசோபி மஹீபால! விஷ்ணுபக்தோ த்விஜாதிக:| விஷ்ணுப$_4$க்தி விஹீநஸ்து யதிஶ்ச ஸ்வபசாதம:|| 'சண்டாள யோனியில் பிறந்தவனாயினும் விஷ்ணுபக்தி யுடையவனாயின் அவன் கேவல ப்$_3$ராஹ்மணனை விடச் சிறந்தவன்; உத்தம ஆஶ்ரமியானாலும் எம்பெருமானிடத்தில் ப$_4$க்தியில்லாதவன் சண்டாளரிலும் தண்ணியவன்' எனும் ப்ரமாணம் வெறும் ஸந்யாஸ ஆஶ்ரமத்தைக் கொண்டு பெருமை கருதலாகாது என்கிறது. தத்கர்ம யந்ந ப$_3$ந்த$_4$ாய ஸா வித்$_3$யா யா விமுக்தயே| ஆயாஸாயாபரம் கர்ம வித்$_3$யாந்யா ஶில்பநைபுணம்|| 'மோக்ஷார்த்தமாக உபயோகப்படும்

வித்யை எதுவோ அதுவே வித்யை; அப்படியில்லாதது செருப்புக்குத்த கற்ற கல்வி போன்றது' எனும் விஷ்ணுபுராண வசனம் கேவல தர்க்க பாண்டியத்யத்தைக் கொண்டு பெருமை பாவிக்கலாகாது என்கிறது. 'ஆம்நாய அப்₄யஸநாந் யரண்யருதித₃ம்' எனும் முகுந்த₃மாலை 25-ம் ஶ்லோகத்தில் 'ஸர்வே ஹுதம் ப₄ஸ்மநி' என்று பகவத் சிந்தனையில்லாதவன் செய்யும் கர்மாநுஷ்டானம் சாம்பலிலிட்ட ஆஹுதி போல் ப்ரயோஜனமற்றது என்று சொல்லியுள்ளது. ஆக, வெறும் வைதிக கர்மானுஷ்டானங்களைக் கொண்டே பெருமை கருதலாகாது என்றாயிற்று.

இப்பிரமாணங்களில் எவர்க்கும் விப்ரதிபத்தியிராது. ஆனாலும் வர்ணாஶ்ரம வ்யவஸ்தையை மீறி இதர வர்ணத்தவரை உபசரிப்பதோ, கௌரவிப்பதோ ஏலாது எனும் அபிஸந்தியினால் வாதவிவாதங்கள் எழுந்துள்ளன. இவை சிறிதும் அனுஷ்டானத்திற்கு உபயோகப்படாத விஷயம். ஏனெனில் இக்காலத்தில் இதர வர்ணத்தார் யோக்யதை ஸம்பாதித்திருந்தாலும், அவர்கள் பக்கல் நாம் – உபய ஸம்ப்ரதாயஸ்தர்களும் – எங்ஙனம் நடந்து கொள்கிறோம் என்பது ப்ரத்யக்ஷம். மேற்சொன்ன அர்த்த விஶேஷங்களை சேமிக்கிற நாமும், இவற்றில் குறை காண்போரும் நடத்தையில் ஒரு வாசியின்றிக்கேயிருப்பது ப்ரத்யக்ஷஸித்தம். உண்மையில் இந்த உத்க்ருஷ்ட ஜந்ம ப்ரபாவ விஷயம் போலியான பக்தியை அபிநயித்து பாகவதன், பக்தன் என்று பேர் சுமக்கும் வேஷதாரிகளான இக்காலத்தவர்களைப் பற்றியன்று. இவர்கள் பக்கல் இந்நிரூபணங்கள் ஸர்வாத்மநா அப்ரஸக்தம்.

கிமப் யத்ராபி₄ ஜாயந்தே யோகிந: ஸர்வயோநிஷு| ப்ரத்யக்ஷிதாத்ம நாதா₂நாம் நைஷாம் சிந்த்யம் குலாதி₃கம்|| 'எம்பெருமானுடைய நிர்ஹேதுக கடாக்ஷத்தாலே ஜ்ஞானிகள் இவ்வுலகில் எல்லா ஜாதிகளிலும் பிறக்கிறார்கள். ஸர்வாத்மாக்களுக்கும் ஆத்மாவான அவ்வெம்பெருமானை ஸாக்ஷாத்கரித்த ஜ்ஞானிகளை குலம் முதலானவைகளையிட்டு தாழ நினைக்கலாகாது'; 'த₃க்₃த₄ து₃ர்ஜாதி கில்பி₄ஷ:' – தாழ்ந்த ஜாதியாகிற தோஷம் (ஜ்ஞானத்தாலே) எரிக்கப்பட்டவன், எனும் பாரத்வாஜ ஸம்ஹிதா, ஸ்ரீமத் பாகவத ப்ரமாணங்களுக்கு இலக்கான மஹாபாகவதோத்தமர்களைப் பற்றியே உத்க்ருஷ்ட ஜந்ம நிரூபணம் ரஹஸ்ய க்ரந்தங்களிலே அமைந்தது. பரம விலக்ஷண பாகவத சிகாமணிகள் க்வசித் க்வசித் ஓரோவிடங்களிலே தோன்றினால் அன்னார் திறத்தில் ப்ரதிபத்தியோடு இருக்க வேணும் என்று காட்டவே இவ்வர்த்த விஶேஷங்களை அவஶ்யமாக பூர்வர்கள் ஹிதசிந்தையோடே எழுதி வைத்தார்கள். அவ்விஷயம்தான் யாதென்னில் – ஜந்மோத்கர்ஷ விசாரத்தில் 'ஜாதி நஶிக்கும்' என்பது; 'க்ஷத்ரியனான விஶ்வாமித்ரன் ப்₃ரஹ்மரிஷியானான்' இத்யாதி ஸ்ரீஸூக்திகள். இவற்றுக்கு மறுப்பாக தேசிகன் ரஹஸ்யத்ரய ஸாரத்தில் 'சரு வ்யத்யாஸாதிகளான சில விஶேஷ நிதானங்களாலே வருகிற விஶ்வாமித்ராதிகளுடைய நிலை வேறு சிலர்க்கும் கூடும் என்கை வசன வ்ருத்₃த₄ம்' என்றருளிச் செய்துள்ளார்.

நம் ஸித்தாந்தத்தில் ஜாதி பகவத் ஸங்கல்ப விஶேஷம் என்று நிர்ணயிக்கப்பட்டுள்ளது. ஸங்கல்ப விஶேஷமே ஜாதியாகையாலே, அந்த ஜாதியும் தபஸ்ஸு, ப்$_3$ராஹ்மண வாக்யம், ஶாபம் இவைகளால் மாறுவதுபோல், ஆழ்வார்களிடத்தும் பகவத்கடாக்ஷ விஶேஷத்தாலே மாறத் தட்டில்லை. ப்$_3$ராஹ்மணராகவும், க்ஷத்ரியராகவுமிருந்து தங்கள் கொடிய ஒழுக்கத்தால் திரிசங்கு, அஜாமிளன், க்ஷத்ரபந்து முதலானோர் தம் உயர் ஜாதியையிழந்து தாழ்ந்த ஜாதியையடைந்தனர் என்று ப்ரமாணங்கள் கூறுவதை ஒப்புக்கொள்ளும் நாம், அதேபோல் தலைசிறந்த ஜ்ஞாநிகளான மஹாத்மாக்கள், தாழ்ந்த ஜாதி நீங்கப்பெற்று உயர்ந்தவராகிறார்கள் என்று சொல்லும் ப்ரமாணங்களை இசைந்தே தீர வேணும். வ்ருத்$_3$த$_3$ கெ$_3$தம ஸ்ம்ருதியில், ந ஶூத்$_3$ரா ப$_4$க$_3$வத்ப$_4$க்தா விப்ரா ப$_4$ாக$_3$வதா: ஸ்ம்ருதா: - எம்பெருமானிடம் பக்தியுள்ளவர்களான சூத்ர ஜாதியினர் சூத்ரர்களல்லர்; அவர்கள் அந்தணர்களே - என்று சொல்லியுள்ளது. மத்$_3$ப$_4$க்தஜந வாத்ஸல்யம் ... ஸ விப்ரேந்த்$_3$ரோ முநி: ஸ்ரீமாந் ஸ யதி: ஸ ச பண்டித: தஸ்மை தே$_3$யம் ததோ க்$_3$ராஹ்யம் ஸ ச பூஜ்யோ யத$_3$ா ஹ்யஹம்|| என்று க$_3$ாருட$_3$ புராணத்தில் 'என் பக்தர்களிடத்தில் வாத்ஸல்யம், என்னை ஆராதனை செய்வதை ஆமோதித்தல், தானே யென்னை பூஜித்தல், என் விஷயத்தில் ஆடம்பரமற்றிருத்தல், என் சரிதங்களை கேட்பதில் விரும்பியிருத்தல், என்னை நினைத்து குரல் தழுதழுத்து கண்ணீர் மல்கி உடம்பு மயிர்க்கூச்செறியப் பெற்றிருத்தல், எப்போதுமென்னை நினைத்திருத்தல், என்னிடம் வேறு ஒரு ப்ரயோஜனம் கேளாதிருத்தல் எனும் அஷ்டவித பக்தி எவனிடம் காணப்படுகிறதோ ம்லேச்சனாயினும் அவனே ப்$_3$ராஹ்மண ஶ்ரேஷ்டன்; அவனே முநிவன்; அவனே தனவான்; அவனே ஸந்யாஸி; அவனே பண்டிதன்; அவனுக்கு ஜ்ஞானத்தை யுபதேஶிக்கலாம்; அவனிடமிருந்து ஜ்ஞாநோபதேஶம் பெறலாம்; அவன் என்னைப்போல் பூஜிக்கத் தக்கவன்' என்று சொல்லியுள்ளது.

ஆக, எம்பெருமானிடம் தலைசிறந்த பக்தியுடையவர்களும், அவனையே ப்ராப்யம், ப்ராபகம், த$_4$ாரகம், போஷகம், பே$_4$ாக்$_3$யமாகிய எல்லாமாகக் கொண்டவர்களுமான ஜ்ஞாநிகள் விஷயத்தில் அவர்களுடைய தாழ்ந்த ஜாதி போய் உயர்ந்த ஜாதியராகவே கருதப்படுவரெனத் தெரிகிறது. 'ஸ மஹாத்மா ஸுதுர்லப:' என்று எம்பெருமான் அருளியபடியே அத்தகைய அதிகாரிகள் துர்லபர். நம்மாழ்வார், திருப்பாணாழ்வார் முதலியோர் அத்தகையவர்கள். இத்தகைய மஹாத்மாக்களான ஜ்ஞாநிகள் விஷயத்திலேயே ஜாதி போகுமேயொழிய, எல்லா பாகவதர்கள் விஷயத்திலுமல்ல. ஆகையால் வர்ணாஶ்ரம தர்மங்களை விதிக்கும் ஶாஸ்த்ரங்கள் வ்யர்த்தமாகா. இத்தகைய மஹாத்மாக்களான ஜ்ஞானிகளும் தங்கள் வர்ணாஶ்ரம தர்மங்களை அதிக்ரமியார். ஆழ்வார் வேதார்த்தங்களை திவ்யப்ரபந்தங்களிலே அருளினாரேயொழிய வேத வாக்யங்களை தம் வாயால் சொல்லவில்லை. கலியனும் தம் அநதிகாரம் தோற்ற 'அந்தணர் மாடு' என்றிறே

யருளிச்செய்தது. திருப்பாணாழ்வாரும் முதலில் மாமுனிகள் தோளிலே ஏற மறுத்து, பின் 'அரங்கன் ஆணை' என்றறிந்த பின்பிறே பாரதந்த்ர்யத்தை யநுஷ்டித்து தோளிலே ஏறினார். திருமழிசைப்பிரானும் வேதவாக்யத்தைச் சொல்லாமல் கறுப்பு நெல்லைக் கீறியன்றோ அந்தணர்களுக்கு வேதத்தில் விட்டவிடத்தை நினைவூட்டினார்.

தாழ்ந்த வர்ணத்திலுதித்த ஒருவர் மஹாத்மாவான ஜ்ஞானி என்று நிர்ணயிக்கும் தகுதி எம்பெருமானுக்கும் ஆழ்வார்கள் ஆசார்யர்கள் போன்ற மஹாத்மாக்களுக்கே உண்டு. இக்காலத்திலுள்ள ஸ்ரீவைஷ்ணவர்கள் இத்தகுதியுள்ளவர்கள் எவரேனும் இருக்கிறார்களா என்பது விளங்கவில்லை. இத்தகைய மஹாத்மாக்களான ஜ்ஞானிகள் விஷயத்தில் வர்ணாஶ்ரம தர்மத்தை மீறிய செயல்கள் பெரியோர் அநுஷ்டித்திருக்கிறார்கள் என்பதற்கு இதிஹாஸ புராணங்களிலும் ஆழ்வார் ஆசார்யர்கள் சரிதங்களிலும் பல சான்றுகள் உண்டு. ஆசார்ய ஹ்ருதயத்தில் முதல் ப்ரகரணத்தில் கடைசி இரண்டு ஸ்ரீஸூக்திகள்:

'ம்லேச்ச₂னும் ப₄க்தனானால், சதுர்வேதி₃கள் அநுவர்த்திக்க அறிவு கொடுத்து, குலதை₃வத்தோடொக்கப் பூஜை கொண்டு பாவநதீர்த்த₂ ப்ரஸாத₃னாம் என்கிற திருமுகப்படியும், விஶ்வாமித்ர-விஷ்ணுசித்த-துளஸீப்₄ருத்யரோடே உள்கலந்து தொழுகுலமானவன் நிலையார் பாடலாலே ப்₃ராஹ்மணவேள்விக்குறை முடித்தமையும், கீழ்மகன் தலைமகனுக்கு ஸமஸக₂ாவாய்த் தம்பிக்கு முன்பிறந்து வேலும் வில்லுங்கொண்டு பின்பிறந்தாரைச் சோதித்துத் தமையனுக்கு இளையோன் ஸத்₃ப₄ாவம் சொல்லும்படி ஏககுலமானமையும், தூது மொழிந்து நடந்துவந்தவர்களுடைய ஸம்யக்ஸகு₃ண ஸஹபோ₄ஜநமும், ஒரு பிறவியிலே இரு பிறவியானாரிருவர்க்கு த₄ர்மஸூநுஸ்வாமிகள் அக்₃ரபூஜை கொடுத்தமையும், ஐவரில் நால்வரில் மூவரில் முற்பட்டவர்கள் ஸந்தேஹியாமல் ஸஹஜரோடே புரோட₃ாஶமாகச் செய்த புத்ரக்ருத்யமும், புஷ்பத்யாக₃போ₄க₃ மண்டபங்களில் பணிப்பூவும் ஆலவட்டமும் வீணையுங்கையுமான அந்தரங்க₃ரை முடிமன்னவனும் வைதி₃கோத்தமரும் மஹாமுனியும் அநுவர்த்தித்த க்ரமமும், யாக₃ாநுயாகோத்தர வீதிகளில் காயாந்நஸ்த₂ல ஶுத்₃தி₄ பண்ணின வ்ருத்₃த₄ாசாரமும் அறிவார்க்கிறே ஜந்மோத்கர்ஷாபகர்ஷங்கள் தெரிவது. அஜ்ஞர் ப்₄ரமிக்கிற வர்ணாஶ்ரம வித்₃யா வ்ருத்தங்களை க₃ர்த்த₃ப₄ ஜன்மம் ஶ்வபசாத₄மம் ஶில்பநைபுணம் ப₄ஸ்மாஹுதி, ஶவித₄வாலங்காரமென்று கழிப்பர்கள்'.

ஸர்வ ப்ரகாரங்களாலும் உத்க்ருஷ்டரான சக்ரவர்த்தி திருமகன் ஜன்ம விருத்த ஜ்ஞானங்களால் தண்ணியரான குஹப்பெருமாளை 'உம்பி எம்பி' – நீ எனக்குத் தம்பி; இளைய பெருமாளுக்குத் தமயன் என்று அங்கீகரித்தார். அதே சக்ரவர்த்தி திருமகன் வேடுவிச்சி ஶப₃ரி கையாலே விருந்துண்டான் – பரம பாகவதையாய் ஆசார்ய நிஷ்டை யுடைவளாயிருந்ததாலே. தூது வந்த குரங்கு 'த்₃ருஷ்டா ஸீதா' என்று சொல்லக் கேட்டு

ப்ரீதரான பெருமாள் 'மர்க்கடம் விலங்கு' என்கிறபடி சாதியால் தாழ்ந்த அநுமனோடு ஸஹபோ₄ஜனம் செய்தார். பாண்டவர்கட்காக ஹஸ்தினாபுரத்துக்கு தூது போன கண்ணபிரான் பீ₄ஷ்மர், து₃ரோணர் முதலானாருடைய க்ருஹங்களை விட்டு, 'விது₃ராந்நாநி பு₃பு₄ஜே ஶுசீநி கு₃ணவந்திச' என்கிறபடி பாவநத்வ போக்யத்வங்கள் கண்டுகந்து ஜாதியால் தாழ்ந்த ஸ்ரீவிதுரர் திருமாளிகையில் அமுது செய்தான். த₄ர்மபுத்ரர் தம்முடைய ராஜஸூய யாகத்தில், பட்டத்துக்குரிய க்ஷத்ரியர்கள், ரிஷிகள் நிறைந்த ஸபையில், அவர்களைக் கணிசியாது, யது குலத்தில் பிறந்து ஆய்க்குலத்திலே வளர்ந்த கண்ணனுக்கு அக்₃ரபூஜை கொடுத்தார். பார்க்கவ ரிஷியின் புத்ரராய் பிறந்து, பிரப்பங்குடியில் தஜ்ஜாதீயராய் வளர்ந்த திருமழிசைப்பிரான் 'குலங்களாய ஈரிரண்டில் ஒன்றிலும் பிறந்திலேன்' என்றருளிச் செய்தவர் - பெரும்புலியூருக்கு வந்தபோது அவரைத் தாழ்ந்த ஜாதியராக நினைத்து வேதாத்யயனத்தை நிறுத்திய அந்தணர்கள், அனந்தரம் தங்கள் யாகத்தில் திருமழிசைப் பிரானுக்கு அக்₃ரபூஜை செய்தார்கள்.

பெருமாள் பக்ஷியான பெரியவுடையாருக்கு, இளைய பெருமாளும் கூட நிற்கச் செய்தே அவர் கையில் காட்டிக் கொடாமே, தானே ப்₃ரஹ்மமேத ஸம்ஸ்காரம் பண்ணினார். ஜடாயு ஸம்ஸ்காரத்தைப் பற்றி ஸ்ரீராமாயணத்தில் பேசும் ப்ரகரணத்தில் பெருமாள் மந்த்ர ஜபம் பண்ணினபடியை வான்மீகி முனிவர் தாமே ஸுஷ்பஷ்டமாகச் சொல்லிவைக்கையாலே அங்கே 'தூஷ்ணீம் அநுஷ்டிதம்' என்னவொண்ணாது (அமந்த்ரகமாக ஸம்ஸ்காரம் பண்ணினார் என்னவொண்ணாது). ப்₃ரஹ்மவித்தான விது₃ரர் யோக ப்ரபாவத்தால் தேஹந்யாஸம் பண்ணின பின்பு, த₄ர்மபுத்ரர் அவருடைய ஜ்ஞாநாதிக்யத்தையும் அஶரீரி வாக்கையுங்கொண்டு புத்ரக்ருத்யமான சரம கைங்கர்யத்தைச் செய்தார். ப்ரஹ்மமேதத்தாலே ஸம்ஸ்கரித்தார். இதை தூஷ்ணீம் ஸம்ஸ்காரம் என்னவொண்ணாது. அஶரீரி சொன்ன வாக்யத்தோடு விரோதிக்கும். விது₃ரரை ஸம்ஸ்கரிக்க வேண்டி வந்தவளவில், விது₃ரருடைய ஜாதியைப் பார்ப்பதும் ஜ்ஞானமிகுதியைப் பார்ப்பதுமாய் கலங்கி நிற்க, அப்போது என்னாயிற்று? ஓர் ஆகாஶவாணி உண்டாயிற்று. 'இத்திருமேனி தூஷ்ணீம் தஹனம் பண்ணத்தகாதது; ஸநாதன ஏஷ த₄ர்ம: தே லோக வைலக்ஷணோ ந ப₄விஷ்யதி – ப்ராசீன ஆசார ஸித்தமாய், தூஷ்ணீம் தஹநமன்றிக்கே ஸம்ஸ்கரிப்பதாகிற இந்த தர்மமானது உனக்கு ஶாஸ்த்ர விபரீதமாக மாட்டாது'. இது தனக்கு காரணம் சொல்லிற்று மேல் – யதி த₄ர்மம் அவாப்தோஸௌ – இவர் யதியைப் போல ப்₃ரஹ்மமேத ஸம்ஸ்கார அர்ஹரேயொழிய தூஷ்ணீம் தஹிக்கத் தக்கவரல்லர் என்றபடி. தூஷ்ணீம் தஹித்து விடுவதோ? ஸம்ஸ்கரிக்கக் கடவதோ? என்று கலங்கி ஶோகியாதே கொள் என்றபடி. 'அஸௌ யதி த₄ர்மம் அவாப்த:' என்று ஸ்பஷ்டமாகச் சொல்லியிருக்கையாலே, ப்₃ரஹ்மமேத ஸம்ஸ்காரம் இவர்க்குச் செய்யுமாறு விதி₄க்கப்பட்டது. யதிகளுக்கு தூஷ்ணீம் ஸம்ஸ்காரம் கண்டதில்லையிறே.

ஸ்ரீவிது$_3$ரர்க்கு துர்யோதனன் சொன்ன ஜாதி விஶேஷத்தை பகவான் இசைந்தான் என்று தேசிகன் எழுதியிருப்பதும் அவருடைய தனிப்பட்டக் கருத்தாகக் கொள்ள வேணும். அதாவது கண்ணபிரான் விது$_3$ரர் திருமாளிகையிலே அமுது செய்தவாறே 'கிமர்த்தம் புண்டரீகாக்ஷ புக்தம் வ்ருஷல போ$_4$ஜநம்' – கண்ணா! சூத்ரனுடைய சோற்றை எதுக்காக உண்டாய்? என்று துர்யோதனன் கேட்க, அதற்கு கண்ணபிரான் 'விது$_3$ரர் சூத்ரர் அல்லர்' என்று பதில் சொல்ல வேண்டியிருக்க அங்ஙனம் சொல்லாமல், த்$_3$விஷத$_3$ந்நம் ந போ$_4$க்தவ்யம் த்$_3$விஷந்தம் நைவ போ$_4$ஜயேத்| பாண்ட$_3$வாந் த்$_3$விஷஸே ராஜந்! மம ப்ராணா ஹி பாண்ட$_3$வா: – த்வேஷிப்பனின் அன்னம் புஜிக்கத்தக்கதன்று; த்வேஷிப்பவனை புஜிப்பிக்கவும் கூடாது. அரசனே! நீ பாண்டவர்களை த்வேஷிக்கிறாய்; பாண்டவர்கள் எனக்கு ப்ராணனன்றோ – என்று பதில் சொல்லியிருக்கக் காண்கையாலே கண்ணன் விது$_3$ரரை சூத்ரனாகவே இசைந்தான் என்பது தேசிகருடைய கருத்து. துர்யோதனன் கேள்விக்கு கண்ணபிரான் திருவுள்ளத்தாலே முக்கியமாகச் சொல்லவேண்டிய பதில் எதுவோ அது அங்கு வெளிவந்திருக்கிறது. துர்யோதனா! நீ என்னுடைய உயிர்நிலையிலே த்வேஷிக்கையாலே, 'யோ விஷ்ணும் ஸததம் த்$_3$வேஷ்டி தம் வித்$_3$யாத்$_3$ அன்த்ய ரேதஸம்' என்கிறபடியே நீ அன்த்ய ரேதஸ்ஸாகையாலே உன்னைப் பரித்யஜித்தோம் என்று இங்ஙனே கண்ணன் கூறியுள்ள பதிலே அவஶ்யமானது; அவன் நெஞ்சிலே பொற்றக்கூடிய பதில் இதுவேயாம். இதைவிட்டு வேறுபதில் சொல்லும்படியான அசாதுர்யம் கண்ணனுக்கு வருமோ! 'ந ஶூத்$_3$ரா ப$_4$க$_3$வத் ப$_4$க்தா விப்ரா: பா$_4$க$_3$வதாஸ் ஸ்ம்ருதா:' இத்யாதிகளாலே ஏற்கனவே ஸித்தமான விஷயத்தை அங்கு கண்ணன் எடுத்துரைக்க வேண்டிய அவஶியமில்லை; ஆகையால் சொல்லவில்லை. அதனால், விது$_3$ரர் ஶூத்ரரேயென்று கண்ணன் இசைந்ததாக ஒருபோதும் ஆகாது.

ஆளவந்தார் சிஷ்யராய் உடையவர்க்கு ஆசார்யரான பெரியநம்பிகள் ஜாதியால் தாழ்ந்த மாறனேரி நம்பிக்கு 'புரோட$_3$ாஶத்தை நாய்கிடாதே கொள்ளும்' என்று ஆளவந்தார் அருளிச்செய்து போனபடியே ப்$_3$ரஹ்மமேத$_4$ ஸம்ஸ்காரம் செய்தார். சாதியாலும் ஆஶ்ரமத்தாலும் உயர்ந்த லோக ஸாரங்க முனிவர் பெரியபெருமாளுக்கு அந்தரங்கராய் வர்த்தித்த திருப்பாணாழ்வாரை தோளிலே சுமந்து சென்றார். சிந்துபூ மகிழும் திருவேங்கடவனுக்கு பணிப்பூவும் கையுமாய் அந்தரங்கத்தில் பரிமாறிய குயவர் 'குறும்பறுத்த நம்பி'யை தொண்டமான் சக்ரவர்த்தி அநுவர்த்தித்தார். பரம வைதிக சிகாமணியான உடையவர் பேரருளாளனுக்கு அந்தரங்கராய், சாதியால் தாழ்ந்த திருக்கச்சிநம்பிகளை ஆசார்யராகக் கொள்ளவும், அவரது உச்சிஷ்ட போஜனம் கொள்ளவும் ஆசைப்பட்டார்.

'ஆழ்வார்கள் அர்ச்சையில் பூஜ்யர்கள்; விபவத்தில் பூஜ்யர்கள் அல்லர்' என்னவொண்ணாது. அந்தணர் தலைவரான மதுரகவிகள் நம்மாழ்வாரை விபவத்தில்

ஆசார்யராகக் கொண்டாரன்றோ. விபவத்தில் அர்ச்சிக்க முடியாமற்போனால், ப்ரதிநிதியாக அர்ச்சையில் விபவ ஸஜாதீயமான விக்ரஹத்தையேற்படுத்தி பூஜிப்பதுமுண்டு (ஏகலவ்யன் விஷயத்திற் போலே). ஆபத் காலத்தில்தான் தாழ்ந்த வர்ணத்தோர் உயர்ந்த வர்ணத்தவர்க்கு உபதேஶிக்கலாம்; அப்படி உபதேஶிக்கும் போது அவர்களிடத்தில் அநுவ்ரஜ்யை (பின் நிற்றல்), சுச்ரூஷை கூடாதென்பது ஶாஸ்த்ரமாயிற்றே யென்னில் - மதுரகவிகள் ஆழ்வாருடைய அதிமானுஷ்ய வ்யாபாரத்தைக் கண்டு அனுவர்த்தித்தும் ஆழ்வார் விஶேஷார்த்தங்கள் அருளிச்செய்ததும் பொருந்தாதிறே. ரிஷிகள் மாம்ஸ வ்யாபாரம் செய்யும் த₄ர்ம வ்யாத₄னிடம் உபதேஶம் கேட்டார்கள். நம்பாடுவான் ஸம்பந்தத்தால் ஒரு ப்₃ராஹ்மணனுக்கு ப்₃ராஹ்மண்யம் நழுவியதால் ஏற்பட்ட ப்ரஹ்மராக்ஷஸத்வம் போயிற்று. உடையவர் 'யாகம்' எனப்படும் திருவாராதனத்தை செய்வதற்கு முன்பு பிள்ளையுறங்காவில்லி தாஸர் ஸ்பர்ஶத்தாலே காயஶுத்தி செய்து கொண்டார். ஆசார்யஶ்ரேஷ்டரான நம்பிள்ளை ப்ரஸாத ஸ்வீகாரத்தின் போது பிள்ளை ஏறுதிருவுடையார் தாஸர் கரஸ்பர்ஶத்தாலே அந்த ஶுத்தி செய்து கொண்டார். பட்டர் வம்ஶத்தவரான நடுவில் திருவீதிப்பிள்ளை பட்டர் தாம் குடிபுகும் வீட்டிற்கு பிள்ளை வானமாமலை தாஸரின் ஸஞ்சாரத்தாலே ஸ்தலஶுத்தி செய்துகொண்டார்.

இவற்றால் சொல்லிற்றாயிற்று - 'உண்ணும் சோறு பருகுநீர் தின்னும் வெற்றிலை யெல்லாம் கண்ணன்' என்ற ஆழ்வாரைப்போலே பகவந்நிஷ்டை யுடையவர்கள் திறத்தில் ஜ்ஞான வ்ருத்தர்களுடைய ஆசார க்ரமத்தை அறியவல்லார்க்கிறே 'இன்ன ஜந்மம் உத்க்ருஷ்டம் இன்ன ஜன்மம் அபக்ருஷ்டம்' என்று ஜந்மத்தின் ஏற்றத்தாழ்வுகள் புரிவது!

விப்ரா: ப₄ாக₃வதா: ஸ்ம்ருதா: - எம்பெருமானிடம் தலைசிறந்த பக்தியை யுடையவர்கள் தாழ்ந்த ஜாதியில் பிறந்தவர்களாயிருந்தாலும் அந்தணர்களே - என்ற ப்ரமாணத்தின்படி அவர்களுக்கு உயர்ந்த ஜாதி வரும் பக்ஷத்தில் அந்தணர்க்குரிய தர்மங்களும் அதாவது உபநயநாதி ஸம்ஸ்காரங்கள், வேதம் ஓதுதல், ஓதுவித்தல், யாகம் செய்தல், செய்வித்தல் முதலானவும் வர ப்ரஸங்கிக்குமே. முநி: யதி: என்று இவர்களைச் சொல்லியிருக்கையாலே அவன் ஸந்யாஸியுமாகி ஸந்யாஸ தர்மத்தையும் ஏற்றுக்கொள்ள வேண்டி வருமே. அப்படியெங்கும் அனுஷ்டானம் காணப்படவில்லையே யென்னில் - எப்படி ராமக்ருஷ்ணாத் யவதாரங்களில் அந்த விக்ரஹம் அப்ராக்ருதமாகையால் ஒரு ஜாதியுமில்லையோ, அதுபோல 'ப்ராதுர்பாவைஸ் ஸுரநர ஸமோ தே₃வதே₃வ: ததீயா ஜாத்யா வ்ருத்தைரபிச குணத: தாத்ருசோ நாத்ர கர்ஹா:' - ஸர்வேஶ்வரன் தேவ மனுஷ்யாதி ஜாதிகளில் அவதரிப்பது போல் அப்படியே அவனுடைய பக்தர்களும் அவதரிக்கிறார்கள். ஜாதி, வ்ருத்த, குணங்களால் இதில் நிந்திக்கத்தக்க தொன்றுமில்லை - என்கிற ப்ரமாணத்தின்படி தாழ்ந்த ஜாதி போகிறதேயொழிய மற்றொரு ஜாதி வருவதில்லை; தாழ்ந்த ஜாதி போய் உயர்ந்தவர்கள் ஆகிறார்கள் என்பதிலேயே

இப்பிரமாணங்கட்கு நோக்கு. ஆக, விப்ரா: பாகவதா: என்றதால் இத்தகைய ஜ்ஞானி பல விஷயங்களில் முனிவர்களையும் ஸந்யாஸிகளையும் ஒத்தவன் என்றும், ஸ விப்ரேந்த்ர: என்றதால் பல தன்மைகளில் அவன் அந்தணர்களைக் காட்டிலும் உயர்ந்தவன் என்றே பொருளாகும். 'சீதனையே தொழுவார் விண்ணுலாரிலும் சீரியரே'. 'பண்டைக்குலத்தைத் தவிர்ந்து–தொண்டக் குலத்திலுள்ளீர்' என்று பெரியாழ்வார் அருளிச்செய்தபடி 'எம்பெருமானுக்கு ஶேஷமாய் பரதந்த்ரமாகவுள்ளது இவ்வாத்ம வஸ்து' என்று பரிபூர்ணமாக வுணர்ந்து அதன்படி நடக்கும் தொண்டக்குலத்தை இவர்கள் அடைகிறார்கள். ஆக, ஆழ்வார்கள், ராமக்ருஷ்ணாத் யவதாரங்கள் போலே, ஸர்வவர்ணாதீதர்களாகையாலே தேஹத்தைப் பற்றி வரும் ஜந்மத்துக்குப் பொருத்தமான உயர்வு தாழ்வு வர இடமில்லை.

பரத்வாஜ ஸம்ஹிதையில், 'ஆசார்யன் நல்ல குலத்தில் பிறந்தவனாக இருக்க வேணும்; ஜ்ஞாநாநுஷ்டானங்களோடு கூடியிருக்கவேணும்; ப்$_3$ராஹ்மணர்களைத் தவிர மற்றவர்கள் ஆசார்யர்களாக இருக்ககூடாது' என்று சொல்லிவிட்டு, 'ப்ரத்யக்ஷிதாத்ம நாதாநாம், நைஷாம் சிந்த்யம் குலாதிகம்' என்று சொல்லியிருப்பதால், ப்ரத்யக்ஷிதாத்ம நாதர்களான ஆழ்வார்கள் ஆசார்யர்களாகயிருப்பது பொருத்தமே. 'பகவத் பக்தா ந ஶூத்ரா:' என்று ஸ்பஷ்டமாக எடுத்துக் கழித்தாப் போலே 'தே$_3$வ ஸுரபி: ந கெ$_3$ள:' என்று எங்கும் சொல்லாமையாலே 'திரு ஶூரபியானாலும் கே$_3$ாத்வம் கழியாதிறே' என்ற வார்த்தையும் அஸ்தானே. ஆளவந்தார் 'தவ த$_3$ாஸ்யை ஸுகை$_2$க ஸங்கிநாம் ப$_4$வநேஷ்வத்ஸ்வபி கீடஜந்ம மே| இதராவஸதே$_2$ஷு மாஸ்மபூத்$_3$ அபிமே ஜந்ம சதுர்முக$_2$ாத்மாநா|| என்று உன்னுடைய தாஸ்யஸுக மொன்றிலுமே ஸங்கத்தையுடையவர்கள் திருமாளிகைகளிலே ஊருவதொரு கீடமாய்ப்பிறக்கும் பிறவியுண்டாகவமையும், அல்லாதாரிடங்களில் ப்ரஹ்மாவாயும் எனக்கு பிறப்பு உண்டாவதல்லவென்று ததீ$_3$யஶேஷத்வத்தை இதரஶேஷத்வ நிவ்ருத்திஸஹிதமாக அபேக்ஷித்தருளி, 'மஹாத்மபி$_4$ர்மாம் அவலோக்யதாம் நய' என்று – உனக்கு நல்லவரான மஹாத்மாக்களாலே கடாக்ஷிக்கப் படுவேனாம்படி பண்ணவேணுமென்று ப்ரார்த்தித்தாரிறே.

விஶ்வாமித்ர ப்ராஹ்மண்யத்துக்கு காரணம் சரு வ்யத்யாஸமே; தபஸ்ஸு காரணமன்று என்றார்கள். ஶ்ரீராமாயணத்தில் விஶ்வாமித்ரர்க்கு ப்$_3$ராஹ்மண்யம் தபஸா ப்ராப்தம் என்று ஸ்பஷ்டமாகவுள்ளது. பாகவதம் நவம ஸ்கந்தத்தில் விஶ்வாமித்ரர்க்கு தபஸாலே ப்$_3$ராஹ்மண்யம் ஏற்பட்டது என்று சொல்லுகிறவிடத்தில் சரு வ்யத்யாஸம் சொல்லியிருப்பதற்கு ப்ரயோஜநம் 'ப்$_3$ராஹ்மண்யத்துக்கு ஹேதுவான தபஸ்ஸுக்கு காரணம்' என்று வீரராகவீயத்தில் சொல்லப்பட்டது. 'தி$_4$க்$_3$ ப$_3$லம் க்ஷத்ரிய ப$_3$லம், ப்$_3$ரஹ்மதேஜோ ப$_3$லம் ப$_3$லம்' என்று தன்னை க்ஷத்ரியனாகவே சொல்லிக்கொண்டே விஶ்வாமித்ரன் 'ப்$_3$ராஹ்மண்ய ப்ராப்திக்குறுப்பாக தவம் புரியப்போகிறேன்' என்று சொல்லிக்கொண்டு தபஸ்ஸிலே ப்ரவர்த்திக்கையாலே. அதுக்கு முன்னே சரு வ்யத்யாஸாதி நிபந்தனமான ப்$_3$ராஹ்மண்யம்

அவனுக்கு உண்டாயிருந்தது என்பது ஸ்ரீராமாயண பாகவதங்களோடு விரோதிக்கும். இந்த சரு வ்யத்யாஸம்* பரசுராமனிடத்திலும் இருப்பதால், பரசுராமனுக்கு க்ஷத்ரியத்வம் ஏற்படும். ப்$_3$ராஹ்மண்யம் இல்லாமலே போகும். இப்படி க்ஷத்ரியத்வம் கொள்ளில் ஸ்ரீராமாயணத்தோடு விரோதிக்கும். ஸஹஸ்ரநாம பாஷ்யத்தில் பட்டர், 'க்ஷத்ரியனான வி*ஶ்*வாமித்ரனை தன் வார்த்தையால் ப்$_3$ராஹ்மணராக்கின வசிஷ்டர்' என்றருளிச் செய்துள்ளார். வி*ஶ்*வாமித்ரர்க்கு ப்$_3$ராஹ்மண்யம் ஜந்மஸித்தமாயிருந்தால் பட்டர் இப்படியருளிச் செய்திருப்பரோ? தபோ மூலகமாக வசிஷ்ட வாக்யத்தாலே ப்$_3$ராஹ்மண்யம் இடையில் வந்ததேயாம். பதஞ்சலி முனிவர் வ்யாகரண ஸூத்ரத்தின் பாஷ்யத்தில், வி*ஶ்*வாமித்ரன் தன் தவ வலிமையினால் தானும், தன் பிதாவும், தன் பிதாமஹனும் ரிஷித்வத்தையடைந்தான் என்று ஸ்பஷ்டமாய் எழுதிவைத்தார். க$_3$ாதி$_4$க்கும் ருசிகர்க்கும் சரு வ்யத்யாஸமானதுண்டோ? ஸ்ரீவிஷ்ணுபுராண வசனங்களைப் பார்த்தாலோ சரு வ்யத்யாஸம் ப்$_3$ராஹ்மண்யாதி ஜாதி ப்ரயோஜகமன்று என்பது தெளிவு. ஆகையிறே மணவாள மாமுனிகளும் ஸ்ரீவசனபூஷண வ்யாக்யானத்தில், 'க்ஷத்ரிய குலத்துதித்த வி*ஶ்*வாமித்ரன் தான்பண்ணின தபோவி*ஶேஷ* மடியாக வசிஷ்ட வாக்யத்தாலே க்ஷத்ரியத்வம் பின்னாட்டாதபடி ப்$_3$ரஹ்மரிஷியானான்' என்றருளிச் செய்தார். ஆக, வி*ஶ்*வாமித்ராதிகளுடைய ப்$_3$ராஹ்மண்யாதிகள் பிறப்பே பிடித்ததன்றிக்கே பின்பு வந்தது நிஸ்ஸந்தேஹம்.

ருஷி வாக்யத்தால் ப்$_3$ராஹ்மண்யத்தை யடைந்த வீதஹவ்ய விஷயம்: அதாவது, வீதஹவ்யன் என்பானொரு க்ஷத்ரியன் பகைவர்க்கு அஞ்சியோடி பரத்வாஜர் முதலிய மஹர்ஷிகளின் திரளிலே புக்கவளவிலே, அந்த பகைவர்கள் ரிஷிகள் திரளிலே வந்து 'இங்கு க்ஷத்ரியன் உளனோ? என்று கேட்டவாறே அந்த மஹரிஷிகள் சரணாகதனை சத்ருக்கள்

---

*காதியின் புத்ரி ஸத்யவதி. ஸத்யவதியை ரிசீக மஹர்ஷி மணந்தார். அப்போது காதியின் மனைவி தனக்கொரு புத்ரன் பிறக்க ஆசீர்வதிக்குமாறு மஹர்ஷியை கேட்டுக்கொள்ள, மஹர்ஷியும் அவள் புத்ரோத்பத்திக்காக க்ஷத்ரிய வீர்யமுள்ள சருவையும் (மந்த்ரிக்கப்பட்ட உஷ்ணமான அந்ந உருண்டை), தன் மனைவி ஸத்யவதி புத்ரோத்பத்திக்காக ப்$_3$ராஹ்மண தேஜஸ் உள்ள சருவையும் கொடுத்தார். ஆனால் ஸத்யவதியின் தாயானவள் ரிஷி தன் பெண்ணுக்கு கொடுத்துள்ள சருவில் அதிக வி*ஶேஷ*மிருக்கும் என்று நினைத்து சருவை மாற்றி உட்கொண்டாள். ஆக ப்$_3$ராஹ்மண சருவினால் பிறக்கவேண்டிய ப்ராஹ்மணன் க்ஷத்ரிய ஸ்த்ரீக்கு பிறக்கும்படியாயிற்று. அவரே வி*ஶ்*வாமித்ரர். க்ஷத்ரிய சருவினால் பிறக்கவேண்டிய க்ஷத்ரியன் ஸத்யவதிக்கு பிறக்கும்படியாயிற்று. அவரே ஜமதக்னி. ஸத்யவதி கர்ப்பிணியாயிருக்கும்போது ரிசீகர் இச்சரு மாறாட்டத்தைப் பற்றியறிவே, தன் மனைவி ஸத்யவதியின் கருவிலுள்ள க்ஷத்ரிய வீர்யமெல்லாம் பிறக்கும் அப்பிள்ளையுடைய பிள்ளைக்கு போகுமாறு அருளினார். ஆக ஸத்யவதிக்குப் பிறந்த ஜமதக்னிக்கு க்ஷத்ரிய குணமுள்ள பரசுராமர் பிறந்தார். ஆக வி*ஶ்*வாமித்ரர், சரு மூலமாக முன்னமேயுள்ள தம் ப்$_3$ராஹ்மண்யம் க்ஷத்ரியப் பிறவியினால் மறைக்கப்பட்டதை, தபோ ப$_3$லத்தினால் ப்ரகா*ஶ*ப்படுத்திக் கொண்டார்; அவரிடமுள்ள க்ஷத்ரியத்வ ப்ராந்தி நீங்கி ப்$_3$ராஹ்மண்யமே ப்ரகா*ஶி*தமாயிற்று என்று தேசிக பக்ஷம்.)

கையிலே காட்டிக்கொடுக்க வொண்ணாது என்று, 'இங்குள்ளோர் எல்லோரும் ப்₃ரஹ்மரிஷிகளே' என்று சொல்லிவிட, அதனாலே வீதஹவ்யனுக்கு க்ஷத்ரியத்வம் கழிந்து ப்₃ராஹ்மண்யம் ப்ராப்தமாயிற்று என்று மஹாபாரதத்தில் பிரஸித்தம். இப்படி அல்ப *ஶ*க்திகர்களான ரிஷிகளின் ஒரு வாக்யத்தாலே, அதிகார ஸம்பத்தும் இல்லாதவொருவனுக்கு ஒரு ஜாதி நிசித்து மற்றொரு ஜாதி ப்ராப்தமாம்போது, ஸர்வ*ஶ*க்தியான ஸர்வே*ஶ்*வரன் தானே திருவுள்ளமுகந்து அதிகார ஸம்பத்து வாய்ந்த அடியார்கள் திறமாக 'ந ஸூத்ரா பகவத் பக்தா: விப்ரா: பாகவதாஸ் ஸ்ம்ருதா:' என்றாப்போலே ஸங்கல்பித்தருளினால், அங்ஙனேயாவதற்கு ஓர் தடையில்லையிறே.

**இனி அடுத்த விஷயம்** – நாராயணைகநிஷ்ட₂ஸ்ய யாயா சேஷ்டா தத₃ர்ச்சநம்| யோயோ ஜல்பஸ் ஸஜபஸ் தத்₃த்₄யாநம் யந்நிரீக்ஷணம்|| தத்₃ பாத₃ாம்ப்வதுலம் தீர்த்தம் தது₃ச்சி₂ஷ்டம் ஸுபாவநம்| தது₃க்திமாத்ரம் மந்த்ராக்₃ர்யம் தத்ஸ்ப்ருஷ்ட மகி₂லம்*ஶு*சி:|| (நாராயணைக நிஷ்டனாயிருக்கிறவனுடைய சேஷ்டைகள் யாவையாவை அது அர்ச்சநமாயிருக்கும், பேச்சு யாவையாவை அது ஜபமாயிருக்கும், பார்வை யாதொன்று அது த்₄யானமாயிருக்கும், அவனுடைய பாதே₃ாத₃கமானது ஒப்பில்லாத தீர்த்த₂ம், அவனுடைய உச்சி₂ஷ்டமானது மிகவும் பாவநமான ப்ரஸாத₃ம், அவனுடைய உக்திமாத்ரம் மந்த்ர *ஶ்*ரேஷ்டமாயிருக்கும், அவன் ஸ்பர்*ஶி*த்ததெல்லாம் பரி*ஶு*த்தமாயிருக்கும்) எனும் விஹகேந்த்ர ஸம்ஹிதா வசனத்தில், 'நாராயணைக நிஷ்ட₂ஸ்ய' என்பதால் நாராயணனையே ப்ராப்யமும் ப்ராபகமும் தாரக போஷக போக்யங்களுமாகக் கொண்டு வாழும் அதிகாரியினுடைய உச்சிஷ்டத்தையே மிகப் பரிசுத்தமானது என்று கூறுகையாலே, அதை வெறும் புகழ்ச்சியாகவோ, சமைத்த பாத்ரத்திலிருக்கும் *ஶே*ஷத்தைக் குறிப்பதாகவோ கொள்ளவேண்டிய அவ*ஶி*யமில்லை. 'வானுளார் அறியலாகா' எனும் பாசுரத்தில் தொண்டரடிப்பொடியாழ்வார் 'போனகம் செய்த சேடம் தருவரேல் புனிதமன்றே' என்று அருளியிருப்பது வெறும் திருநாம ஸங்கீர்த்தனம் பண்ணும் பாகவதர்களைப் பற்றியதன்று. 'மேம்பொருள் போகவிட்டு' எனும் பாசுரத்தில், 'ப்ரக்ருதி ப்ராக்ருதங்கள் த்யாஜ்யம். ஆத்மா எம்பெருமானுக்கே பரதந்த்ரம். ப்ராப்யமாவது கைங்கர்யம். அதுவும் பரார்த்தம் – *ஶே*ஷிக்கே உகப்பாகப் பண்ணுமது – என்ற ஜ்ஞானத்துடன், உபாயாந்தரங்களில் அபிமானத்தைப் பற்றறவிட்டு, ஈ*ஶ்*வரன் கையில் ரக்ஷிக்கும் பொறுப்பை ஒப்படைத்து, பகவதநுபவமே யாத்ரையாய் ஸ்வரக்ஷணத்தில் அந்வயமின்றிக்கே யிருக்கும் த்₃வயநிஷ்டர்களை 'வாழும் சோம்பர்' என்று சொல்லி இத்தகைய தலைசிறந்த ப்ரபந்நர்களின் ப்ரபாவத்தையே ப்ரபந்த *ஶே*ஷத்திலும் அருளிச் செய்கிறார். மேல் பாசுரங்களில், 'எவ்வளவு தாழ்ந்த ஜன்மத்தில் பிறந்தவர்களாயினும், 'மேம்பொருள்' பாசுரத்தில் சொன்ன ஜ்ஞானத்தில் ஊன்றி நிற்போர் திருத்துழாயோபாதி ஈ*ஶ்*வரனால் *ஶி*ரஸா வஹிக்கப்படுவர் என்றும், இந்த ஜ்ஞானத்தில்

நிஷ்டையுடையோர் ஆசாரக் குறைவு உடையவர்களானாலும் அதனால் ஒரு குறையில்லை என்றும், இப்படி ஜன்ம வ்ருத்தங்களால் வரும் குறையில்லாமையே யன்று; (தொட்டவுடன் இரும்பைப் பொன்னாக்கும் ஸ்பர்ஶவேதி எனும் குளிகையைப் போல்) அவருடைய உச்சிஷ்டம் ஸ்பர்ஶவேதியாய் உண்டவர்களை அப்போதே பரிஶுத்தப்படுத்தும் என்கிறார். இப்பாட்டில், 'போனகம் செய்த சேடம்' என்பதற்கு 'அமுதுசெய்து கைவாங்கின கலத்தில்' – அதாவது உண்ட இலையில் உள்ள ப்ரஸாதம் என்று வ்யாக்யானம் காணப்படுகிறது. 'சமைத்த பாத்ரத்திலுள்ள ப்ரஸாதம்' என்று அர்த்தம் கொள்ளவேண்டிய அவசியமில்லை. மேற் பாசுரங்களில் இத்தகைய ஜ்ஞானமுடையவர்கள் ஸர்வேஶ்வரனோபாதி பூஜ்யர் என்றும், அவர்களுக்கு உபதேஶம் செய்யலாம்; அவர்களிடத்து உபதேஶம் பெறலாம் என்று சொல்லி இந்த ஜ்ஞானமுடையவர்களை ஜன்ம வ்ருத்தாதிகளால் தாழ நினைப்போர் சண்டாளர்களாவர் என்கிறார். இவற்றிலிருந்து 'வானுளார் அறியலாகா' எனும் பாசுரம் வெறும் திருநாம ஸங்கீர்த்தனம் செய்யும் பாகவதர்களைப் பற்றியதன்று; தலைசிறந்த ப்ரபந்நர்களைப் பற்றியதே என்றும் இத்தகைய ஜ்ஞானிகளுடைய உச்சிஷ்டம் (எச்சில்) ஏற்கத்தக்கதே என்றும் தெரிகிறது. மன்னியசீர் மாறன்கலை உணவாகப் பெற்றோர் அமுதுசெய்த சேடமுண்ட நாய்க்கும் மோக்ஷம் கிட்டிய ஐதிஹ்யம் இங்கு அநுஸந்தேயம்.

**பஞ்சம ஜாதியைப் பற்றியும் கூறுவோம்.** ஜாதிகள் நான்கே, ஐந்தாவதாக பஞ்சம ஜாதி என்றொன்று கிடையாது என்பர் சிலர். அது தவறு. யஜுர் வேதத்திலேயே 'யா தே ஜநேஷு பஞ்சஸு' என்றுள்ளது. ஆயிரம் வருடங்களுக்கு முன்பே வேதபாஷ்யம் செய்த மஹாசார்யர்கள் இங்கு ஜநஶப்தத்தை ஜாதி வாசகமாகக் கொண்டு 'பஞ்சஸு ஜனேஷு – பஞ்சஸு ஜாதிஷு' என்றே அர்த்தம் எழுதியுள்ளார்கள். ஶாஸ்த்ரம் கிடக்கட்டும். வீடுமனை கிரய பத்திரங்களை பதிவு செய்யும்போது ஜாதியைக் குறிப்பிடும்போது தீண்டா வகுப்பினரை பஞ்சம ஜாதியென்றே குறிப்பிடுவதைப் பார்த்திருக்கிறோம். பஞ்சமர் என்கிற சொல் இழிவானது அன்று. ஒருவனுக்கு ஐந்து பிள்ளைகள் பிறந்தால், 'இவன் ஐந்தாமவன்' என்று சொல்வது எப்படி இழிவு அன்றோ, அப்படியேதான் பஞ்சமர் என்று வழங்குவதும். தீண்டா வகுப்பினர் இழிவான முறையில் ஒருவராலும் வழங்கப்படவில்லை. அவர்களுக்கு ஹரிஜனம் என்றோ தலித் என்றோ பெயர் சூட்டுவதால் எந்த பெருமையும் இல்லை. பகவானிடம் பக்தியுள்ளவர்கள் எந்த ஜாதியைச் சேர்ந்திருந்தாலும் பெருமையுண்டு. இதற்கும் ஜாதிக்கும் ஸம்பந்தமில்லை. உயர்ந்த ஜாதியில் பிறந்தோரும் பகவத்பக்தியற்றிருந்தால் இகழ்வு அடையலாம். கீழ் ஜாதியில் பிறந்தோரும் பக்திமான்களாய் புகழ் பெறலாம். ஆக, தீண்டாதவர்கள், சண்டாளர்கள், பறையர்கள், பஞ்சமர்கள் எனும் பெயர்கள் இழிவான பெயர்களல்ல. செட்டியாரை 'செட்டி' என்கிறோம். நாயுடுவை 'நாயுடு' என்கிறோம். ஶாஸ்த்ரங்களாலும் அநாதி வ்யவஹாரங்களாலும் ஏற்பட்டுள்ள பெயர்கள்

உள்ளதையுள்ளபடி சொல்லுவனவேயன்றி ஒருகாலும் இழிவுரையாகாது. உண்மையில் மூடனான ஒருவனை நாம் மூடனென்றால் அது உலகில் இழிவுரையையாகிறது. ஏனெனில் மூடனென்று ஒரு ஜாதி கிடையாது. அது பழிப்புச் சொல்லாகவே உலகில் வழங்கப்படுகிறது; அதனால் இழிவுரையாகிறது. பஞ்சமன் பறையன் தீண்டாதவன் என்பவை ஜாதியைக் குறிக்கும் சொற்களாகையால் இழிவான சொற்களல்ல. சண்டாள ஜாதியில் பிறவாதவனை கோபத்தில் 'சண்டாளா' என்றால் அது இழிவுரையாகும். பஞ்சம ஜாதியில், சண்டாள ஜாதியில், தீண்டா வகுப்பில் தோன்றியவர்களை முறையே பஞ்சமவர், சண்டாளர், தீண்டாதார் என்று குறிப்பது இழிவுரை ஆகாது. இவ்வகுப்பினர் இன்றைக்கும் 'ஐயா! நான் பஞ்சமன்' என்று சொல்லிக்கொண்டு தாங்களே விலகிச் செல்வதைக் காண்கிறோம். ஆயிரத்தில் பத்து பேராவது இப்படி இருக்கவே செய்கிறார்கள். ப்ராஸங்கிமான இது நிற்க.)

**கீ$_3$தை தொடர்கிறது.** இதுவரையில், நான்கு வர்ணத்தவர்களும் அவரவர்க்குரிய வர்ணா*ஶ்*ரம தர்மங்களை கடைபிடிக்க வேணுமென்றும், அவைகளே பரமபுருஷனை யடைவதற்கு ஸாதனமாய் அமையும் என்றும் காட்டப்பட்டது. இனி, இந்த வர்ணா*ஶ்*ரம தர்மங்களே பல நியமங்களேடு கூடிய ப்ரதான தர்மமாய் (அங்கி$_4$யாய்) இருந்துகொண்டு கர்மயோகம் என்று பெயர் பெறுகிறது என்றும், அக்கர்மயோகம் ஜ்ஞானயோகம் செய்யத் தகுதியுள்ளவர்களாலும் கைவிடத் தகாதது என்றும் முதல் ஷட்கத்தில் சொன்னதையே நினைவுபடுத்துகிறான்.

***ஶ்*ரேயாந் ஸ்வத$_4$ர்மோ விகு$_3$ண: பரத$_4$ர்மாத் ஸ்வநுஷ்டி$_2$தாத்|**
**ஸ்வப$_4$ாவ நியதம் கர்ம குர்வந் நாப்நோதி கில்பி$_3$ஷம்|| (18-47)**

(இயல்வாகவே பழக்கப்பட்ட கர்மயோகம் குறையுடையதாயினும், நன்றாக (சில காலம்) அநுஷ்டிக்கப்பட்ட ஜ்ஞானயோகத்தைக் காட்டிலும் சிறந்தது. தனக்கு ஸ்வாபாவிகமான கர்மத்தை யநுஷ்டிப்பவன் பாபபலனான ஸம்ஸாரத்தை அடையமாட்டான்.)

இங்கு ஸ்வதர்மம் என்று கர்மயோகமும், பரதர்மமென்று ஜ்ஞானயோகமும் குறிப்பிடப்படுகிறது. ஸ்வதர்மமான கர்மயோகம் பழக்கப்பட்டதும், செய்ய எளியதுமான தர்மம். பரதர்மமான ஜ்ஞானயோகம் இந்த்ரியங்களை அடக்கிச் செய்யவேண்டிய தொன்றாகையால் பழகாததும் கடினமானதுமாம். 'வேம்பின் புழு வேம்பன்றி உண்ணாது' என்கிறபடி அந்தந்த மரங்களில் காணப்படும் புழு பூச்சிகள் அந்தந்த மரங்களில் விளைந்தவைகளையே ஆகாரமாகக் கொள்வதுபோல், சரீரத்தோடு கூடியவன் தன் வர்ணத்திற்கு பொருந்திய கர்மத்தைச் செய்வதே இயல்வானதாகும். அத்தகைய கர்மம் நழுவுவதற்கு வாய்ப்பில்லயாகையால், அவன் விநா*ஶ*மடைவதில்லை.

நெருப்பை புகை சூழ்ந்திருப்பதுபோல், கர்ம ஜ்ஞான யோகங்களிரண்டிலும் தோஷம் உண்டு. கர்ம யோகத்தில் உடல் வருத்தமுண்டு; ஜ்ஞான யோகத்தில் உடல் வருத்தமில்லையாகிலும் இந்த்ரியங்களை அடக்கிச் செய்ய வேண்டிய ஶ்ரமம் உண்டு. அர்ஜுநா! உன் ஸ்வதர்மத்தை யநுஷ்டிப்பது இயற்கையானது; நழுவ இடமில்லாதது. கர்மயோகத்தால் த்$_4$யாந ஸித்$_3$தி$_4$யடைந்தவன் எவ்வாறு ஆத்மாநுபவத்தை யடையலாம் என்பதைச் சொல்கிறேன் கேள். ஶ்லோகத்தில், ப்$_3$ரஹ்ம ஶப்தம் இங்கு ஆத்மாவையே குறிக்கிறது (ஆத்மதர்ஶனம் பக்தியோகத்திற்கு காரணமானகையால்). (18. 48-50). பரிசுத்த ஜீவாத்மாவை அடையும் வழியாவது - ஜீவனின் உண்மையான ஸ்வரூபத்தை அறியவேணும்; விஷயங்களில் வாஸனை, ருசியை விட்டு அவைகளில் விருப்பு வெறுப்பு அற்று இருக்கவேணும்; ஏகாந்த ஸ்தலத்தில் இருப்பவனாய், மனோவாக்காயங்களை த்யானத்தில் ஈடுபடுத்த வேணும்; ஆத்மா தவிர்ந்த விஷயங்களில் வைராக்யம் உடையவனாய் தேஹாத்மாபிமானமின்றி, தான், தனது என்ற அஹங்கார மமகாரங்களின்றி, காம க்ரோதங்களைத் துறந்து சாந்தியுடன் ஆத்ம த்யானத்தில் ஈடுபடுபவன் ஆத்மாவை உள்ளபடி அநுபவிக்கிறான் (18. 51-53). இங்கு சொல்லப்படும் ஆத்மாநுபவம் பக்தியை விளைவிப்பதாக அடுத்த ஶ்லோகத்தில் கூறுகையாலே, இது இவ்வுலகில் பக்திக்கு அங்கமாக அமைந்த ஆத்மஸாக்ஷாத்காரமேயாகும். ப்ரக்ருதி மண்டலத்திற்கு வெளியே அடையப்படும் கைவல்ய மோக்ஷமன்று.

ஆத்ம ஸ்வரூபத்தைக் கண்டவன், மனதில் கலக்கங்கள் ஏதுமின்றி, ப்ராக்ருத பொருள் இழப்புகளில் மனவருத்தம் அடையாதவனாய், பற்றற்று இருப்பதால் ப$_3$ந்து$_4$க்களின் இழப்புகளில் வருத்தமின்றி, மத்$_3$ப$_4$க்திம் லப$_4$தே பராம் - என் விஷயமான பக்தியை அடைகிறான் (18-54). கொண்ட பெண்டிர், மக்கள், உற்றார், பெருஞ்செல்வம் ஆகியவற்றில் பற்றின்றியிருக்கையால் அவற்றின் இழப்பால் இவன் வருந்துவதில்லை. ரத்தின பர்வதத்தில் ஏறவிரும்புமவன் வைக்கோல் போர் மீது பற்று வைப்பனோ என்று கருத்து. இத்தகைய நிலை விளைந்தவனுக்கு தன் அருளாலே தன்னிடம் பரபக்தி விளையும் என்று காட்டுகிறான். அடுத்து, கீழே சொன்ன பரபக்தியாலே என்னை உள்ளபடி அறிகையாகிற பரஜ்ஞானத்தைப் பெறுகிறான் என்றும் அதற்குப்பின் அந்த பரபக்தி முற்றிய நிலையான பரமபக்தியான முக்திநிலையில் என்னோடு ஸாயுஜ்யம் பெறுகிறான் என்றும் கூறுகிறான்.

ஸ்வயம் ப்ரயோஜன பக்திநிஷ்டன் பரமபுருஷனை உள்ளபடி அறிகையாவது - அவனது ஸ்வரூப நிரூபக குணங்களான ஸத்யத்வம் (விகாரமற்றிருக்கை), ஜ்ஞாநத்வம் (ஸ்வயம் ப்ரகாஶமாயிருத்தல்), அநந்தத்வம் (அளவற்றதாயிருக்கை), ஆனந்தத்வம் (ஆனந்தமயனாயிருக்கை), அமலத்வம் (தாழ்வுகள் அற்றவனாயிருக்கை) முதலானவற்றை த்யானிப்பதாம். இப்படி த்யானிக்கவே அவன் ப$_4$க$_3$வத$_3$த்யந்த பாரதந்த்ர்ய ஜ்ஞானத்தை

யுடையவனாய் பக்வமடைகிறான். பரபக்தியாலுண்டாகும் இந்த தத்வஜ்ஞானமே பரஜ்ஞானம் எனப்படுகிறது. இதனால் எம்பெருமானே ப்ராப்யம், அவனே ப்ராபகம் என்றுணர்ந்து விட்டபடியால் இந்த ஜ்ஞானம் உண்டான ஜன்மத்திலேயே இவனுக்கு மோக்ஷம் ஸித்திக்கும். உபாஸகனுக்கு பரமபக்தியின் முற்றிய நிலையான பரஜ்ஞானம் ஆழ்வாருக்கு 'மயர்வற மதிநலம் அருளினன்' என்கிறபடி எம்பெருமானுடைய நிர்ஹேதுக க்ருபையால் உண்டாயிற்று. சுருங்கச் சொல்லில், ஶாஸ்த்ரம் முதலியவற்றால் அறிந்த ப $_4$ க $_3$ வத் விஷயத்தை நேரே காண விரும்புவது **பரபக்தி**; அந்த ப $_4$ க $_3$ வத்விஷயத்தை தெளிவாக மனதில் கண்டநுபவிப்பது **பரஜ்ஞானம்**. அந்த ப $_4$ க $_3$ வத்விஷயத்தை பிரியில் தரியாமை **பரமபக்தி**. ஆழ்வாருக்கு 'சூழ்விசும் பணிமுகில்' எனும் திருவாய்மொழிக்கு முன்வரை பரபக்தி நிலை; 'சூழ்விசும் பணிமுகில்' பரஜ்ஞான நிலை; 'முனியே நான்முகனே' எனும் திருவாய்மொழியில் பரமபக்தி நிலை என்று பெரியோர் அருளிச்செய்வர்.

இதுவரை, அவரவர் வர்ணாஶ்ரமங்களுக்குரிய நித்ய நைமித்திக கர்மங்களை, ப $_2$ ல ஸங்க $_3$ கர்த்ருத்வ த்யாகத்தோடு பகவதாரதனமாக அநுஷ்டிப்பவர்கள் காலக்ரமத்தில் பரபக்தி, பரஜ்ஞான பரமபக்தி நிலைகளை யடைந்து என்னைப் பெறுவர் என்றான். இதற்குமேல், 'இழந்த ராஜ்யத்தைப் பெறுவதற்காக நான் செய்யும் காம்ய கர்மத்தினால் மோக்ஷம் ஸித்திக்குமோ? என்று அர்ஜுனனுக்கு ஐயம் விளைய, காம்யகர்மங்களையும் முற்கூறிய மூன்று வகை பரித்யாகத்தோடு அநுஷ்டிக்கவே மோக்ஷபலனை அடையலாம் என்கிறான். 'மத் ப்ரஸாத $_3$ ாத்' - பக்தியினாலே அடைவதாகக் கூறியபோதிலும், என் அருளாலே (நிர்ஹேதுக க்ருபையாலே) மோக்ஷம் கிட்டும் என்கிறான் (18-55, 56). பரமசேதநன் தவிர வேறொன்று ரக்ஷகமன்று. ஜீயர் ஸந்யஸித்தருளுகிறவன்று த $_3$ ண்ட த $_4$ ாரண மந்த்ரம் 'ஸகாமே கோபாய' - நீ எனக்கு மித்ரமாய் எல்லா ரக்ஷணங்களையும் பண்ணவேணும் - என்றிருப்பதைக் கேட்டு ஒரு ஸர்வஜ்ஞன் ஸர்வஶக்தி பரமசேதநன் இருக்க, இவ்வார்த்தை சொல்லும்படியாக இவ்வாஶ்ரம ப்ராப்திதானென்' என்றருளிச்செய்தார்.

**ஈஶ்வரஸ் ஸர்வபூ $_4$ தாநாம் ஹ்ருத் $_3$ தே $_3$ ஶே அர்ஜுந திஷ்ட $_2$ தி||**
**ப் $_4$ ராமயந் ஸர்வபூ $_4$ தாநி யந்த்ராரூட $_4$ ாநி மாயயா|| (18-61)**

(அர்ஜுநா! ஈஶ்வரன், ஶரீரமாகிய யந்த்ரத்தில் ஏறிய ஸர்வ பூதங்களையும் ப்ரக்ருதியைக் கொண்டு சுழற்றிய வண்ணம் ஸகல ப்ராணிகளுடைய ஹ்ருதயத்திலும் இருக்கிறான்)

கீழ் ஶ்லோகங்களில், 'அர்ஜுநா! என் ஆணையை மீறி நீ போர் செய்யாவிடில் நாஶமடைவாய் என்று நிந்தித்தவன், எந்த போரை உன் அறிவின்மையால் வேண்டாம் என்கிறாயோ அதை நீ செய்தே தீருவாய் என்றான். அதற்கு காரணத்தைச் சொல்கிறான் இந்த ஶ்லோகத்தால். எல்லா உயிர்களும் ஸர்வேஶ்வரனான என்னால் பூர்வ கர்மங்களை

யநுஸரித்து *ஶ*ரீரத்தின் வழியில் செல்லும்படி நியமிக்கப்பட்டுள்ளார்கள். ஈ*ஶ்*வர *ஶ*ப்தம் படர்க்கையில் சொல்லியிருந்த போதும் இங்கு இப்பதம் அனைவரையும் நியமித்துப் போரும் வாஸுதேவ க்ருஷ்ணனையே காட்டும். ஸர்வ பூதாநாம் ஹ்ருத்தே*ஶே* *திஷ்டதி* - எல்லோருடைய ஹ்ருதயத்திலும் அந்தர்யாமியாய் நிற்பவன். யந்த்ரா ரூட$_4$ாநி மாயயா - எனக்கு கட்டுப்பட்ட மாயை எனும் ப்ரக்ருதியாகிற யந்த்ரத்தில் ஏறி நிற்கும் எல்லா உயிர்களையும். ப்$_4$ராமயந் *திஷ்டதி* - ஸத்வாதி குணமயமான ப்ரக்ருதியின் வழியே செல்லும்படி மயக்கிக் கொண்டு நிற்கிறான். அர்ஜுநா! நீ போர் புரியப் போவது என்னுடைய நியமனத்தாலேயே என்று கருத்து.

**தமேவ *ஶ*ரணம் க$_3$ச்ச$_2$ ஸர்வப$_4$ாவேந ப$_4$ாரத|**
**தத் ப்ரஸாத$_3$ாத் பராம் *ஶ*ாந்திம் ஸ்த$_2$ாநம் ப்ராப்ஸ்யஸி *ஶ*ாஸ்வதம்|| (18-62)**

(அர்ஜுநா! அந்த பரமாத்வாவை எல்லா வகையாலும் *ஶ*ரணமடைவாய்; அவனருளாலே கர்மப$_3$ந்த$_4$ங்களிலிருந்து விடுதலையும், நிலையான பரமபதத்தையும் அடைவாய்.)

கீழ்ச்சொன்ன ப்ரக்ருதியின் கட்டிலிருந்து விடுதலை அடையும் உபாயத்தை இதில் சொல்கிறான். நம்மால் நம் முயற்சியால் ஸத்யஸங்கல்பன் கட்டிய கட்டை அவிழ்க்கப்போகாது; அவனையே கால்கட்டி அவிழ்த்துக் கொள்ள வேணும் என்றபடி.

அர்ஜுநா! இதுவரையில் சிறந்த பல தர்மங்கள் என்னால் உனக்கு சொல்லப்பட்டன. அவையனைத்தையும் ஆராய்ந்து பார்த்து, 'யதே$_2$ச்ச$_2$ஸி தத$_2$ா குரு' - நீ எதைச் செய்ய விரும்புகிறாயோ, அதைச் செய் என்றான் (18-63). '*ஶி*ஷ்யஸ்தேஹம் *ஶ*ாதி$_4$ மாம் த்வாம் ப்ரபந்நம்' (2-7) - எனக்கு எது நன்மை பயக்குமோ அதை எனக்குச் சொல்லு; நான் உனக்கு *ஶி*ஷ்யன். உன்னைச் சரணடைந்த எனக்கு அறிவுரை கூறு - என்ற உனக்கு பதினெட்டு அத்யாயங்களில் முமுக்ஷுக்கள் ரஹஸ்யமாக அறியவேண்டிய ஜ்ஞானமனைத்தும் சொல்லப்பட்டது. கர்ம ஜ்ஞான பக்தி யோகங்களைப் பற்றியும், ஆத்ம பரமாத்மாக்களைப் பற்றிய உண்மையறிவும் உபதே*ஶி*க்கப்பட்டது. ஸ்வதந்த்ர ப்ரபத்தி, அங்க$_3$ ப்ரபத்தி, அவதார ரஹஸ்ய ஜ்ஞானம், புருஷோத்தம வித்யை இவை யாவும் சொல்லப்பட்டன. நீ க்ஷத்ரியர்க்குரிய த$_4$நுர் வேதம், அர்த்த$_2$ *ஶ*ாஸ்த்ரம், நீதி *ஶ*ாஸ்த்ரம் முதலான லௌகிக *ஶ*ாஸ்த்ரங்களை துரோணர் முதலான பல ஆசார்யர்களிடம் கேட்டிருப்பாய். ஆனால் நான் சொன்னவை யாவும் மோக்ஷோபாயங்கள். அவற்றை ஆராய்ந்து எதை நீ விரும்புகிறாயோ அதைச் செய் என்றான். அதாவது, ஜீவனுக்கு தனக்குரிய மோக்ஷோபாயத்தை தேர்ந்தெடுக்கும் ஸ்வாதந்த்ர்யத்தை கொடுக்கிறான்.

**மந்மநா ப$_4$வ மத்$_3$ப$_4$க்தோ மத்$_3$யாஜீ மாம் நமஸ்குரு|**
**மாமேவைஷ்யஸி ஸத்யம் தே ப்ரதிஜாநே ப்ரியோऽஸி மே|| (18-65)**

(என் பக்கலிலே நெஞ்சை வை; என்னை நேசி; என்னை ஆராதிப்பாய்; என்னை நமஸ்கரி. இப்படி அநுஷ்டிப்பதன் மூலம் என்னையே அடைவாய். மெய்யே உனக்கு ப்ரதிஜ்ஞை பண்ணுகிறேன். எனக்கு நீ ப்ரியனன்றோ.)

'தமேவ *ஶ*ரணம் க$_3$ச்ச$_2$' என்று கீழே *ஶ*ரணாகதியை விதி$_4$த்தான். ஆனால் ப்ரவ்ருத்திபரனான அர்ஜுநனுக்கு அதில் ருசியில்லை. ருசியிருந்தால் 'கரிஷ்யே வசநம் தவ' (நீ சொன்னபடி செய்கிறேன்) என்ற வார்த்தை உடனே வந்திருக்கும். ஸ்வார்த்த ப்ரவ்ருத்திகளிலேயே ஈடுபடும் அர்ஜுநனுக்கு அத்யந்த பாரதந்த்ர்ய நிஷ்டர்களுக்கே ருசிக்கும் பரிபூர்ண *ஶ*ரணாகதியை ஏற்றுக்கொள்ள இயலவில்லை. ஆகையால் அவனுக்குத் தக்க உபாயம் பக்தியோகமே என்று நிர்ணயித்து அதனை (பரபக்தியையே) மீண்டும் விதி$_4$க்கிறான் இந்த *ஶ்*லோகத்தால்.

மந்மநா பவ – வேத$_3$நம், உபாஸநம், த்$_4$யாநம், த்$_4$ருவா ஸ்ம்ருதி என்றெல்லாம் சொல்லப்படும் த$_3$ர்*ஶ*னஸமாநாகாரமான (நேரே காண்பது போன்று) நினைவுத் தொடராம் (எண்ணெய்த் தாரை போல் இடைவிடாது) தியானமே இங்கு விதி$_4$க்கப்படுகிறது. மத்பக்த: – என்னிடம் அன்பு செலுத்துகிறவனாகையால் பக்தியை என்னிடம் செய். மத்யாஜீ – எனது திருவாராதனத்திலேயே ஈடுபட்டிருப்பாய். மாம் நமஸ் குரு – மனோ வாக் காயங்களால் என்னை நமஸ்கரித்திருப்பதில் உறுதி கொள்வாய். ஆத்மாத்மீயங்கள் எம்பெருமானுடையதே என்றநுஸந்திப்பதே வணங்கியிருத்தல். மாமேவ ஏஷ்யஸி – இப்படி பக்தியை ஸாதனமாக அநுஷ்டித்தாயானால் நீ என்னையே அடைவாய். ஸத்யம் தே ப்ரதிஜாநே – இது ஸத்யமென்று உனக்கு ப்ரதிஜ்ஞை செய்கிறேன். த்$_3$யௌ: பதேத் ப்ருதி$_2$வீ *ஶீ*ர்யேத் ஹிமவாந் ஸகலீ ப$_4$வேத்| *ஶு*ஷ்யேத் தோய நிதி$_4$: க்ருஷ்ணே நமே மோக$_4$ம் வசோ ப$_4$வேத்|| (பாரதம்) – த்ரௌபதியே! வானம் இடிந்து விழலாம்; பூமியும் பிளக்கலாம்; ஹிமயம் பொடியாகலாம்; கடல் வற்றிப் போகலாம்; ஆனால் என் வார்த்தை ஒரு போதும் பொய்க்காது – என்று த்ரௌபதிக்கு கண்ணன் செய்த ஸத்யம் இங்கு அநுஸந்தேயம். ப்ரியோऽஸிமே – எனக்கு நீ இனியவனன்றோ. ஞானி எனக்கு இனியவன் என்று முன்பே சொன்னேனே. அர்ஜுநன் ஞானியாகி விட்டானோ வென்னில் – தான் நியமித்தபடி பக்தியோகத்தை யநுஷ்டித்து ஞானியாகி விடுவான் என்று கண்ணன் கருத்தாகக் கொள்வது.

**க்ருஷ்ண சரம *ஶ்*லோகம்:**

**ஸர்வத$_4$ர்மாந் பரித்யஜ்ய மாமேகம் *ஶ*ரணம் வ்ரஜ|**
**அஹம் த்வா ஸர்வபாபே$_4$ப்யோ மோக்ஷயிஷ்யாமி மா *ஶு*ச:|| (18–66)**

(எல்லா ஸாத$_4$நங்களையும் நன்கு விட்டு என்னை ஒருவனையே உபாயமாக நம்பு; நான் உன்னை எல்லாப் பாபங்களிலிருந்தும் விடுவிக்கிறேன், வருந்தாதே.)

அர்ஜுநனுக்கு கீழ்ச் சுலோகத்தில் ப₄க்தியோகம் விதி₄க்கப்பட்டது. அதற்கு அங்கமாக ஶரணாகதி விதி₄க்கப்படுகிறது இங்கு. பக்தியோகத்தை யநுஷ்டித்தால் நீ என்னை அடைவாய் என்றான். உன்னை அடைவதற்கு தடையாக கணக்கற்ற பாபங்கள் உள்ளனவே. அவற்றை எப்படி போக்கடிப்பது என்று அர்ஜுநன் வருத்தமடைய, 'எல்லா மோக்ஷ ஸாதனங்களையும் எனக்கு ஆராதனமாக அன்புடன் அநுஷ்டித்துக் கொண்டே முன்கூறியபடி மூன்று பரித்யாகங்களுடன் அவற்றைச் செய்பவனாகவும், அவற்றால் ஆராதிக்கப்படுபவனாகவும், அடையத்தக்கவனாகவும் கொண்டு பாபங்கள் போவதற்கு என்னையே உபாயமாகப் பற்றினாயானால் உன்னை என்னையடைவதற்கு தடையாயுள்ள எல்லாப் பாபங்களிலிருந்தும் விடுவிக்கிறேன். நீ ஶோகியாதே' என்கிறான்.

ஸர்வ த₄ர்மாந் - கர்மஜ்ஞான பக்தியோகம் எனப்பட்ட எல்லா உபாயங்களையும். பரித்யஜ்ய - ஸாதனங்களை யநுஷ்டித்துக் கொண்டே, 'இந்தக் கர்மத்தின் பலன் என்னுடையதல்ல' என்று அநுஸந்திப்பதாகிற ப₂ல த்யாகத்துடனும், 'இந்த கர்மம் என்னுடையதல்ல' என்று அநுஸந்திக்கையாகிற கர்ம த்யாகத்துடனும், 'இதைச் செய்பவன் நானல்ல' என்று அநுஸந்திக்கையாகிற கர்த்ருத்வ த்யாகத்தோடும் நன்கு விட்டவனாய்;

மாம் ஏகம் - செய்பவன், ஆராதிக்கப்படுபவன், அடையத்தக்கவன் என்று சொல்லப்பட்ட என்னை ஒருவனையே, ஶரணம் வ்ரஜ - என்னையடைவதில் விரோதியான பாபங்களைப் போக்குவதற்கு என்னையே உபாயமாக நம்பு; ப₂ல ஸங்க₃ கர்த்தருத்வங்களை விடுவதிறே ஸாத்விகமான த்யாக₃மாவது. அஹம் த்வா ஸர்வ பாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி - ஶாஸ்த்ரங்களில் 'செய்யாதே' என்றதைச் செய்த பாபங்கள், 'செய்' என்றதைச் செய்யாத பாபங்கள் - ஸகல பாபங்களிலிருந்தும்; அஹம் - ஸர்வஜ்ஞன், ஸர்வஶக்தன், பரம காருணிகன் முதலான கல்யாண குணங்களையுடைய நான்; த்வா - என் ஆணைப்படி மோக்ஷ ஸாதனங்களை அநுஷ்டித்த உன்னை,

ஸர்வ பாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி - ஸர்வபாப ஶப்தம் எம்பெருமானை அடைவதற்கு தடையாயுள்ள பாபங்களைக் குறித்தாலும், இது பக்திநிஷ்டனைப் பற்றிய ப்ரகரணமாகையால் ப்ராரப்த கர்மங்கள் தவிர்ந்த மற்ற ஸஞ்சித கர்மங்களையே சொல்கிறது என்ன வேணும் (பக்திநிஷ்டன் ப்ராரப்த கர்மங்களை யநுபவித்த பின்பே மோக்ஷமடைவதாக ஶாஸ்த்ரங்கள் சொல்லுகையால்). உடனே ஸாதாநுஷ்டானத்தால் உகந்த என் அருளாலே உன்னுடைய ஸ்வரூப ஆவிர்பாவத்தோடு என்னையடைவதாகிற மோக்ஷம் தன்னடையே உண்டாகும். மா ஶுச: - வருந்தாதே என்றது அர்ஜுநனுக்கு தொடக்கத்தில் தர்மத்தில் அதர்ம புத்தியாலே ஏற்பட்ட ஶோகமன்று; அது முதல் ஷட்கத்திலேயே நீக்கப்பட்டது. சற்றுமுன் பகவானை அடைவதற்கு தடையாயுள்ள எல்லா பாபங்களையும் போக்கடித்தால்தானே அவனையடையமுடியும் என்ற வருத்தத்தையே சொல்கிறது.

இப்படிப் பொருள் கொள்வதில் சில அஸ்வாரஸ்யங்கள் உள்ளன. ப்ரதானமாக, ஸர்வ தர்மாந் பரித்யஜ்ய என்றவிடத்தில் கர்ம ஸ்வரூபத்யாகமே வெளிப்படையாகத் தெரியும்போது, அதை த்ரிவித$_4$ பரித்யாகமாகக்கொள்ள வேண்டிய குறை உள்ளது. அதனால் சில தர்மங்களின் ஸ்வரூபத்யாகத்தையே கூறும் **இரண்டாவது நிர்வாஹமாவது** ஸர்வ தர்மாந் பரித்யஜ்ய – பக்தியோகம் தொடங்குவதற்கு தடையாயுள்ள பாபங்களை போக்கடிப்பதற்கு ப்ராயச்சித்தமாகச் செய்யவேண்டிய தர்மங்களை அடியோடு விட்டு என்னைச் சரணமடைவதால் தடையாயுள்ள பாபங்கள் அனைத்தும் நீங்கும்; நீ பக்தியோகத்தை தொடங்கலாம் என்கிறான். இதனால் ப$_4$க$_3$வச்ச$_2$ரணாகதியே முற்கூறிய பாபங்களுக்கு ப்ராயச்சித்தமாகிறது என்றதாயிற்று. ப்ராயச்சித்த கர்மங்களையே விடச்சொல்வதால் நித்ய நைமித்திக கர்மங்களை விடாமல் அநுஷ்டித்தேயாக வேணும். மாம் ஏகம் – பரம சேதனனாய், ஸித்தமாய், ஸர்வலோக ஶரண்யனாய், வாத்ஸல்யம் மிக்கவனாயுள்ள என்னை.

ஶரணம் வ்ரஜ – உபாயமாகப் பற்றுவாய். வ்ரஜ என்பதற்கு ‘அடைவாய்’ என்பதே பொருளாயினும், க$_3$த்யர்த்$_2$ா: பு$_4$த்$_3$த்$_4$யர்த்த$_3$ா: (க$_3$தியைச் சொல்லும் பதங்கள் மனத்தின் க$_3$தியான புத்தியையும் சொல்லும்) எனும் ந்யாயப்படி (என்னையே உபாயமாக) உறுதி கொள்வாய் என்று பொருள்படும். அஹம் த்வா – ஸர்வஜ்ஞனான ஸர்வஶக்தியான நான், அல்பஜ்ஞனான அல்பஶக்தியுடைய உன்னை. ஸர்வ பாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி மாஶுச: – நீ ப்ரபத்தியை அநுஷ்டித்தால் பாபங்கள் பலவகைப் பட்டவையாய், அதற்கான ப்ராயச்சித்த தர்மங்களும் அநேகமாய், வாழும் காலமும் குறுகியதாய் இருப்பதைக் கண்டு வருந்த வேண்டாம். (நித்ய நைமித்திக கர்மங்களிலும் மூப்பின் காரணமாகவோ நோய் காரணமாகவோ அநுஷ்டிக்க அரியவற்றைக் கைவிடலாம் என்று ஶாஸ்த்ரம் அநுமதிக்கிறது. ஶாஸ்திரமே ஶக்தியுடையவன் விஷயத்தில்தான் செயல்படும். ஶக்தியுடையவன் முக்$_2$ய கல்பத்தையும், அது இல்லாவன் அநுகல்பத்தையும் அநுஷ்டிப்பது. மூன்று முறை ப்ரணவத்தை ஓதவேண்டும் அல்லது அழிவற்றவனான விஷ்ணுவை நினைக்கவேண்டும் என்றவிடத்தில் ப்ரணவத்தை மூன்றுமுறை ஓதுவதற்குப் பதிலாக விஷ்ணு ஸ்மரணம் விதி$_4$க்கப்பட்டது. ஏழு வகை ஸ்னானங்களில் நதியில் மூழ்கிக் குளிப்பதாகிற முக்ய ஸ்னானம் செய்யயிலாதவர்களுக்கு விஷ்ணு ஸ்மரணமே அப்பலனை யளிப்பதாகக் கூறப்பட்டது. அதுபோல, குறுகிய காலமே வாழ்கையாலே கணக்கற்ற ப்ராயச்சித்தங்களைச் செய்யயிலாதவர்களுக்கு ப$_4$க$_3$வத் ப்ரபத்தி விதி$_4$க்கப்படுகிறது என்று கண்டு கொள்வது.)

ஆக, முதல் நிர்வாஹத்தில் ப$_2$ல கர்ம கர்த்ருத்வ த்யாகத்துடன் கர்ம ஜ்ஞான பக்திகளைச் செய் என்பது பொருள். இரண்டாவது யோஜனையில், பக்திக்குத் தடையான உன் பாபங்கள் நீங்க, நீ செய்யவேண்டிய ப்ராயச்சித்த தர்மங்களை விட்டு என்னை ஒருவனையே பற்று என்பது பொருள்.

'மந்மநா ப₄வ' எனும் 65-ம் ஶ்லோகத்தில் பக்தியோகத்தை அர்ஜுநனுக்கு வி₄தித்தான். இதைக் கேட்டவுடன், செயற்கரியதும் கண்ணனால் உபதேஶிக்கப்பட்ட அத்யந்த பாரதந்த்ரியத்திற்கு முரண்பட்டதுமான பக்தியோகத்தில் நம்மை ஏவுகிறானே. இந்த பக்தியோகத்தையும் அதற்கு அங்கமான கர்மஜ்ஞான யோகங்களையும் எப்படி அநுஷ்டிப்பது எனும் பயம் அர்ஜுநனுக்கு ஏற்பட்டதைக் கண்ட கண்ணபிரான், அதன் பிறகே சரம ஶ்லோகத்தில் 'நீ செயற்கரியவை என்றும் ஸ்வரூபவிருத்₃த₄மானவை என்றும் பயப்படும் எல்லா உபாயங்களையும் வாஸனையோடு விட்டு, என்னை ஒருவனையே உபாயமாகப் பற்றுவாய். நான் உன்னை என்னையடைய தடையாயிருக்கும் எல்லா பாபங்களிலிருந்தும் விடுவிக்கிறேன், வருந்தாதே' என்று சரமமான உபாயமான தன்னைக் காட்டுகிறான். இந்த ஸ்வதந்த்ர ப்ரபத்தியாகிற முக்₂யார்த்தத்தை திருக்கோஷ்டியூர் நம்பியின் நியமனத்தைப் பின்பற்றி எம்பெருமானார் ப்ரதிபக்ஷிகளும் காணக்கூடிய கீ₃தாப₄ாஷ்யத்தில் வெளியிடலாகாது என்று சரம ஶ்லோகத்திற்கு அங்க₃ ப்ரபத்திரமான அர்த்தத்தை வெளியிட்டு, முக்₂யார்த்தத்தை அந்தரங்கர்களுக்கே உபதேஶிக்கத்தக்க க₃த்₃யத்ரயத்தில் வெளியிட்டார். அஷ்டஶ்லோகீ, பரந்த ரஹஸ்யம், முமுக்ஷுப்படி வ்யாக்யானம் எனும் **ரஹஸ்ய க்ரந்தங்களை யநுஸரித்து சரம ஶ்லோகத்திற்கான விவரணத்தை அடியேனுடைய முதல் நூலான உபதேஶ ஶாஸ்த்ரத்தில் கண்டு கொள்வது.**

**இத₃ம் தே நாதபஸ்காய நாப₄க்தாய கத₃ாசந|**
**ந சாஶுஶ்ரூஷவே வாச்யம் ந ச மாம் யோऽப்யஸூயதி|| (18-67)**

(பரமரஹஸ்யமாக என்னால் சொல்லப்பட்ட இந்த ஶாஸ்த்ரம் உன்னாலே தவம் செய்யாதவனுக்கு சொல்லப்படலாகாது; என்னிடமும் உன்னிடமும் பக்தியில்லாதவனுக்கு ஒருபோதும் சொல்லப்படலாகாது; எவன் என்னிடம் பொறாமை கொள்கிறானோ அவனுக்கும் சொல்லப்படலாகாது.)

க்ருஷ்ணன் வளர்ந்தருளும் காலத்தில் எல்லோரும் பீஷ்ம, துரோணாசார்யர்களையே ஞானவான்களாக கருதி, அவர்களையே ஆசார்யர்களாகப் பற்றினார்கள். க்ருஷ்ணனை எவரும் ஆசார்யனாகப் பற்றவில்லை. இது அவனுக்குப் பெருங்குறையாகவே இருந்தது. 'ஶிஷ்யஸ் தேऽஹம் ஶாதி₄ மாம் த்வாம் ப்ரபந்நம்' என்று அர்ஜுநன் க்ருஷ்ணனைப் பற்றியவுடனே ஆஹா! நமக்கொரு ஶிஷ்யன் கிடைத்து விட்டான்; நாமும் ஓர் ஆசார்யனாக ஆகிவிட்டோம் என்று பெருமிதத்தில் அரிய பெரிய ஶாஸ்த்ரார்த்தங்களை யெல்லாம் கீ₃தோபதேஶம் மூலம் வாரியிறைத்து விட்டான். ஆனால் பரமரஹஸ்யமான சரம ஶ்லோகத்தைச் சொன்னபின்பு 'என்ன காரியம் செய்துவிட்டோம்' என்று பதறி 'நீ இவ்வர்த்தத்தை அநதிகாரிகளுக்கு சொல்லாதே' என்று நியமிக்கிறான். அர்ஜுநா! நான் உனக்குச் சொன்ன இந்த பரம குஹ்யமான ஶாஸ்த்ரத்தை அதபஸ்கனுக்குச் சொல்லாதே,

அப4க்தனுக்குச் சொல்லாதே, அஶுஶ்ரூஷுவுக்குச் சொல்லாதே, என்னிடத்தில் அஸூயை யுள்ளவனுக்குச் சொல்லாதேயென்று கட்டளையிடுகிறான். இங்கு 'ந ச மாம் யோ(அ)ப்4யஸூயதி' என்ற விடத்திற்கு நம் ஸ்வாமி பா4ஷ்யம் 'மத்3ஸ்வரூபே மதை3ஶ்வர்யே மத்3கு3ணேஷு ச கீர்த்திதேஷு யோ தோ3ஷமாவிஷ்கரோதி ந தஸ்மை வாச்யம்' – என்னுடைய ஸ்வரூபத்தையும் என்னுடைய ஐஶ்வர்யத்தையும் என்னுடைய குணங்களையும் ஒருவர் எடுத்துரைத்தால், அவற்றில் தோ3ஷாவிஷ்கரணம் செய்பவனே என்னிடத்தில் அஸூயை கொண்டவன்; அவனுக்கு நீ ஒன்றும் சொல்லாதே என்று கண்ணன் கட்டளையிடுவதாக ஸ்வாமி பா4ஷ்யம் செய்தருள்கிறார். பகவத் குணங்களை எத்தனை உயர்த்தியாகச் சொன்னாலும் அத்தனையும் ஒக்கும்! ஒக்கும்!! என்றிராதே அவற்றில் அஸம்பாவிதத்வத்தை உபபாதிக்கிறோம் கேண்மினென்று, தங்களுக்குண்டான பாண்டித்யத்தை யெல்லாம் பகவத் குணங்களை இல்லை செய்வதிலும் இறக்குவதிலுமே உபயோகப்படுத்துகிறவர்கள் பகவத் கீதைக்கு வெகு தூரத்திலே நிற்க வேண்டுமென்பது ஸ்வாமி திருவுள்ளமாகக் காண்கிறது.

**ய இத3ம் பரமம் குஹ்யம் மத்3ப4க்தேஷ் வ4பித4ாஸ்யதி|**
**ப4க்திம் மயி பராம் க்ருத்வா மாமேவைஷ்யதி அஸம்ஶய:|| (18-68)**

(மேலான ரஹஸ்யமான இந்த ஶாஸ்த்ரத்தை என்னுடைய பக்தர்களிடம் எவன் எடுத்துச் சொல்கிறானோ அவனுக்கு என்னிடம் பரமபக்தியுண்டாகி என்னையே அடைவான்; இதில் ஐயமில்லை.)

மத் பக்தேஷு - இந்த கீதையை அர்த்தத்துடன் கேட்பதற்கு என் பக்தர்களே அதிகாரிகள். அவர்களுக்கு எவன் இந்த ஶாஸ்த்ரத்தை பொருளுடன் சொல்கிறானோ அவனுக்கு பிறவி மாமாயக்கூத்து (ஸம்ஸாரமாகிற மஹா நாடகம்) முடிவுக்கு வந்து மோக்ஷப2லமே ஸித்திக்கும். அவனைவிட எனக்கு இனியது செய்பவனோ, எனக்கு ப்ரியனோ வேறொருவன் எக்காலத்திலும் இல்லை. எவன் இந்த உயர்ந்த தர்மமான நம் இருவரின் ஸம்வாத ரூபமான சாஸ்த்ரத்தை பாராயணம் செய்கிறானோ, அவன் சிறந்த ஜ்ஞானத்தினால் என்னை ஆராதித்தவனாகிறான். என்னிடம் அஸூயை இல்லாமல் எவன் இந்த ஶாஸ்திரத்தை கேட்கிறானோ அவன், பக்திக்கு தடையான பாபங்களிலிருந்து விடுபட்டு, என் பக்தர்களில் ஒருவனாகிறான் (18. 69-71)

அர்ஜுநனின் மனதை யறிந்தவனாயினும் தான் பண்ணின உபதேஶம் பயனுடையதாயிற்று என்று அவன் வாயாலே கேட்க விரும்பி 'அஜ்ஞாந ஸம்மோஹ: ப்ரநஷ்டஸ் தே த4நஞ்ஜய' - உன் மயக்கம் நீங்கிற்றா? என்று கேட்கிறான் (18-72).

**நஷ்டோ மோஹ: ஸ்ம்ருதிர் லப்3த4ா த்வத் ப்ரஸாதாந் மயாச்யுத|**
**ஸ்தி2தோ(அ)ஸ்மி க3த ஸந்தே3ஹ: கரிஷ்யே வசநம் தவ|| (18-73)**

(க்ருஷ்ணா! உன் அருளினால் என் அறியாமை நீங்கி எனக்கு உண்மையறிவு உண்டாயிற்று. ஐயமெல்லாம் தீர்ந்தது. எனக்குரிய க்ஷத்ரியத் தன்மை எழுச்சியுற்றது. உன் சொற்படி செய்கிறேன் – போர் புரிவேன்)

கரிஷ்யே வசநம் தவ – அர்ஜுநன்தான் எம்பெருமானைப் பெற்றானோ? என்று நம்பிள்ளை சீயரைக் கேட்க, 'உமக்கு அதுகொண்டு கார்யமென்? இது சொன்னவன் ஸர்வஸாதாரணனாகில் (எல்லோர்க்கும் பொதுவானவனாகில்), ப$_4$க$_3$வத்ப$_4$க்தியென்னுமிடம் நிஶ்சிதமாகில் தந்தாமுடைய கர்மாநுகூலமாகவும் ருச்யநுகூலமாகவும் பெறுகிறார்கள்; பெற்றவர்களை ஆராய்ந்துபார்த்து அத்தோலேயன்றே நாம் பற்றப்பார்க்கிறது' என்றருளிச் செய்தார். ஈடு 7-5-11.

த்ருதராஷ்ட்ர மஹாராஜனே! இந்த ஆஶ்சர்யமான க்ருஷ்ணார்ஜுந ஸம்வாதத்தை நான் நேரில் கேட்டு இதுவரையில் உமக்குச் சொன்னேன். வ்யாஸரின் அருளால் இந்த மேலான ரஹஸ்யத்தை ஸகல கல்யாண குணங்களுக்குக்கிருப்பிடமான க்ருஷ்ணன் தானே சொல்ல நான் நேரே கேட்டேன். ராஜந்! இந்த புண்ணியமான கேஶவார்ஜுந ஸம்பாஷணையை நினைத்து நினைத்து நான் பேரானந்தமடைகிறேன். கண்ணனுடைய விஸ்வரூபத்தை நினைந்து நினைந்து வியந்து மகிழ்கிறேன் (18. 74-77).

**யத்ர யோகே$_3$ஶ்வர: க்ருஷ்ணோ யத்ர பார்த்தே$_2$ா த$_4$நுர்தர:|**
**தத்ரஶ்ரீர் விஜயோபூ$_4$திர் த்$_4$ருவா நீதிர் மதிர் மம|| (18-78)**

(சேதநாசேதன ஸ்வரூப ப்ரவ்ருத்தியை நடத்திச் செல்லும் க்ருஷ்ணன் எந்தப் பக்கத்திலிருக்கிறானோ, வில்லாளியான அர்ஜுநன் தன் காண்டீபத்தையேந்தி எந்தப் பக்கத்திலிருக்கிறானோ அந்தப் பக்கத்தில்தான் விஜயஶ்ரீ விளங்குகிறாள். அங்குதான் நீதியும் கொற்றமும் வெற்றியும் ஆளும் திறமையும் நிலைபெற்றிருக்கும் என்பது எனது திடமான கருத்து) – ஸஞ்ஜயன் வார்த்தை

'ஆபாத ப்ரதீதியில் கர்மம், ஜ்ஞானம், பக்தி முதலான ஸானதங்களை யநுஷ்டித்து சேதனன் மோக்ஷமடைய வேணும் என்று இந்த கீ$_3$தா ஶாஸ்த்ரம் சொல்லுவதுபோலத் தோன்றினாலும், ஆங்காங்கு பக்தியானது ஸ்வயம்ப்ரயோஜன பக்தியாகப் பரிணமிக்கவேணுமென்று கூறியிருக்கையாலும், உபாஸக ஜ்ஞானியானவன் 'ப்ராப்யம், ப்ராபகம் முதலான எல்லாம் வாஸுதேவனே' என்று எம்பெருமானைச் சரணமடையும் மஹாத்மாவான ஜ்ஞானியாகப் பரிணமிக்கவேணுமென்று கூறியிருக்கையாலும் ஸ்வயம்ப்ரயோஜன பக்திநிஷ்டனாய், பரார்த்த கைங்கர்யநிஷ்டனாய், கண்ணனுக்கே கிடைத்தற்கரியவனான பரமைகாந்தியாகச் சேதநன் உருவாகவேணும் எனும் குறிக்கோளையுடையது இந்த கீ$_3$தா ஶாஸ்த்ரம்; கர்மயோகாதி உபாயங்கள் அனைத்தும்

இத்தகைய பரமைகாந்திகளை உருவாக்கும் வழிகளே' – என்று தாத்பர்யம் கூறப்பட்டு கீ$_3$தார்த்த$_2$ ஸங்க்ரஹம் நிறைவடைகிறது.

**எம்பெருமானார் தர்ஶநம்:** எம்பெருமானார் அருளிச்செய்த ஒன்பது க்ரந்தங்களாவன – வேதார்த்த ஸங்க்ரஹம், ஸ்ரீபாஷ்யம், வேதாந்த தீபம், வேதாந்த ஸாரம், ஸ்ரீகீதா பாஷ்யம், ஶரணாகதி கத்யம், ஸ்ரீரங்க கத்யம், ஸ்ரீவைகுண்ட கத்யம், நித்யம் எனும் பகவதாராதன க்ரமம். இவற்றில் முதல் ஐந்து க்ரந்தங்களும் வேதபாஹ்ய குத்ருஷ்டி மதவாதங்களை கண்டிக்கவே அருளிச்செய்யப்பட்டவை. அவைகளில் தத்வ ஹித புருஷார்த்தங்களை ஓரளவு அறியலாமாயினும் அவைகளின் யாதாத்ம்யத்தை அறியயியலா. எம்பெருமானார் தாம் அருளிச்செய்த ஸ்ரீபாஷ்யாதி க்ரங்களின் அர்த்தங்களே தமக்கு அபிமதமென்று தம்மைச் சேர்ந்தவர்கள் நினைத்து விடுவார்களோ என்றஞ்சி, தமக்கும் தம்மைத்தஞ்சமெனப் பற்றினவர்களுக்கும் தனக்கபிமதமான அர்த்தமும் அநுஷ்டானமும் ப்ரபத்தியும் பகவதாராதனமுமே யென்பதனை கத்யத்ரயத்தாலும் நித்ய க்ரந்தத்தாலும் காட்டியருளினார். ஆகவே உண்மையில் நமக்கு கத்யத்ரயமும் நித்ய க்ரந்தமுமே தஞ்சமாகிறது. நம்பெருமாள் 'எம்பெருமானார் தர்ஶநம்' என்று நாமநிர்த்தேஶம் பண்ணி ஸ்தாபித்தருளியது ப்ரபத்தி மார்க்கமே.

ஶரணாகதி கத்யத்தில் த்வயார்த்தத்தை சரமஶ்லோகத்துடன் சேர்த்து தம் அநுஷ்டாநத்தால் மிகத்தெளிவாக வெளியிடுகிறார் எம்பெருமானார். சரமஶ்லோகத்தில் கண்ணன் இதரவுபாயங்களை அறவே விட்டு, தன்னைப் பற்றுதலையும் உபாயமென்று நினையாமல், தன்னையே உபாயமாகப் பற்றச் சொல்கிறானாகையால் சரமஶ்லோகம் த்வயத்துக்கு விவரணமாகிறது.

ஶரணாகதி கத்யத்தில் முதலில் பெரிய பிராட்டியாரைப் புருஷகாரமாகப் பற்றி, புருஷார்த்தமாகிற பகவத்கைங்கர்யத்தில் ருசியையும் எம்பெருமானாகிற உபாயத்தில் அத்யவஸாயத்தையும் ப்ரார்த்திக்கிறார். பெரியபிராட்டியாரும் 'அப்படியே யாகட்டும்; நீர் பண்ணும் ஶரணாகதியால் உம்முடைய ஸம்பந்தி ஸம்பந்திகளுக்கும் நீர் பெற்றபேறு கிடைக்கட்டும்' என்று வரமருளினார். (கீழே அஸ்து மே என்று அபேக்ஷித்தவர்க்கு அஸ்து தே என்கிற இவ்வளவு அனுக்ரஹமே போதுமாயிருக்க, அதற்கு மேலும் 'தயைவ ஸர்வம் ஸம்பத்ஸ்யதே' என்று பிராட்டி அநுக்ரஹித்ததின் திருவுள்ளத்தை ஶ்ருதப்ரகாஶிகா பட்டர் விவரித்தருள்கிறார் – ஸ்வஸம்பந்தி ஸம்பந்தி நிஸ்தரணமபி ஸர்வசப்தாபிப்ரேதம்' என்று – ப$_2$லனானது உம்மளவிலே சுவறிப்போமதன்று; பரம்பரயா உம்முடைய குடல்துடங்கு உடையாரெல்லாரிடத்திலும் இது பலித்ததாகக் கடவது என்று அநுக்ரஹித்தபடி. இத்தகைய வரம் எம்பெருமானுடைய திருமுகத்தில் நின்றுமே மேலே வெளிவந்ததாக ஸம்ப்ரதாயம். அதனை வேதாந்தவாசிரியர் ந்யாஸதிலகத்தில் 'உக்த்யா தநஞ்ஜய விபீஷண லக்ஷ்யயா

தே' எனும் ஶ்லோகத்தில் ஸுஸ்பஷ்டமாக அருளிச்செய்துள்ளார். ஸ்ரீஶுத்$_3$த$_4$ஸத்வம் தொட்டாசார்யர் அருளிச்செய்த யதிராஜ விம்ஶதி 'காலத்ரேயேடபி' (18வது) ஶ்லோக வ்யாக்யானத்தில் 'ஸாச த்வயைவ கமலா ரமணேடர்த்திதா யத் க்ஷேமஸ் ஸ ஏவ ஹி யதீந்த்$_3$ர ப$_4$வச்ச்$_2$ரிதாநாம்' என்றவிடத்து காணும் பங்க்தியாவது - 'ஏவகாரத்தாலே இன்றொருவன் அறிவுடையனாய் ப்ரார்த்திக்கவேண்டாதபடி ஸ்வாஶ்ரித ஸகலசேதந விஷயமாக தேவரீராலே ப்ரார்த்திக்கப்பட்டது என்கிறது. இத்தால் எம்பெருமானார்தாமே ஸ்வஸம்ப$_3$ந்தி$_4$ ஸர்வசேதந விஷயமாக ப்ரபத்தி செய்தருளுகையாலே தனித்தொருவர் ப்ரபத்தி பண்ணவேண்டா வென்கிறது. இவ்வர்த்தம் எம்பெருமானார் தம் சரமதஶையிலே பெரியபெருமாள் திருமுன்பே சென்று ஸேவித்து நிற்க, அவ்வளவிலே பெரிய பெருமாளும் அருளப்பாடிட்டு 'ஒன்று சொல்வான் போலேயிருந்ததாயீ' என்ன, 'நாயன்தே! அடியேன் ஸம்பந்திஸம்பந்திகளும் தேவரீர் க்ஷமைக்கு விஷயராய் உஜ்ஜீவிக்கும்படி க்ருபை செய்தருளவேணும்' என்ன, பெருமாளும் அப்படியே ஆகக்கடவதென்று அநுக்ரஹித்தாரென்று ப்ரஸித்தமிறே'.) ஆக, எம்பெருமானார் இவ்வாறு பிராட்டி வசநத்தாலும் நம்பெருமாளின் ப்ரதி வசநத்தாலும் தம்ஸம்பந்தம் பெற்றவர்களுக்கே மோக்ஷமென்பதை நிர்ணயித்து, தமக்குப் பிற்பட்டவர்களும் தம்ஸம்பந்தம் பெறவேணுமென்று தம் சிஷ்யர்களில் எழுபத்துநாலு ஸிம்ஹாஸனாதிபதிகளை நியமித்து, அவர்கள் பரம்பரையில் சிஷ்ய பரம்பரையும் தம்ஸம்பந்தம் பெற்று உஜ்ஜீவிக்க வழிவகுத்தருளினார். ஆகவே எம்பெருமானாரே 'உத்தாரக ஆசார்யர்' என்றும் மற்றையோர் 'உபகாரக ஆசார்யர்' என்றும் நம் பூர்வர்கள் அருளிச் செய்தார்கள். பஞ்ச ஸம்ஸ்காரத்தில் எம்பெருமானார் ஸம்பந்தம் பெற்று 'ராமாநுஜ தாஸன்' எனும் தாஸ்ய நாமம் பெறுவதே முக்யமாகிறது.

பெரிய கத்யத்தில், 5வது சூர்ணை முதல் 9வது சூர்ணைமுடிய த்வயத்தின் பூர்வ கண்டார்த்தமும், 10வது சூர்ணைமுதல் 16வது சூர்ணைமுடிய விரோதிநிவ்ருத்தி பூர்வக கைங்கர்ய ப்ரார்த்தனை செய்யப்பட்டு உத்தரகண்டார்த்தமும் விவரிக்கப்படுகிறது. 17வது சூர்ணைமுதல் 23ம் சூர்ணைமுடிய நம்பெருமாள் எம்பெருமானார்க்கு பதிலுரைக்கிறார். 'உமக்கு எவ்வித தகுதியில்லாமற் போனாலும், த்வயத்தை உச்சரித்ததின் காரணமாகவே கேவலம் என் தயையாலே உம்முடைய குறைகள் யாவும் நீங்கி என் திருவடிகளில் ஸகல அடிமைகளையும் செய்யப்பெறுவீர்; யாவதாயுஷம் த்வயார்த்தாநுஸந்தானம் செய்துகொண்டு ஸ்ரீரங்கத்திலேயே ஸுகித்திரும்; ஶரீராவஸாநத்தில் நம் பரமபதமடைந்து நித்ய கிங்கரராவீர்; இதில் ஸம்ஶயம் வேண்டாம்' என்றருளிச்செய்தார்.

ஸ்ரீரங்க கத்யத்தில், தம் தோஷங்களை அறிவித்துக்கொண்டு ஸ்ரீரங்கநாதனையே உபாயமாகப் பற்றி கைங்கர்யத்தை ப்ரார்த்தித்தார். ஸ்ரீவைகுண்ட கத்யத்தில், இங்கிருக்கும் நாள் அர்ச்சிராதிகதி சிந்தனம் செய்துகொண்டு இருக்கக் கடவன் என்று பரோபதேஶம்

பண்ணி கத்யத்ரயத்தை முடித்தார். (அடியேனது இந்த 'கீதாஸாரம்' எனும் நூலாகட்டும், மற்றும் ஜகத்காரணன் (ஸ்ரீபாஷ்ய ஸாரம்), விஶிஷ்டாத்வைதமும் மதாந்தரங்களும் எனும் நூல்களாகட்டும் ஸ்ரீபாஷ்யாதி ஐந்து க்ரந்தங்களில் எம்பெருமானார் அருளிச்செய்த தத்வார்த்தங்களை தற்காலத்து இளைய தலைமுறையினர் ஐயம் திரிபற அறியவேணும் எனும் நோக்கிலேயே எழுதப்பட்டவை.) எம்பெருமானார் ஸம்ப்ரதாயஸ்தர்கள் அநுஷ்டிக்க வேண்டியது ப்ரபத்தியேயன்றி வேறு உபாயங்களன்று; பெறும் பேறும் பரார்த்த கைங்கர்யமேயன்றி ஸ்வார்த்த கைங்கர்யமன்று. எம்பெருமானையே உபாயோபேயமாகப் பற்றியிருக்கும் ப்ரபத்திநிஷ்டர் 'பரமைகாந்தி' எனப்படுவர். அவர்கள் ப்ரதிதினம் அநுஷ்டிக்க வேண்டியது நித்ய க்ரந்தத்தில் காட்டியருளிய பகவதாராதனமேயாம். தற்காலத்தில் நாம் க்ருஹார்ச்சையில் இக்க்ரந்தத்தின்படி திருவாராதனம் ஸமர்ப்பிப்பது கடினமாகையால் மணவாளமாமுநிகள் அருளிச்செய்த 'ஜீயர்படி'யையே திருவாராதன க்ரமமாகக் கொண்டுள்ளோம். ஆக, எம்பெருமானார் தர்ஶநத்தில் பிறப்பைப் பெற்றிருக்கும் ஸ்ரீவைஷ்ணவர்களாகிய நாம் ஸ்வாமி எம்பெருமானார் கத்யத்ரயத்தாலும் நித்ய க்ரந்தத்தாலும் ப்ரபந்நர்களான நமக்கு காட்டியருளிய அநுஷ்டானத்தையே கைக்கொண்டு அதன்படி யொழுகவேண்டியதே அவஶ்யமாகிறது.

ப்ரபந்நனுக்கிருக்க வேண்டிய ஏழு லக்ஷணங்கள் (பட்டர் அருளிச்செய்தபடி) – தேஹாத்மாபிமாந நிவ்ருத்தி, ஸ்வாதந்த்ர்ய நிவ்ருத்தி, அந்யஶேஷத்வ நிவ்ருத்தி, ஸ்வயத்ந நிவ்ருத்தி, அபந்துஷு பந்துத்வப்ரதிபத்தி நிவ்ருத்தி, விஷய நிவ்ருத்தி, நமஸ்ஸின் அர்த்தமான பாகவத ஶேஷத்வம்.

**கீ$_3$தா ஶாஸ்த்ரமித$_3$ம் புண்யம் ய: படே$_2$த் ப்ரயத: புமாந்|**
**விஷ்ணோ: பதம் அவாப்நோதி ப$_4$ய ஶோகாதி$_3$ வர்ஜித:||**

(இந்த புண்ணியமான கீ$_3$தா ஶாஸ்த்ரத்தை எந்த மனிதன் முயற்சி செய்து படிக்கிறானோ அவன் பயம், ஶோகம் ஆகியவை நீங்கி விஷ்ணுவின் பதத்தையடைகிறான்.)

ஸகலோபநிஷத் ஸாரமான க்ருஷ்ணார்ஜுந ஸம்வாத ரூபமான கீதா ஶாஸ்த்ரம் நிறைவுபெற்றது.

ஸ்ரீக்ருஷ்ணார்ப்பணமஸ்து

ஆழ்வார் திருவடிகளே ஶரணம்.
ஆளவந்தார் திருவடிகளே ஶரணம்.
எம்பெருமானார் திருவடிகளே ஶரணம்.
ஜீயர் திருவடிகளே ஶரணம்.

* * * * *



**மலநிர்மோசநம் பும்ஸாம் ஜலஸ்நாநம் தி$_3$நே தி$_3$நே|**
**ஸக்ருத்$_3$ கீ$_3$தாம்ப$_4$ஸி ஸ்நாநம் ஸம்ஸார மல நாஶநம்||**

(மனிதர்கள் தினந்தோறும் நீரில் குளிப்பதால் உடல் அழுக்கு அகற்றப்படுகிறது. ஒரு தடவை கீதை எனும் நீரில் குளிப்பதால் ஸம்ஸாரமெனும் மாசு நீங்குகிறது.)

ஸ்ரீ:



ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# ஆயன் அன்றோதிய வாக்கு

(ஸ்ரீகீ$_3$தா ஸாரம்)



க்ருஷ்ண ப்ரணாமோ ந புநர்ப்ப$_4$வாய
ஸ்ரீ பார்த்தஸாரதி - திருவல்லிக்கேணி

ஆசிரியர் :

தேசூர் நல்லான் சக்ரவர்த்தி **ஸ்ரீவத்ஸாங்கன்**

**பிலவ ஸ்ரீ ஐப்பசி மீ ஹஸ்தம் - நவம்பர் 03, 2021 - புதன்கிழமை**